மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயர் பாடியருளிய

# திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும்



உரை :

புலியூர்க் கேசிகன்



சாரதா பதிப்பகம்

மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயர்

பாடியருளிய

# திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும்

உரை :

புலியூர்க் கேசிகன்


சாரதா பதிப்பகம்

சென்னை - 600 014.

☎ 044-2811 4402 / 95000 17274

நூல் கிடைக்குமிடம் :

**கௌரா ஏஜென்ஸீஸ்**

10/14, தோப்பு வேங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.
☎ : 044-2844 3791 / 94440 82232

விலை : ரூ. 50.00

* முதற் பதிப்பு : ஜூன் 2009

* © உரிமை : பதிப்பகத்திற்கே

* பதிப்பாசிரியர் : எஸ். கௌமாரீஸ்வரி M.A., M.L.I.S.,

* நூலின் பெயர் : திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும்

* பக்கங்கள் : 200

* ஒளி அச்சு : ஜெய் ஜீனா

* வெளியீடு : சாரதா பதிப்பகம்
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை - 14.

* அச்சிட்டோர் : மஞ்சு ஆப்செட் பிரண்டர்ஸ்,
திருவல்லிக்கேணி, சென்னை - 5.

CODE : 783

# வாழ்க்கைக் குறிப்பு

| | | |
|---|---|---|
| பெயர் | : | புலியூர்க்கேசிகன் |
| தோற்றம் | : | 16.10.1923 |
| மறைவு | : | 17.4.1992 |
| இயற்பெயர் | : | க. சொக்கலிங்கன் |
| தந்தைபெயர் | : | கந்தசாமி பிள்ளை |
| தாயார் | : | மகாலட்சுமி அம்மையார் |
| குடும்பம் | : | துணைவி - சொ. சுந்தரத்தம்மை |
| | : | மகன் - திரு. சொ. கந்தவேலன் |
| | : | மகள் - திருமதி. நீலச்செல்வி (எ) மகாலட்சுமி - மகாதேவன் |
| | : | மகள் - செல்வி. சொ. கலைச்செல்வி (தமிழ் வளர்ச்சித்துறை) |
| | : | மகள் - திருமதி. மலர்ச்செல்வி ஹரிகுமார் |
| ஊர் | : | நெல்லையைச் சேர்ந்த புலியூர்க் குறிச்சி |
| கல்வி | : | ஆங்கிலப் பிரிவு - இண்டர், இந்துக் கல்லூரி, நெல்லை |
| பணிகள் | : | ஆசிரியர் வடுகச்சி மலைப்பள்ளி 3 ஆண்டுகள்.<br>மேலாளர் சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம் 10 ஆண்டுகள். பாரி நிலையம், 2 ஆண்டுகள் அருணா பப்ளிகேஷன்ஸ், பல ஆண்டுகள் மாருதி பதிப்பகம். |
| தமிழார்வம் | : | தமிழார்வம் காரணமாக டாக்டர் மு.வ., தமிழ்க்கடல் மறைமலையடிகள், தமிழ்த் தென்றல் திரு.வி.க., கவிமணி போன்ற தமிழறிஞர்களுடன் தொடர்பு கொண்டு தமிழறிவை வளப்படுத்தியமை. |

| | | |
|---|---|---|
| தமிழ்த் தொண்டு | : | சங்க இலக்கியங்கள் அனைத்துக்கும் எளிய உரை எழுதி மலிவுப் பதிப்பில் விற்று இலக்கியங்களை அனைவர் மத்தியிலும் எளிமைப்படுத்திப் புரிய வைத்தமை. மனோ சக்தி, எண்களின் இரகசியம், எண்களும் எதிர் காலமும், போன்ற நூல்கள் பல்வேறு நாடு களில் புகழ் தேடித் தந்தன. |
| பிற சிறப்புகள் | : | சிறந்த கவிஞர், படிதிருத்துநர், பதிப்பாசிரியர், எழுத்தாளர், மொழி பெயர்ப்பாளர், சோதிடர், எண் கணித வல்லுநர், ஆவிகள் ஆராய்ச் சியாளர். |
| | : | பல்கலைக்கழகச் சொற்பொழிவாள ராகவும் கல்லூரிகள், பள்ளிகள் மற்றும் இலக்கிய விழாக்களில் தலைமை ஏற்றும் சிறப்பித்தவர். |
| | : | வானொலியில் உரையாற்றியவர். குமுதம், குங்குமம், தாய், இதயம், விகடன், ஞானபூமி, முத்தாரம், அமுத சுரபி, கல்கண்டு போன்ற இதழ்களில் இவர் படைப்புகள் வந்துள்ளன. |
| | : | நந்தி வாக்கு, சோதிட நண்பன் போன்ற பல இதழ்களின் ஆசிரியராக இருந்தவர். |
| சிறப்பு | : | தென்னிந்திய இரயில்வே முத்தமிழ் மன்றம், ஸ்ரீராம் நிறுவனம், கம்பன் கழகம், திருவள்ளு வர் இலக்கிய மன்றம், பன்னாட்டுத் தமிழுறவு மன்றம் போன்ற பல்வேறு அமைப்புகள் பாராட்டிச் சிறப்பித்துள்ளன. இவரது அறநெறிச் செல்வர், புகழ் பெற்ற பேரூர்கள், புலவரும் புரவலரும் போன்ற நூல்கள் பாட நூல்களாக வைக்கப் பட்டிருந்தன. இவரது படைப்புகளை 10க்கும் மேற்பட்டோர் ஆய்வு செய்து பட்டம் பெற்றுள்ளனர். |

# திருக்குற்றாலக் குறவஞ்சி

புலமை நலம் மிகுந்தோர், உலக நலனே உளம் கருதித் தாம் படைக்கும் படைப்புகளை, இருவகை நோக்கோடும் அமையப் படைத்து அளிப்பார்கள்.

தம்போற் புலமை நலனுடையார் மட்டுமே வியந்தும் நயந்தும் போற்றவேண்டும் எனக் கருதிச் செழுமையுடன் செறிவாகப் படைப்பது ஒரு நோக்கு.

உலகத் தமிழினம் எல்லாம் ஒருங்கே கூடி, உவந்து நாடிக் கற்பதற்கேற்றவாறு எளிமையும் இனிமையும் இசைமையும் பொருந்தப் படைப்பது இரண்டாவது நோக்கு.

இவ்வகையில், உலகெலாம் உவந்து வந்து வேண்டிக் கற்றலையே விரும்பிப் பாடியிருப்பது இந்தத் திருக் குற்றாலக் குறவஞ்சி எனலாம். குமரகுருபர அடிகளாரின் மீனாட்சியம்மை குறத்தினைப் போலவே பாடப் பாடப் பாடும் பண்ணும், பாடுவார் மனமும், கேட்பார் நெஞ்சமும் கிளர்ச்சி கொள்ளும் செழுமையுடன் விளங்குவதும் இக்குறவஞ்சியாகும்.

இதனை அருளியவர், பெரும் புலவரும், பல இனிய நறும் செழுந்தமிழ் நூல்களைப் பாடியருளிய செந்நாப் பாவலருமான, **மேலகரம் திரிகூட ராசப்பக் கவிராயர் பெருமான்** அவர்கள்.

ஔவைப் பெருமாட்டியின் தெள்ளமுதச் செல்வங் களைப் போலவே இக்குறவஞ்சியும், தென்பாண்டிச் சிறுவர் சிறுமியர்க்கெல்லாம் ஏழு எட்டு வயதிலேயே மனப்பாட மாக விளங்கிற்று என்பதே, இதன் ஈடிலாத தமிழ்ச் சுவைக்கு மக்களிடம் ஏற்பட்டிருந்த வரவேற்பினைக் காட்டப் போதுமானதாகும். ஏடுகளில் எழுதி எழுதிப் பயின்றதுடன், தங்கள் ஆட்ட பாட்டங்களுக்குரிய இசைப் பாடல் களாகவும் இதனையே விரும்பிப் பயன்படுத்தி வந்தனர் பலர்.

வடகரை அரசரான சின்னணஞ்சாத் தேவரின் அவைப் பெரும் புலவராக ஒளிவீசிய கவிராயரவர்கள், இக் குறவஞ்சியைப் பாடியதும், அன்றைய விஜயரங்க சொக்கலிங்க நாயகரான மதுரை மன்னரின் பாராட்டையும் பரிசையும் பெற்றனர். 'குறவஞ்சி மேடு' கவிராயர் அந்நாளிற் பெற்ற நிலக் கொடையாகும்.

திருவாவடுதுரை ஆதீன கர்த்தரும், சைவ சித்தாந்த விளக்கும், பேரறிஞருமான சுப்பிரமணிய தேசிகர் அவர்கள் நம் கவிராயர் குடும்பத்திலே பிறந்தவர்கள்தாம். இது இக்குடியின் பெருஞ் சிறப்பு!

இத் தேசிகர் பெருமானே, டாக்டர் உ.வே.சா. அவர்களுக்கு உறுதுணையாக விளங்கி, அவர்களைத் தமிழ் உலகுக்கு அளித்தவருள் ஒருவராவார்; மற்றொருவர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள்.

திக்கெலாம் புகழ்கொண்ட குற்றாலச் சாரலைப் போலவே, இக்குறவஞ்சியும் எங்கும் புகழ் கொண்டது. இதனை அச்சிற்பதித்தும் பலர் அந்நாளில் வழங்கினர். அவற்றுள் திரு.கே.எஸ்.கற்பகவிநாயகம் பிள்ளை அவர்களின் பதிப்பும், திருக்கோவிற் பதிப்புமே மிகச் சிறந்தனவாகும்.

முடிவாக, என்னையும் தமிழ்ப் பணிக்கு உரியவனாக்கி, என்னுள்ளே தமிழாய்த் தானே நின்று இயக்கிவரும் மகா சக்தியின் ஈடிலாப் பேரருளையும் போற்றி, இதனைத் தமிழன்பர்கட்கும் மகிழ்வுடன் வழங்குகின்றேன்.

**வாழ்க தமிழ்!**
**வாழ்க தமிழார்வம்!**

**புலியூர்க் கேசிகன்**

# உள்ளே

மேலகரம்
திரிகூடராசப்பக் கவிராயர்
பாடியருளிய

# திருக்குற்றாலக் குறவஞ்சி

## மூலமும் உரையும்

## 1. கடவுள் வணக்கம்

### 1. கைவலான் காவலான்

அழகு மலிந்த பூக்கள், இதழ் விரிந்த புத்தம் புது மலர்கள்; இவற்றால் தொடுக்கப்பெற்ற மாலையினைப் புனைந் திருப்பவர், திருக்குற்றாலத்திலே கோவில் கொண்டிருக்கும் சிவபெருமான். மலர்களுக்கு அரசு தாமரைமலர்; அதுபோன்ற செம்மையும் மென்மையும் அழகும் உடையன அவருடைய திருப்பாதங்கள். அந்தத் திருப்பாதங்களைப் போற்றி, திருக்குற்றாலக் குறவஞ்சி ஆகிய, இந்த முத்தமிழ் நாடகத்தைப் பாடுவதற்குத் தொடங்குகின்றேன்.

மிகுதியாகப் பெருகி வழியும் மதநீரானது, அருவி நீரினைப் போல இழிந்து பாய்கின்றவன்; 'மலையோ!' என்று சொல்லும்படியாக ஓங்கி வளர்ந்த கரிய திருமேனியினை உடையவன்; விநாயகப் பெருமான். வேண்டுபவருக்கு வேண்டியன எல்லாம் தருவது கற்பகத்தரு; அந்தத் தருவே ஒன்றுக்கு ஐந்தாக வந்து வாய்த்திருப்பனபோல ஐந்து திருக்கைகளை உடையவன் அவன். அந்தக் கைகள் மிகுந்த வள்ளன்மை உடையனவும் ஆகும். அத்தகைய அருளாள னாகிய விநாயகப் பெருமான், எனக்கும் காவலனாக அமைந்து, என்னுடைய இந்த முயற்சி இனிது நிறை வெய்துவதற்கு உதவுவானாக! (இப்படி, விநாயகப் பெருமானை வேண்டுகிறார் கவிஞர்.)

## ஆசிரிய விருத்தம்

பூமலி இதழி மாலை புனைந்த குற்றாலத் தீசர்
கோமலர்ப் பாதம் போற்றிக் குறவஞ்சித் தமிழைப் பாட
மாமதத் தருவி பாயும் மலையென வளர்ந்த மேனி
காமலி தருப்போல் ஐந்து கைவலான் காவ லானே!

*(மாலைகளுள்ளும் அழகிய புத்தம் புதுமலர்கள் மலிந்துள்ள மாலையினைப் புனைந்தவன் ஈசன்' என்பார். 'பூமலி இதழி மாலை புனைந்த' என்றார். 'புனைதல்' என்றமையால், அதனால் அவன் அழகு பெற்றவனாகித் திகழ்கின்றமையும் புலனாகும். 'குற்றாலத்து ஈசர்' குற்றாலத்துத் திருக்கோயில் கொண்டிருக்கும் ஈசராகிய சிவபெருமான். விநாயகப் பெருமான் யானைமுகன்; ஆதலின், அவனை மதநீர்ப் பெருக்கம் உடையவன் என்றனர். உடலின் தகைமையை மலையெனக் கூறியதற்குப் பொருத்த மாகவே, வழியும் மதநீர் அருவியென வீழும் என்பதும் நயமுடன் அடுத்துக் கூறப்பெற்றது. கைவலான் கைவன்மையுடையவன். 'கைவன்மை உடையவனே காவலனாக விளங்குவதனால் எவ்விதமான இடையூறும் வராமல் காப்பாற்றியருள்வான் என்ற ஓர் உறுதிப்பாடும் அதனாற் புலப்படக், 'கைவலான் காவலானே' என்றனர். தரு-கற்பகத் தரு, 'காவலாமே என்பதும் பாடம்)*

## 2. அறுமுகன் தமிழ் தந்தான்

*பன்னிரு கைகளை உடையவன் அறுமுகனாகிய திருமுருகப் பெருமான். அவனுடைய பன்னிரண்டாவது கையிலே அவனுக்கே சிறப்பாக உரிய வேலினைத் தாங்கியிருப்பான். பிற பதினொரு கைகளினும், உருத்திரர் பதினொருவருக்கும் உரித்தான தோமரம், கொடி, வாள், குலிசம், பகழி, அங்குசம், மணி, பங்கயம், தண்டம், வில், மழு ஆகிய படைகளையும் தாங்கியிருப்பான். பத்துத் திசை களினும், நவசக்தியிடத்துத் தோன்றியவரான நவவீரர்களும் அவன் புகழைப் போற்றிக் கொண்டிருப்பார்கள். கைலை, மந்தரம், இமயம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலமலை, கந்தமாதனம் என்பன எட்டு மலைகள். நன்னீர், உவர்நீர், பால், தயிர், நெய், தேன், கருப்பஞ்சாறு என்பவை ஏழு கடல்கள். இத்தகைய எட்டு மலைகளையும், ஏழு கடல்களையும்*

விரும்பிச் சென்று, அங்கங்கெல்லாம் திருவிளையாடல் செய்து மகிழ்பவன் சிவகுமரனாகிய குமரப் பெருமான். அவனுடைய ஆறு தலைகளின் மேலும் பொன்னினால் சமைக்கப் பெற்ற ஆறு திருமுடிகளையும் தாங்கியிருப்பவன் அவன். அன்பர்களின் அச்சங்களை எல்லாம் போக்கி, அவர் களுக்கெல்லாம் அருளாளனாக விளங்கும் அப்பெருமான், இதனைப் பாடுவதற்கு எனக்கு எழுகின்ற அச்சத்தையும் போக்கி அருள்வானாக. பன்னிரு திண்தோளனாகத் தன் இரு திருவடிகளை எனக்குப் புகலிடமாகத் தந்தருளும் ஒப்பற்றவன் அந்த முருகப் பெருமான். குற்றாலக் குறவஞ்சியாகிய இத் தமிழினையும் என்னுள்ளே கலந்து நின்று, என்னை இயக்கி இவ்வுலகுக்கு என் வாயிலாகத் தந்து அருளியவனும் அவனே யாவன்!

பன்னிருகை வேல்வாங்கப், பதினொருவர்
படைதாங்கப், பத்துத் திக்கும்
நன்னவவீ ரரும்புகழ, மலைகள் எட்டும்
கடலேழும் நாடி ஆடிப்,
பொன்னின்முடி ஆறேந்தி, அஞ்சுதலை
எனக்கொழித்துப், புயநான் மூன்றாய்த்
தன்னிருதாள் தருகஒருவன் குற்றாலக்
குறவஞ்சித் தமிழ்தந் தானே.

(இப்பாடலுள், பன்னிரண்டு முதலாக ஒன்றுவரையுள்ள எண்கள் ஒவ்வொன்றும், நயமுடன் அமைந்துள்ள சிறப்பினைக் காணலாம். 'நவ வீரர்கள்' வீரவாகு தேவரை உள்ளிட்ட ஒன்பதின்மர். இவர்கள் உமையம்மையின் திருச்சிலம்பிலேயிருந்து தோன்றிய நவசக்திகளிடத்துப் பிறந்தவர். பதினொருவர் படை களாலும் வெல்லமுடியாத சூரனை வென்ற பெருமை உடையதும், அறுமுகனுக்கே தனித்த சிறப்புடையதும் பற்றி வேலினைத் தாங்கியதைத் தனித்துக் கூறி வியந்து போற்றினர். 'சிவகுமரன்' என்பதற்கேற்ப, மலைகளினும் கடல்களினும் நாடி ஆடின அவன் திருவிளையாடலையும் போற்றினர். பொன்னின்முடி அழகு சிறந்த திருமுடிகளுமாம். ஒருவன் - ஒப்பற்றவன். தமிழுக்கு முதல்வன் குமரப்பெருமான் என்பது மரபு. தமிழ் முனியாகிய

அகத்தியருக்கும் அவனே குருவாக விளங்கினவன். இதுபற்றியே, 'குறவஞ்சித் தமிழை அவனே எனக்கும் தந்தனன்' என்கிறார் கவிஞர் பெருமான்.)

## 3. சிவக்கொழுந்தை வேண்டுவோம்!

திருக் குற்றாலநாதர் குறும்பலாவின் அடியிலே முளைத்து எழுந்த சுயம்புலிங்கம் ஆவர். அது குறித்துக் குறும்பலாவினைப் போற்றி, அதனை வேண்டுகிறார் கவிஞர். முதற்கண், சிவகுமாரர்களாகிய பிள்ளையாருக்கும், குமரனுக்கும் போற்றுதல் உரைத்துப், பின்னர் பெருமானுக்கு வணக்கம் கூறுகின்ற இனிமையினைக் காண்க. 'குமரர்களைப் போற்றுதலினால், அங்ஙனம் போற்றுவார் மீது அவரைப் பெற்ற தந்தையும் மகிழ்பவராவர், என்பது இதன் குறிப்புப் போலும்!

பற்பல கிளைகளாகக் கிளைத்திருக்கும் பலப் பல கொப்புகள் எல்லாம் வேதங்களின் இயல்புகளைப் பொருந்தியவை. அக்கிளைகள் ஈன்ற களைகளெல்லாம் சிவலிங்க சொரூபமேயாகும். களைகளிலே தோன்றிய கனிகள் எல்லாம் சிவலிங்க சொரூபமேயாகும். கனிகள் ஈன்ற சுளைகள் அனைத்துமே சிவலிங்க சொரூபமாகும். சுளைகளின் உள்ளேயிருக்கும் வித்துகள் எல்லாமே சிவலிங்க சொரூபங்களாகவே விளைகின்ற ஒப்பற்ற சிவத்தன்மையினை உடையது குற்றாலத்துக் குறும்பலா மரம். அதன் கண் முளைத்தெழுந்த சிவக்கொழுந்து திருக்குற்றாலநாதர். இக் குறவஞ்சித் தமிழைப் பாடுவதற்கு அருளுமாறு, அச்சிவக் கொழுந்தையும் நாம் வேண்டுவோமாக!

வேத வேதாங்கங்கள் அனைத்துமே குறிப்பிடும் முழுமுதல், அவனேயாவன். இந்த அரிய கருத்தினையே இப் பாடலுள் நயமுடன் கவிஞர் கூறுகிறார்.

**கிளைகளாய்க் கிளைத்தபல கொப்பெலாம்**
**சதுர்வேதம் கிளைகள் ஈன்ற**
**களையெலாம் சிவலிங்கம் கனியெலாம்**
**சிவலிங்கம் கனிகள் ஈன்ற**

சுளையெலாம் சிவலிங்கம் வித்தெலாம்
சிவலிங்க சொரூபம் ஆக
விளையுமொரு குறும்பலவின் முளைதெ ழுந்த
சிவக்கொழுந்தை வேண்டு வோமே.

*(சிவலிங்க சொரூபம் 'கொழுந்து' எனப்பட்டது. 'குறும் பலவின் பகுதியனைத்துமே சிவலிங்க சொரூபமாகத் திகழ்ந்த போதினும், அவற்றினுக்கும் மேலாக, அன்பர்களுக்கு வாழ்வு அளிக்கும் பெருங்கருணைப் பெருக்கினாலே சுயம்புலிங்க வடிவமாக இறைவனும் எழுந்தருளினன். அவனை வேண்டுவோம்! அவன் நமக்கு அருள்வான் என்கிறார் கவிஞர். சதுர்வேதம் - நான்கு வேதங்கள்; நான் மறைகள்; இருக்கு முதலியன என்பர். 'பண்டாய நான் மறைகள்' என்னும் பழைய தமிழ் மறைகள் என்பதும் உண்டு.)*

### 4. குழல்வாய்மொழியைக் கூறுவோம்

*வெண்ணிலவு தவழ்ந்து செல்லுகின்ற மலையுச்சிகளை யுடையது பனிமுடிக் கிடக்கும் பெருமலையாகிய இமயம். அதன்கண் தோன்றி வளர்ந்தவள் உமையம்மை. சிறந்த தகைமைகள் அனைத்துமே சேரப் பெற்றவனும் முக்கண் களை உடையவனும் பவள மலையைப் போன்று செம்மேனிப் பெம்மானாக விளங்குபவனுமாகிய சிவபெருமானிடத்தே நாளும் ஆசை படர்ந்து ஏறிக் கொண்டே இருந்தவள் அவள். அந்த ஆசையானது முகிழ்த்துப் பின் பருவமும் ஆகித், தேன் சொரியும் அழகிய கடப்ப மலர்மாலை அணிந்த குமரப் பெருமானையும், ஒற்றைக் கொம்பினையுடைய யானைமுகப் பெருமானையும் பெற்றவள் அவள். இவ்வுலகம் அனைத் தையும் ஈன்றருளிய உலக மாதாவும் அவளேயாவாள். அத்தகைய கொடி போன்றவளாகிய குழல்வாய்மொழி அம்மையின் புகழினையும், இந்நூல் இனிது நிறைவேறுமாறு நாம் பேசுவோமாக.*

தவளமதி தவழ்குடுமிப் பனிவரையின்
முளைத்தெழுந்து தகைசேர் முக்கண்
பவளமலை தனில்ஆசை படர்ந்தேறிக்
கொழுந்துவிட்டுப் பருவம் ஆகி

அவிழுநறைப் பூங்கடப்பந் தாமரையும்
ஈன்றுஒருகோட் டாம்பல் ஈன்று
குவலயம் பூத்து அருள்கொடியைக் கோதைகுழல்
வாய்மொழியைக்கூறு வோமே.

*(முக்கண் - சிவபெருமானின் மூன்று கண்கள். ஞாயிறும் திங்களும் நெருப்புமே சிவனின் முக்கண்களாக விளங்குவன என்பர். அம்மை பர்வதராசன் புத்திரியாகத் தோன்றியமையால், 'பனி வரையின் முளைத்தெழுந்து' என்றனர். தகைமை - குணங்கள்; 'எண்குணத்தான்' எனக் குறள் கூறும் எட்டுவிதத் தகைமைகள். 'ஆசைபடர்ந்து ஏறுதலாவது, 'காதல் தோன்றி நாளுக்குநாள் மிகுதியாகப் பெருகிக் கொண்டு போதல். நறைதேன். அவிழ்தல் - இங்கே, சொரிதல். தாமரை - தாமத்தையுடைய வரையையும், முருகனையும் குறிக்கும். ஆம்பல் - அல்லியையும், யானையையும் குறிக்கும், அம்மையைக் 'கொடி' என்றதற்கேற்பப், 'பவள மலையிலே ஆசையுடன் படர்ந்தேறித், தாரையும், அல்லியும் பூத்து' என்று இனிமைச் செறிவுடன் கூறினர். இறையவன், ஊழிக்காலத்து அனைத்தையும் தன்னுள் ஒடுக்குவன். பின் சக்தியை இயக்கியே மீண்டும் தனுகரண புவன போகங்களை எல்லாம் படைப்பன். அதனால், அந்த அருள்சக்தியே உலகத்தை ஈன்ற அருள் மாதாவுமாகிறாள். இதுபற்றியே, 'குவலயம் பூத்து அருள் கொடியை' என்கின்றனர் கவிஞர்.)*

## 5. மூவர் வணக்கம்

*தன்னுடைய தலையின் மீதிலேயே கங்கையாகிய ஆறானது இருக்கவும், தன் மாமியாராகிய காஞ்சனமாலை அம்மையின் விருப்பத்திற்கு இணங்கப், பெரிய சப்த சமுத்திரங் களையுமே அழைத்துத் தந்த சிறப்புடையவர் திருக்குற்றால நாதர். அவருடைய மலையினும் பருத்த அகன்ற தோள்களை வாழ்த்திச், செழுமையான இக்குறவஞ்சி நாடகத்தைப் பாடமுனைகின்றோம். கடலிலே கல்லும் மிதக்க அதன்மீது ஏறியமர்ந்து கரைசேர்ந்தவர் திருநாவுக்கரசுப் பெருமான். எலும்பிலேயிருந்த பூம்பாவை என்ற பெண்ணை அந்நாளிலே உயிர்ப்பித்து எழுப்பியவர் திருஞானசம்பந்தப் பெருமான். தன்னுடைய பதிகம் பாடுங் கலையினாலே கிடைத்த*

பொருள்களை எல்லாம் திருமுதுகுன்றத்து மணி முத்தாற்றிலே போட்டுவிட்டுப் பின் அவற்றைத் திருவாரூர் கமலாலயக் குளத்திலே வந்து எடுத்துக் கொண்டவர் சுந்தரமூர்த்திப் பெருமான். இந்நூல் இனிது நிறைவேற அம்மூவர்களும் என்னைத் துணை நின்று காத்து உதவுவார்களாக.

தலையிலே ஆறிருக்க மாமிக் காகத்
தாங்குகடல் ஏழழைத்த திருக்குற் றாலர்
சிலையிலே தடித்ததடம் புயத்தை வாழ்த்திச்
செழித்தகுற வஞ்சிநாட கத்தைப் பாட
அலையிலே மலைமிதக்க ஏறி னானும்
அத்தியிலே பூவைஅந்நாள் அழைப்பித் தானும்
கலையிலே கிடைத்தபொருள் ஆற்றிற் போட்டுக்
கனகுளத்தில் எடுத்தானும் காப்ப தாமே.

(இந்தப் பாடலுள் நான்கு பழைய வரலாற்றுக் கதைகள் பேசப்படுகின்றன. அவை: 1. சிவபெருமான் ஏழுகடல் அழைத்தது; 2. அப்பர் கடலிலே கல்மிதக்க ஏறிக் கரை சேர்ந்தது; 3. திருஞானசம்பந்தர் எலும்பினின்றும் பூம்பாவையை உயிர்ப்பித்தது; 4. சுந்தரர் ஆற்றிலே பொருளைப் போட்டுக் குளத்திலே எடுத்தது ஆகியவை. இவ்வரலாறுகளுள் முதலதைத் திருவிளையாடற் புராணத்தும் பிற மூன்றையும் பெரிய புராணத்தும் காண்க. சிலை - மலை. தடித்த தடம் - பருத்து அகன்ற. செழித்த குறவஞ்சி- செழுமையாக அமைந்த குறவஞ்சி; கருத்துச் செழுமையும் சொற் செழுமையும் ஆம். அத்தி - எலும்பு. பூவை - பெண், பூம்பாவை. கலை - தமிழ் பாடும் கலை. அற்புதங்கள் இயற்றியவர்கள் அவர்கள்; அவர்களுடைய காப்பின்கீழ்ச் செயற்படும்போது எவ்வித இடையூறும் நேராது (இந்நூல் நிறைவெய்தும் என்பது கருத்து.)

## 6. தமிழுரைத்த முனியைப் பாடுவோம்! வாதவூரான் அடிகளைப் பேணுவோம்!

சிவபெருமான், பிறப்பிறப்பு அற்று என்றும் நிலைத்திருக்கும் நித்தியப் பரம்பொருளாவார். அவர், அடியவர் மீதுள்ள கருணைப் பெருக்கினால் திரிகூட நாட்டிடத்தே

*முளைத்தெழுந்த சிவலிங்க சொரூபராகவும் திகழ்பவர். அவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட குறவஞ்சித் தமிழ் நாடகத்தை நிகழ்த்த வேண்டும். அதற்கு, 'முத்தராகிய சிவபெருமானின் திருமேனி முழுவதுமே உருகுமாறு, முன்னாளிலே தமிழ் உரைத்த முனிவராகிய அகத்தியரின் புகழினைப் பாடுவோம். இந்நிலவுலகிலே ஆத்துமாவைப் போகவிட்டு இறந்து போகின்ற இறுதிநாளிலே, சிலேட்டுமம் வந்து பற்றிக்கொள்ளாத வண்ணம் பித்தனாகிய சிவ பெருமானின் அடிகளைத் துணையாகச் சேர்ந்தவர் வாதவூரார் ஆகிய மணிவாசகப் பெருமான். அவருடைய திருவடிகளையும் நாம் போற்றுவோம்.*

**நித்தர்திரி கூடலிங்கர் குறவஞ்சி**
**நாடகத்தை நிகழ்த்த வேண்டி**
**முத்தர்திரு மேனியெல்லாம் உருகவே**
**தமிழுரைத்த முனியைப் பாடி**
**இத்தரையில் ஆத்துமம்விட்டிறக்கும்நாள்**
**சிலேட்டுமம் வந்து ஏறாவண்ணம்**
**பித்தனடித் துணைசேர்ந்த வாதவூ**
**ரானடிகள் பேணு வோமே.**

*('வாதவூரான்' என மணிவாசகரைக் குறித்ததற்கேற்ப, வாதத்திற்கு இனமாகிய பிற பித்த சிலேட்டுமங்களையும் நயம்பட உரைத்துள்ளனர். சிலேத்துமம் ஏறாமலிருக்கப் பித்தாதிக்கத்தை மிகுக்கும் மருத்துவ விதியும் காண்க. முத்தர் - சிவபெருமான். ஆத்துமம். 'உயிர் போகும் நாளிலே உயிர் அவதியுறாவண்ணம் சிவபெருமானின் திருவடித்துணை சேர்ந்தவர் மணிவாசகர்' என்க.)*

## 7. ஞானக்கொடிதனை இயம்புவோம்

*இணைந்திருக்கின்ற தன்னுடைய இரு திருவடி மலர்களும், சிவந்த வாயாகிய அல்லி மலரும் செந்நிறமாகப் பெற்று விளங்குபவள். நீண்ட அழகிய கூந்தலும், மை தீற்றிய கண்களாகிய குவளை மலர்களும் கரிய நிறமாகப் பெற்*

றிருப்பவள். திருமேனி, சிறந்த தன் செங்கையிலேயுள்ள ஸ்படிகமணி போலவே வெளுப்பாக விளங்கப் பெற்றிருப் பவள். அறிவின் அதிதேவதையாகிய 'ஞானக் கொடி' என்னும் அக் கலைமகளையும் இத் திருக்குற்றாலக் குறவஞ்சி இனிது நிறைவேறுவதற்கு அருளுமாறு நாம் போற்றுவோமாக.

**அடியிணை மலரும் செவ்வாய் ஆம்பலும் சிவப்பி னாளை**
**நெடியங் குழலும் மைக்கண் நீலமும் கறுப்பி னாளைப்**
**படிவமும் புகழும் செங்கைப் படிகம்போல் வெளுப்பாம்ஞானக்**
**கொடிதனைத் திருக்குற் றாலக் குறவஞ்சிக் கியம்பு வோமே.**

(படிகம் - படிகமணி. அயிணைமலர், மைக்கண் நீலம், செவ்வாய் ஆம்பல் என உறுப்புகளை மலர்களாகக் கூறியதற்கு ஏற்ப, அவளையும் 'ஞானக்கொடி' என்றதன் நயம் காண்க. 'கொடிதனைக் குறவஞ்சிக்கு இயம்புவோமே; என்றதனால், அவளையே மிகவும் துணையாகக் கொண்டிருக்கும் தன்மையும் புலப்படும் 'வெளுப்பாம் ஞானக் கொடிதனை' என்பதற்குப் பதிலாக, 'வெளுப்பினாளைக் கொடிதனை' என்ற பாடபேதமும் உரைப்பர்.)

## 8. நூலின் பயன்

கையிலே வில்லை ஏந்தியவனாகப் பெரும் கொலைத் தொழிலிலே ஈடுபட்டவனாகிய வேடனுக்கும் நரிக்கும், வேதச் செல்வர்களாகியவர்க்கும், தேவர்கட்கும் இரக்கங் கொண்டவன்; முன்னாளிலே அவர்கள் இயற்றிய கொலை, களவு, கள், காமம் குருத்துரோகம் ஆகிய கொடிய' பஞ்சமா பாதகங்களையும் தீர்த்து அருளியவன் சிவபெருமான். அதனாலே, நிலவினைச் சூடியவராகிய அக் குற்றால நாதரை நினைத்த பேர்கள், தாம் நினைத்த வரத்தைத் தவறாது பெறுபவர்களாவார்கள் என்பதும் புலப்படும். அங்ஙனம் அனைவரும் நினைக்க வேண்டிப் பல வளமும் சேர அமைந்த இக்குறவஞ்சி நாடகத்தைப் பாடினோம். இதனைப் படிப் பவர்க்கும், படிக்கக் கேட்பவர்க்கும் உறுதியாகப் பலன் உண்டாகும்.

சிலைபெரிய வேடனுக்கும் நரிக்கும் வேதச்
செல்வருக்கும் தேவருக்கும் இரங்கி மேனாட்
கொலைகளவு கட்காமம் குருத்து ரோகம்
கொடியபஞ்ச பாதகமும் தீர்த்த தாலே
நிலவணிவார் குற்றாலம் நினைத்த பேர்கள்
நினைத்தவரம் பெறுவரது நினைக்க வேண்டிப்
பலவளஞ்சேர் குறவஞ்சி நாடகத்தைப்
படிப்பவர்க்கும் கேட்பவர்க்கும் பலனுண் டாமே.

*(பஞ்சமா பாதகங்களை இறைவன் தீர்த்த வரலாறு களையெல்லாம் திருக்குற்றாலத் தலபுராணத்துள் காண்க. அதுவும் இந்நூலாசிரியரால் செய்யப்பட்டதேயாகும். சிலை - வில், வேதச் செல்வர் - வேத பாராயணம் செய்யும் வேதியர். பலவளம் - பல வகையான வளம். சொல்வளம் பொருள்வளம் முதலியன.)*

## 9. அவையடக்கம்

*உலகத்தவர்கள் மலர்த்தாரினைத் தம் தலைகளிலே ஆர்வமுடன் சூட்டிக் கொள்வார்கள். அப்படி விருப்ப முடன் முடிக்கும்போது அம்மலர்களை இணைத்திருக்கும் நாரினை, 'இது பொல்லாது' என்று கூறித் தனியே ஒதுக்கித் தள்ளி விடுவார்களோ? மாட்டார்கள் அல்லவோ! சீர்மை நிரம்பிய தமிழ் மாலைகள் பலவற்றுள் செல்வராகிய குற்றாலத் தீசர் பேரினை மலர்களாகக் கொண்டு யாக்கப் பெற்ற இக்குறவஞ்சி நாடகத்தின் அமைதி எங்ஙனமாயினும், குற்றாலத் தீசரின் பேரினையுடைய அந்தச் சிறப்பின் காரணமாக வேனும் என் சொற்களைப் பெரியோர்களும் தள்ளாமல் ஏற்றுக் கொள்வார்களாக.*

தாரினை விருப்ப மாகத்
தலைதனில் முடிக்குந் தோறும்
நாரினைப் பொல்லா தென்றே
ஞாலத்தோர் தள்ளு வாரோ?
சீரிய தமிழ்மா லைக்குட்
செல்வர்குற் றாலத் தீசர்

பேரினால் எனது சொல்லைப்
பெரியவர் தள்ளார் தாமே.

(நார், மலரினால் மணமும் சிறப்பும் பெற்று விளங்கும். அதுபோல, என் சொற்களும் ஈசர் பேரின் சேர்க்கையினால் சிறப்பும் புகழும் உடையதாகும். இப்படி அவையடக்கம் உரைக்கிறார் கவிஞர். 'சீரிய தமிழ் மாலை' இக் குறவஞ்சி நாடகத்தையே குறிப்பாகவும் கொள்ளலாம். ஞாலம் - உலகம். ஞாலத்தோர் - உலகோர்; 'ஞாலத்தார்' எனவும் பாடம். 'தார்' என்ற உவமைக்கு ஏற்பத் 'தமிழ் மாலை' என்றனர். செல்வர் - அருட்கருணைச் செல்வர். குற்றாலத் தீசர் குற்றாலநாதர் எனவும் பாடம். பெரியவர் - தமிழறிந்த ஆன்றோர்கள்.)

★ ★ ★

# II. இறைவனின் திருவுலா

## 1. கட்டியக்காரன் வந்தான்

*மன்மதன் தன் தேராகிய தென்றலிலே ஊர்ந்து வருபவன். அங்ஙனம் அவன் வருவதனால் வசந்த வீதிகளை உடையதாகத் திருக்குற்றால நகரம் விளங்கிற்று. அதன்கண் திருக்கோவில் கொண்டிருக்கும் செல்வர், குற்றாலத்து ஈசர் ஆவர். அவர், வீதியூடே பவனி வரப்போகின்றார். நில மகளைத் தன் மனைவியாக உடையவன் திருமால்; அவனே எருது ஊர்தியாக அந்த இறைவனைத் தாங்கி வருபவன். அந்த விடையிலே ஏறியமர்ந்து அவர் இதோ பவனி வரப் போகின்றார். அதனைப் பற்றி ஊரவர்க்குக் கூறி எச்சரிக்கை சொல்லுவதற்காகக் கட்டியக்காரன் முற்பட்டு வந்தனன். நேர்மை கொண்ட முப்புரிநூல் விளங்கும் மார்பினையும், தன் கையிலே நெடிய கைப்பிரம்பினையும் உடையவனாக மழைக் காலத்தைக் கொண்ட மழை மேகங்களுள் சிறந்து விளங்கும் கருமையான ஒரு மேகத்தைப் போலக் கருநிறமுடையனான அக் கட்டியக்காரனும் குற்றாலத் தெருவிலே வந்தனன்.*

**தேர்கொண்ட வசந்த வீதிச் செல்வர்குற் றாலத் தீசர்**
**பார்கொண்ட விடையில் ஏறும் பவனிஎச் சரிக்கைக் கூற**
**நேர்கொண்ட புரிநூல் மார்பும் நெடியகைப் பிரம்பும் ஆகக்**
**கார்கொண்ட முகிலேறு என்னக் கட்டியக் காரன் வந்தான்.**

*(வசந்தம் - தென்றல். 'காமன் உலாவரும் வீதி, என்னவே இளமைப் பருவத்தாரிடம் காமவேட்கை முகிழ்க்கும் பருவம் அது என்பதுமாயிற்று. மன்மதனுக்குரிய தேர் தென்றலாதலினால், தேர்கொண்ட வீதி, வசந்த வீதியாயிற்று. 'பார் கொண்ட விடை' திருமால் என்பது, சிவபுராணங்களுள் சொல்லப்படும். 'இறைவன் பவனி வருவதனால் ஊரவர் அந்த உலாவைக் காண வருக; வீதியிலே ஒதுங்கி நிற்க' என்றபடி முன்னறிவிப்புக் கூறவே*

முன்னதாக எச்சரிக்கை கூறிக் கட்டியக்காரன் வருகின்றனன். அவன், புரி நூல் மார்பினையும் உடையவன் என்பதனால் அவனும் பூணூலினன் ஆவன். அவன் புரிநூல், வேத முறைமைப்படி அமைந்தது என்பார், 'நேர்கொண்ட' என்றனர். கார்கொண்ட முகில் - மழை முகில், அதன் நிறம் கருமை. கட்டியம் கூறுவோன் கட்டியக்காரன், பண்டையோர் இத்தகையோரைச் சூதர், மாகதர் என்பர்.)

## கண்ணிகள்

உலகத்து மக்களை எல்லாம் முறைசெய்து காப்பவர்கள் மண்ணுலகத்து அரசர்கள். தேவருலகத்துப் பலரையும் காப்பவர் தேவேந்திரன் முதலாகிய அவ்வவ்வுலகத்து இறை வர்கள். இவர்கள் முதலியோரை எல்லாம், சிவ சன்னதியிலே நெறிமுறை தவறாமற் காத்தருளும் செங்கோலான பிரம்பினை உடையவன் அவன். மகாமேரு பர்வதத்தையே வில்லாக வளைத்துக் கைக்கொண்டவர். மேலான உயர்வினை யுடையவர், திருக்குற்றாலநாதர். அவருடைய திருக்கோவிலின் திருவாசலிலே, கட்டியங்கூறி நிற்கும் கட்டியக்காரனாகிய அவனும், அவருடைய பவனி வரும் எச்சரிக்கைபற்றிய செய்தியை, அனைவருக்கும் கூறுவதற்காக நகரத்து வீதியிலே எழுந்தருளி வந்தனன்.

**இராகம் - தோடி** **தாளம் - சாப்பு**

**பூமேவு மனுவேந்தர் தேவேந்தர் முதலோரைப்**
**புரந்திடும்செங் கோலான பிரம்புடையான்**
**மாமேருச் சிலையாளர் வரதர்குற் றாலநாதர்**
**வாசற் கட்டியக் காரன்வந் தனனே!**

(முழுமுதலாகிய சிவபெருமானே அனைத்துயிர்களையும் தன் அருட்கருணையினாலே காக்கும் தனிப்பெரு முதல்வனாவான். மனு வேந்தரையும், தேவேந்தரையும் நெறிப்படுத்திக் காப்பவனும் அவனே. அவனுடைய கட்டியக் காரனின் கைப்பிரம்பு, அதனால் அவரனைவரையும் புரந்திடும் செங்கோலாகும் சிறப்புடையதும் ஆயிற்று! என்று கொள்க. 'செங்கோலான் பிரம்புடையான்' என்பது பாடமாயின்; 'செங்கோல் செலுத்துபவன்; கையிற் பிரம்பும் உடையவன் என்க.)

## 2. ஞாயிறுபோல் மேவினாரே!

*தன்னுடைய வாக்கின்படியே வடதிசையினின்றும் எழுந்து தென் திசை நோக்கிப் போந்த குறுமுனியாகிய அகத்தியருக்காக, மானைத் தாங்கிய தன் திருக்கையை அபயமாகக் காட்டியருளிய அருள் உள்ளத்தினை உடையவர் குற்றாலநாதர். சீர்மைகளின் தேக்கமாகச் செறிவுற்று எழுந்தவை நான்கு வேதங்களும்; அவை சிலம்புகளாக அவன் திருப்பாதங்களிலே அமைந்து கிடந்து ஒலி முழங்கும். அவன் ஏறிவருகின்ற விடையோ மலை போன்றதாகும். அதன்மீது ஏறியமர்ந்து, மேற்குத் திசையிலே தோன்றும் இளம்பிறையைத் தன் சடையிலே சூடியவனாகக், கிழக்குத் திசையிலே எழுந்து வரும். இளஞாயிறுபோல அவன் அதோ காட்சியளிக்கின்றான். மூக்குகளிலே எடுப்பாகத் தோன்றும் மூக்குத்திகளை அணிந்தவரான இளநங்கையர்கள். அணிவகுத்தாற்போல இரு மருங்கும் திரண்டு நிற்கின்ற, நன்மை பொருந்திய மூதுரான குற்றால நகரத்தின் வீதியிலே, அவன் இதோ எழுந்தருளி வருகின்றான். காண்பீர்! காண்பீர்! இப்படி அறிவித்துக் கொண்டே வருகின்றான் அந்தக் கட்டியக்காரன்.*

### விருத்தம்

**மூக்கெழுந்த முத்துடையார் அணிவகுக்கும்**
**நன்னகர மூதூர் வீதி**
**வாக்கெழுந்த குறுமுனிக்கா மறியெழுந்த**
**கரங்காட்டும் வள்ள லார்சீர்த்**
**தேக்கெழுந்த மறைநான்கும் சிலம்பெழுந்த**
**பாதர்விடைச் சிலம்பில் ஏறி**
**மேக்கெழுந்த மதிசூடிக் கிழக்கெழுந்த**
**ஞாயிறுபோல் மேவி னாரே.**

*(மூக்)கெழுந்த முத்துடையார் - முத்து மூக்குத்தி அணிந்தவரான நங்கையர். அணி - வரிசை. வகுக்கும் - வகுத்து நிற்கும். 'வருக்கை' பாடமாயின் குறும்பலாவினையுடைய நன்னகரம் என்க. நன்னகர மூதூர் வீதி - மூதூராகிய நன்னகரத்தின் வீதி. வாக்கு - திருவாக்கு; கட்டளை. குறுமுனி - அகத்தியர். மறி -*

*மான்மறி. வள்ளலார் - வள்ளன்மை உடையவர்; சிவபெருமான். திருமாலாயிருந்தவர் சிவனாகிக் காட்சியளித்ததைக் குறிப்பது. சீர் - சீர்மை, தேக்குதல். மிக்குப் பெருகித் தேங்கி இருத்தல். 'மறை நான்கும் சிலம்பெழுந்த பாதர் - 'எழுதரிய மறைச் சிலம்பு கிடந்து புறத்தலம்ப' என்பார் பிறரும். மேக்கு எழும் மதி; மூன்றாம் பிறை. அது மணங்கொள்ளும் வளர்பிறைக் காலம் என்பதும் இதனால் உணரலாம்.)*

## 3. பவனி வந்தனரே!

பவனி வருகின்றனர்; இளமை பொருந்திய விடையின் மீது ஏறி, அதோ நம் இறைவன் பவனி வருகின்றனர்.

உலகத்தவரெல்லாம் போற்றிய பெருமான்; குறும் பலாவின் அடியிலே வீற்றிருக்கின்றவன்; மவுனநாயகனாகவும்; எவன நாயகனாகவும் விளங்குபவன்; சிவனுமாகவும்; அரியுமாகவும், அயனுமாகவும் விளங்கும் ஏக மூர்த்தி! விரைந்து செல்லுகின்ற எருதின்மீது ஏறியவனாக, இதோ பவனி வந்து கொண்டிருக்கிறார்!

தேவர்களின் கூட்டமும், முனிவர்களின் கூட்டமும், அசுரர்களின் கூட்டமும், மனிதர்களாகிய தொண்டர்களின் கூட்டமும், அனைத்துமே கண் இமைப்பில்லாதவராயினர் போலும் எனச் சொல்லும்படியாக, ஒருவரோடொருவர் கலந்து தனித்தனியே மயக்கம் உடையவராயினர். தொன்மை யாக வரும் மக்களினத்தவர் இவர், தேவர்கள் இனத்தவர் இவர் என, நந்திப் பெருமான் அவர்களை மீண்டும் மீண்டும் பகுத்துப் பகுத்துத் தனித்தனியே நிறுவினன். அவ்வேளை களிலே எல்லாம், ஆர்வத்தால் அவ்வப்பகுதிகட்குள் அடங்காது, இறைவனைத் தரிசிக்க முனைந்து வரும் அரசர்களை, நந்தி பிரம்படியினால் புடைத்து ஒதுக்க, அவ்வடிகள் அவர்களின் மகுட கோடிகளிலே பட்டு அவரை வருத்தும். இவ்வண்ணமாகக் குற்றால நாதர் இதோ பவனி வந்து கொண்டிருக்கின்றனர்!

இராகம் - பந்துவராளி தாளம் - சாப்பு

**பல்லவி**

பவனி வந்தனரே! மழவிடைப் பவனி வந்தனரே.

**அனுபல்லவி**

அவனி போற்றிய குறும்ப லாவுறை
மவுன நாயகர் எவன நாயகர்
சிவனு மாயரி அயனு மானவர்
கவன மால்விடை அதனில் ஏறியே. (பவனி)

**சரணங்கள்**

அண்டர்கூட்டமும் முனிவர் கூட்டமும்
அசுரர்கூட்டமும் மனிதர் ஆகிய
தொண்டர் கூட்டமும் இமைப்பி லாரெனச்
சூழ்ந்து தனித்தனி மயங்கவே
பண்டை நரரிவர் தேவர் இவரெனப்
பகுத்து நிறுவிய வேளை தொறுந்தொறும்
மண்ட லீசரை நந்தி பிரம்படி
மகுட கோடியிற் புடைக்கவே. (பவனி)

*(பவனி - உலா. மழவிடை - இளையதான ஏறு - அவனி - உலகம். மவுன நாயகர் - சிவதவசி. எவன நாயகர் - இளமைக்கு நாயகமாகத் திகழ்பவர். கவன மால்விடை - விரைந்த செலவினை யுடைய ஆனேறு. அண்டர் - தேவர்கள், சுரர், அசுரர் - சுராபானம் செய்யாதவர். தேவர்களின் நிரந்தரப் பகைவர். இமைப்பிலார் - இமைத்தலில்லார்; எண்ணுதற்கு அரிய திரளினார் எனவும் கூறலாம். சூழ்தல் - ஒருவரோடு ஒருவர் நெருங்கிக் கலத்தல். பண்டைநரர் - தொன்மையினையுடைய நரர். மண்டலீகர் - மண்டலங்கட்கு அதிபர்கள். மகுடகோடி - மகுடங்களின் பெருக்கம். புடைத்தல் - அடித்தல்.)*

*(2) அடியார்களுக்கு அல்லல் வாராது தடுத்துக் காப்பது ஒரு கை; அடியார் வேண்டுவனவற்றைத் தந்து கருணை பாலிப்பது ஒரு கை; தாம் தரித்த ஒளியுடைய மழுப்படையை உயர்த்தி மேலே கொண்டது ஒரு கை; தாம் தாங்கும் சிறு*

*மானைப் பிடித்திருப்பது ஒரு கை; இப்படியாக இறைவனின் நான்கு கைகளும் விளங்கும். பாம்பாகிய ஆபரணம் துலக்க மாகத் தோன்றும். தான் அழித்த ஒரு புலியானது கொடுத்த ஆடையினையும், ஆனையானது கொடுத்த மேற்போர்வை யாகிய உரியினையும் அவன் உடுத்திருப்பவன். அழகிய இடையானது அசைய அவன் விடையூர்ந்து வருகின்றான். மலரிலே வாழும் அயனானவன் கொடுத்த மண்டை யோடாகிய உண்கலம் தன் கையிலே பொருந்தியிருக்க, அவன் இதோ பவனி வந்து கொண்டிருக்கின்றனன்!*

தடுப்ப தொருகரம் கொடுப்ப தொருகரம்
தரித்த சுடர்மழு விரித்த தொருகரம்
எடுத்த சிறுமறி பிடித்த தொருகரம்
இலங்கப் பணியணி துலங்கவே
அடுத்த ஒருபுலி கொடுத்த சோமனும்
ஆனை கொடுத்தவி தானச் சேலையும்
உடுத்த திருமருங் கசைய மலரயன்
கொடுத்த பரிகலம் இசையவே. (பவனி)

*(சுடர்மழு - ஒளிவிடும் மழுவாயுதம், சிறுமறி - சிறுமான் மறி. பணியணி - பாம்பாபரணம். அடுத்த - கொன்று வென்ற, ஒரு புலி - ஒப்பற்ற வன்மையுடைய புலி. சோமன் - உடை. விதானச் சேலை - மேலாடை, புலித்தோல் உடையும், யானைத் தோல் போர்வையும் ஆம். இவை நான்கும் தாருகாவனத்து முனிவர் ஏவச் சிவபிரான் அடக்கிப் பெற்றது என்பர். திருமருங்கு - அழகிய சிற்றிடை. பரிகலம் - உண்கலம். அயன் கொடுத்த பரிகலம் - அவனுடைய மண்டையோடு. இசைதல் - விளங்குதல்.)*

*(3) தம்மைத் தொடர்ந்து வரும் ஒப்பற்ற பெருச் சாளியின் மீது ஏறியவர் மூத்த பிள்ளையாராகிய திருமகன்; அவர் ஜெயப்படை தாங்கி அவனுடன் வருகின்றார். வன்மை பொருந்திய மயில் வாகனத்தையுடைய இளவரச குமரப் பெருமான்; அவர் வெற்றி வேலினைத் தாங்கி உடன் வருகின்றார். அகன்ற மார்பினிடத்தே கொன்றை மாலை யானது விளங்குகின்றது. அது விளங்குதலால், அதனோடு மணிப்பதக்கத்தின் ஒளியும் அவன் மார்பிடத்தே கலந்து*

தேங்கிக் கொண்டிருக்கின்றது. தம்மை எல்லாம் அடியவராக உடைய தலைவனின் உலா வருகையினைக் கண்டு கண்டு உலகமெல்லாம் வளத்தால் தழைத்து ஓங்குமாறு இறையவர் இதோ திருவீதியிலே உலாவந்து கொண்டிருக்கின்றார்.

தொடரும் ஒருபெருச் சாளி ஏறிய
　　தோன்றல் செயப்படை தாங்கவே
அடல்கு லாவிய தோகை வாகனத்
　　தரசு வேல்வலம் வாங்கவே
படலை மார்பினிற் கொன்றை மாலிகை
　　பதக்க மணியொளி தேங்கவே
உடைய நாயகன் வரவு கண்டுகண்டு
　　உலகெலாந் தழைத் தோங்கவே. (பவனி)

*(பெருச்சாளி - கயமுகாசுரனாகிய பெருச்சாளி வாகனம். தோன்றல் - மகன். செயப்படை - வெற்றிப்படை. அடல் குலாவிய தோகை - ஆற்றல் நிறைந்த மயில்; அது சூரனின் பகுதியாதலால். வேல் வலம் வாங்க - வலம் வேல் வாங்க எனப் பொருள் கூட்டுக. படலை - தழை மாலையுமாம். மாலிகை - மாலை. தேங்குதல் - நிறைதல். உலகந் தழைத்து ஓங்குதல் - உலகம் வளமையால் வாழ்வு பெற்றுச் சிறப்படைதல்.)*

(4) ‘இடியின் முழக்கத்தோடு வந்துகொண்டிருக்கும் கருமேகம்’ என்னும்படியாக, யானைகளின் மேலாகவிருந்து பெரிய பெரிய பேரிகைகளின் முழக்கங்கள் ஒருபால் எழுகின்றன. உடுக்கையின் முழக்கம் ஒருபால் எழுகின்றது. இவ்விரு முழக்கங்களாலும் எழுகின்ற பேரொலியினைத் தாளாமல் அட்டதிக்குக் களிறுகளும் தத்தம் துதிக்கை களால் தத்தம் செவிகளைப் புதைத்துக் கொள்ளுகின்றன. அடியவர்கள் முழக்கிய திருப்பல்லாண்டின் இசையானது பரந்து சென்று, மூடிய அச்செவிகளைத் திறந்தது. நாயன் மார்கள் மூவரும் இறைவனின் பெருமைகளை வடித்துத் தந்த திருமுறைகள் ஒருபுறமாகவும், நான்மறைகளின் முழக்கம் ஒரு புறமாகவும் முறையே வழங்கிவர, நம் இறையவரும், திருவீதியிலே இதோ உலா வருகின்றனர்.

இடியின் முழக்கொடு படரும் முகிலென
யானை மேற்கன பேரி முழக்கமும்
துடியின் முழக்கமும் பரந்து திசைக்கரி
துதிக்கை யாற்செவி புதைக்கவே
அடியார் முழக்கிய திருப்ப லாண்டிசை
அடைந்த செவிகளும் துறக்க மூவர்கள்
வடிசெய் தமிழ்த்திரு முறைகள் ஒருபுறம்
மறைகள் ஒருபுறம் வழங்கவே! (பவனி)

(படரும் முகில் - வானிலே படர்கின்ற மேகம். பேரி - பேரிகை; துடி - உடுக்கை; குறிஞ்சி நிலத்து வாத்திய வகை. திசைக்கரி - அட்டதிக்குக் களிறுகள். திருப்பல்லாண்டு - புகழ்ப்பாக்கள்; மங்கல வாழ்த்து ஒலிகள். மூவர்கள் - அப்பர், சுந்தரர், சம்பந்தர் ஆகியோர். வடிசெய் தமிழ் - வடித்துச் செய்த தமிழ்த் திருமுறைகள் என இவற்றையும், நான்மறைகள் என வேதங்களையும் சமமாகவே குறிப்பிடுதல் காண்க.)

(5) பொன்னாற் புனையப் பெற்ற தம்புரு, கின்னரம் ஆகியவையும், மிகுந்த விருப்பத்தை எழச் செய்யும் வீணையும் இனிதே மிழற்றுகின்றன. மிகுதியான அழகுள்ள முத்துப் பல்லக்கும் திருக்குடையும் அழகிய ஆலவட்டங்களும் பெருமானுக்கு நிழல் தந்து வருகின்றன. வனிதைமார்கள் பலர் குஞ்சம், சாமரை, விசிறி ஆகியவற்றை, வரிசை வரிசையாக இருபுறமும் நின்று சுழற்றிக் கொண்டே உடன் வருகின்றனர். தன நாயகனாகிய குபேரன், இந்திரன், வருணன் முதலிய சகலமான தேவர்களும், அவன் புகழைப் பாடிக் கொண்டே உடன் வருகின்றனர். இங்ஙனமாக, நம் பெருமான் இதோ பவனி வந்து கொண்டிருக்கின்றனர்.)

கனக தம்புரு கின்ன ரங்களி
ஆசை வீணை மிழற்றவே
அனக திருமுத்தின் சிவிகை கவிகைபொன்
ஆல வட்டம் நிழற்றவே
வனிதை மார்பல குஞ்சம் சாமரை
வரிசை விசிறி சுழற்றவே

தனதன் இந்திரன் வருணன் முதலிய
சகல தேவரும் வழுத்தவே. (பவனி)

(*கனகம் - பொன். கனக தம்புரு - பொன் அழுத்திய தம்புரு. அனகம் - அநேகம் என்பதன் திரிபு. குஞ்சம் - குஞ்சங்கள். தனதன் - குபேரன்.*)

*(6) சைவர்கள் மேன்மை நிலையினைப் பெற்றனர்; சமணர்கள் கீழான நிலையினைப் பெற்றனர். சகல சமயங்களும் இவ்வுண்மையை ஏற்குமாறு அவர் எழுந்தருளிப் பவனி வருகின்றனர். தம் கையிலே வலிய சக்கரப்படையினைத் தாங்கிய கருணைக்கடலான திருமாலோடு, கமலத்தோனாகிய பிரமனும் அவரது இருபுறமும் காத்து உடன் வருகின்றனர். "ஐம்பெருங் கடவுளர்க்கும் தலைவன் வந்தனன்! அமரர் களுக்கு எல்லாம் முதல்வன் வந்தனன்! தெய்வங்கட்கெல்லாம் நாயகன் வந்தனன்!" என்று கூறித் திருச்சின்னங்கள் அடுத்தடுத்து முழங்கிக் கொண்டிருக்கின்றன. இங்ஙனமாக, நம் இறையவர் பவனி வந்து கொண்டிருக்கின்றனர்.*

சைவர் மேலிடச் சமணர் கீழிடச்
சகல சமயமும் ஏற்கவே
கைவ லாழியங் கருணை மாலொடு
கமலத் தோன்புடை காக்கவே
ஐவர் நாயகன் வந்த னன்பல
அமரர்நாயகன் வந்தனன்
தெய்வ நாயகன் வந்த னன்னெனச்
சின்னம் எடுத்தெடுத் தார்ப்பவே. (பவனி)

(*வலாழி - வல்லமையுடைய சக்கரப் படை. புடை - பக்கம். கமலத்தோன் - அயன். ஐவர் - பிரமன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் ஆகிய பஞ்சகர்த்தர்கள் என்னும் ஐம்பெருங்கடவுளர்கள்; அவர்கட்கும் முதல்வன் சிவபிரான் என்க.*)

*(7) படை வீரர் பெருக்கமும், படையணிகளின் பெருக்கமும், தேர்களின் பெருக்கமும், கொடிப்படைகளின்*

பெருக்கமும், யானைப் படைகளின் பெருக்கமும், குதிரைப் படைகளின் பெருக்கமும் தரை எங்கும் நெருக்கங் கொள்ளும் படியாக அணியணியாகத் திரண்டு வந்து கொண்டிருக் கின்றன. முதன்மையான கொடிகளின் அடர்த்தியானது பரந்த ஆகாயம் முழுவதையுமே போய் மூடின. அதனால், வானமும் இருண்டது. பின்னர், அவற்றினும் தனிப்பட்டதாகிய ஒளி பரப்பும் இடபக் கொடியானது அவற்றுக்கும் மேலாக எழுந்தது. திக்குகள் எல்லாம் தோன்றுமாறு அந்த இடபக் கொடியும் விளக்கம் பெற்று அவ்வாறு விளங்க, நம் இறையவர் எழுந்து, இதோ வீதி உலா வருகின்றனர்!

**சேனைப் பெருக்கமும் தானைப் பெருக்கமும்**
**தேரின் பெருக்கமும் தாரின் பெருக்கமும்**
**ஆனைப் பெருக்கமும் குதிரைப் பெருக்கமும்**
**அவனி முழுதினும் நெருங்கவே**
**மோனைக் கொடிகளின் காடு நெடுவெளி**
**மூடி அடங்கலும் ஓடி இருண்டபின்**
**ஏனைச் சுடர்விரி இடப கேதனம்**
**எழுந்து திசைதிசை விளங்கவே. (பவனி)**

*(தார் - கொடிப்படை. வீரர்களின் மார்பிலே விளங்கும் மாலைகளுமாம். மோனைக் கொடி - முதன்மையான தேவர்களின் கொடிகள்; அயனின் அன்னக்கொடியும், மாலின் கருடக் கொடியும், அடங்கலும் - முழுமையும். இடபகேதனம் - ரிஷபக் கொடி.)*

*(8) கொத்தான மலர்களைச் சூடிய கூந்தலினரான தெய்வ மங்கையர்கள் குரவை ஆடுகின்றனர். அவருடைய குரவை ஒலியானது கடலின் பேரலை ஓசையினையும் அடங்குமாறு செய்வது போல மிகுதியாக எழுகின்றது. தம்முள் ஒத்த திருச்செவியினரான கனக, கம்பளர் என்னும் கந்தருவர்கள் இருவருடைய பாடல்களின் இனிமையானது ஏழு உலகங் களையும் உருகச் செய்து கொண்டிருக்கின்றது. மத்தளங்கள் இடிகள்போல முழங்குகின்றன. மயில் போன்ற சாயலுடைய வரான நடன மாதர்களின் நடனங்கள் பெருக்கமாக வீதியிலே*

*நிகழ்கின்றன. சக்தி, பைரவி, கௌரி ஆகிய திருப்பெயர்களை யுடைய குழல்வாய் மொழி அம்மையானவள் பெருமானின் இடப்பாகத்திலே அமர்ந்திருக்கின்றனள். இங்ஙனமாக, நம் இறையவர், இதோ வீதி உலா வந்து கொண்டிருக்கின்றனர்.*

**கொத்து மலர்க்குழல் தெய்வ மங்கையர்**
**குரவை பரவையை நெருக்கவே**
**ஒத்த திருச்செவி இருவர் பாடல்கள்**
**உலகம் ஏழையும் உருக்கவே**
**மத்த ளம்புயல் போன்மு ழங்கிட**
**மயிலனார் நடம்பெருக்கவே**
**சக்தி பயிரவி கௌரி குழல்மொழித்**
**தைய லாளிடம் இருக்கவே. (பவனி)**

*(குரவை - குரவை ஒலி. பரவை - கடல். ஒத்த திருச்செவி இருவர் - கனக கம்பளர் ஆகிய கந்தர்வர். தும்புரு நாரதர் எனவும்; ஆகா ஊகூ என்பவர் எனவும் கூறுவர்; புயல் - இடியைக் குறிக்கும். மயிலனார் - மயிலனைய சாயலுடையரான இளைய மாதர்கள். நடம் - திருநடனம். இறைவனின் திருவிளையாடல்களைக் குறித்ததாக இவை அமையும். சக்தி, பயிரவி, கௌரி - சக்தியின் பல அம்சங்கள்.)*

*இந்த இசைப் பாடல் இறைவனின் கோலாகலமான பவனியின் வயணத்தை விரித்து விரித்து உரைத்துக் கட்டியக்காரன் சொல்லும் பாங்கிலே அமைந்தது. அதனால் அனைவரும் வந்து அவரைப் போற்றுங்கள். பணிந்து வாழ்வு பெறுங்கள் எனக் கூறி, முன்னதாகத் தான் வந்து எச்சரிக்கை முழக்குகின்றான் அவன்.*

## 4. உலாக் காணவரும் பெண்கள்

*பால் போன்ற வெண்ணிறம் உடையது. சிவபிரான் ஏறி ஊர்ந்துவருகின்ற அந்த இடபம். அதன்மேல் ஊர்ந்து வரும் திரிகூடப் பெருமானாரின் பவனியைக் காணக். கன்னி மார்கள் பலரும் திரள் திரளாக வந்து கொண்டிருக் கின்றனர். தென்றற் காற்றிலே ஏறிவரும் காமதேவனுக்காகக் கைகளிலே படைதாங்கித் துணை வருகின்ற சேனையர்*

போன்றோர் அக்கன்னிமார்கள். ஆடவர் உள்ளத்தே கலகம் விளைவிக்கும் கெண்டை மீனை ஒத்த தம் விழிக்கண்களைத் தீட்டியவர்களாக அவர்கள் வருகின்றனர். புருவங்களாகிய நெடிய விற்களை வளைத்தவர்களாக அவர்கள் வருகின்றனர். 'ஆடவர்கள் எல்லாம் மயக்கங்கொள்ளுமாறு அவர்களைப் போரிட்டு வெல்வோம்' என்று, தம் கால்களிலே விளங்கும் மாணிக்கப் பரல்களிட்ட சிலம்புகளாகிய முரசங்கள் முழக்கமிட, அவர்கள் நடந்து வருகின்றார்கள்.

**விருத்தம்**

**பாலேறும் விடையில்வரும் திரிகூடப்**
**பெருமானார் பவனி காணக்**
**காலேறும் காமனுக்காக் கையேறும்**
**படைப்ப வுஞ்சாய்க் கன்னிமார்கள்**
**சேலேறுங் கலகவிழிக் கணைதீட்டிப்**
**புருவநெடுஞ் சிலைகள் கோட்டி**
**மாலேறப் பொருதும்என்று மணிச்சிலம்பு**
**முரசறைய வருகின் றாரே.**

(பாலேறு - பாலைப் போன்ற வெண்மையான ஏறு, கால் - காற்று, தென்றல். பவுஞ்சு - சேனை. சேல் - கெண்டை. மால்ஏற - காம மயக்கம் ஏற. ஆடவரைப் பொருது மாலேறச் செய்வதற்காக, விழிக்கணைகளைத் தீட்டி, புருவச் சிலைகளைக் கோட்டிச், சிலம்புகள் முரசறைய வருகின்றனர் கன்னிப் பெண்கள். இதனால், அவர்களுடைய பருவமும் எழிலும் வசந்த காலத்தன்மையும் நன்கு விளங்கும். கண்டவர் காமுற்று நலியும் பேரழகு உடையவர் அவர்கள் என்பதும் புலனாகும்.)

## 5. கன்னியரின் பேச்சு

### (கண்ணிகள்)

ஒரு மானைப் பிடித்து வந்த பெருமானாகிய குற்றால நாதரைத் தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்ற ஒரு கோடி மான்களைப் போல ஒரு கோடி மடவார்கள் வந்தனர். அவர்களுள் அவனைப் பார்த்தவர்கள் தமக்குள் இவ்வாறாகப் பேசத் தொடங்குகின்றனர்: முப்புரி நூலணிந்திருக்கும்

*மார்பினையுடையவன் இவன். அதனால், 'இவன் அயனே' என்பார் சிலர். 'அயனாக இருந்தால் சினங்கொண்டு விளங்கும் பாம்பாபரணம் அவனுக்கு ஏது? காதுகளிலே ஒப்பற்ற சங்கக் குண்டலங்கள் ஏது? ஆகவே 'இவுன்' அயன் அல்லன்' என்று, அவருக்குப் பதிலுரைப்பார்கள் சில பேர்.*

இராகம் - புன்னாகவராளி தாளம் - சாப்பு

ஒரு மானைப் பிடித்து வந்த பெருமானைத் தொடர்ந்துவரும்
ஒருகோடி மான்கள்போல் வருகோடி மடவார். 1

புரிநூலின் மார்பனிவன் அயனென்பார் அயனாகில்
பொங்கரவம் ஏதுதனிச் சங்கம்ஏ தென்பார் 2

*(ஒருமான், பெருமான், ஒருகோடி மான் என்பன சொற்பின் வருநிலையணி. மடவார் - மடப்பத்தையுடையவரான கன்னியர். பொங்கரவம் - சினத்துடன் படம் விரித்துத் தோன்றும் பாம்பு. தனிச்சங்கம் - ஒப்பற்ற சங்காபரண மாகிய காதணிகள்.)*

*'பரந்த கருணைக்கடலான திருமாலே இவன்' என்பார் சிலர். 'இவன் திருமாலானால் இருவிழிகளின் மேலாக நெற்றிக் கண்ணாகிய மூன்றாவது விழியும் அந்தத் திருமாலுக்கு உளதாமோ? அவன் தலைமேல் சடை முடியும் உண்டோ?' எனக் கேட்டு, 'அவன் மாலும் அல்லன்' என்பார்கள் சிலர். 'அவனுடைய இரு பக்கங்களிலும் நான்முகனும் திருமாலும் வருகின்றனர். ஆகையால், அவன் ஈசனே! அவன் திரிகூட ராசனே!' என்பார்கள் அவனை அறிந்தவராகிய சிலர்.*

விரிகருணை மாலென்பார் மாலாகின் விழியின்மேல்
விழியுண்டோ முடியின்மேல் முடியுண்டோ என்பார். 3

இருபாலும் நான்முகனும் திருமாலும் வருகையால்
ஈசனிவன் திரிகூட ராசனே என்பார் 4

*(விரிகருணை - பரந்த பெருங்கருணை. முடி - தலை; சடா முடி. திரிகூடராசன் - குற்றாலநாதன். திரிகூடராசன் என்றறிந்தும் பெண்களுக்கு அவன்மீது ஆர்வம் பொங்கி எழுகின்றது. ஒவ்வொருவரும் அவன்மேற் காமுற்றுத் தத்தம் நிலை தடுமாறு கின்றனர். 'ஆடவரைப் பொருது வெல்வோம்' என வந்த அவர்கள்,*

*பெருமானின் பேரழகினால் தாமே மாலேறி மயங்கித் தன் நிலை தடுமாறி விடுகின்றனர். அவர்களுடைய மயக்க நிலையினைக் காட்டுவன அடுத்து வரும் சில கண்ணிகள்.)*

*ஒரு கையிலே வளையலை அணிந்துகொண்ட பெண்கள், தம் அடுத்த கையிலேயும் வளையலைப் பூண மறந்தவராக அவனைக் காணுவதற்கு ஓடுவார்கள். அவர்களின் நிலை தடுமாற்றத்தினைக் கண்டு நகைப்பார்கள் சிலர். அவர்களருகே சென்றதும் அப்பெண்கள் வெட்கித் தலைகவிழ்ந்து நிற்பார்கள். இரு தனங்களுக்கும் மேலாக அணியும் இரவிக்கை யினைத், தம் மயக்கத்தினால் அரையிலுடுக்கும் உடையெனக் கருதி உடுக்க முயல்வார்கள் அவர்கள். பின்னர், அரையிலே அணியும் உடையினை ரவிக்கையென மயங்கிச் சாந்தம் பூசிய தம் முலைகளுக்கு மேலே இடுவார்கள் அப்பெண்கள்.*

**ஒருகைவளை பூண்ட பெண்கள் ஒருகைவளை பூணமறந்து**
**ஓடுவார் நகைப்பவரை நாடுவார் கவிழ்வார். 5**

**இருதனத்து ரவிக்கைதனை அரையிலுடை தொடுவார்பின்**
**இந்தவுடை ரவிக்கையெனச் சந்தமுலைக் கிடுவார் 6**

*எதனையும் கருதி உணர்கின்ற மனமானது அவரை விட்டுப் புறத்தே உலாவரும் நாதனை நோக்கிப் போய்விட, ஒரு கண்ணுக்கு மை எழுத எடுத்த கையினராகவும், ஒரு கண்ணிலே மை இட்டவராகவும் தம்மை மறந்து ஓடி வருவார்கள் சில பெண்கள். 'நம் உள்ளம் கவர்ந்த மன்னவன் இவன். நல்ல நம் நகரத்துத் தெருவினிலே இவன் நெடுநேரம் நிற்கமாட்டானோ! எம்மை வருத்தும் மதனனை இன்னமும் அவன் வெல்ல மாட்டானோ?' என்று துடிதுடிப்பார் சில பெண்கள்.*

**கருதுமனம் புறம் போக ஒரு கண்ணுக்கு மையெடுத்த**
**கையுமாய் ஒரு கணிட்ட மையுமாய் வருவார். 7**

**நிருபனிவன் நன்னகரத் தெருவிலே நெடுநேரம்**
**நில்லானோ மதனை இன்னம் வெல்லானோ என்பார். 8**

*(கண்ணிட்ட - ஒரு கண்ணிட்ட மதனை இன்னும் வெல்லானோ? 'ஒரு வசனஞ் சொல்லானோ?' பாட பேதங்கள்.)*

'எம் தோள்களிலே யாம் பூண்டுள்ள வளைகளும், கழுத்திலே மறுவுடையவனாகிய தெய்வநாயகன் தன் சடையிலே முடித்த வெண்பிறையும் எம் பெண்மதிபோலத் தளர்வுற்று விளங்குகின்றனவே?' என்பார்கள் சில பெண்கள். 'நச்சுப் பையினையுடைய பாம்புகளை வளைத்துச் சூடிக் கொண்டிருக்கும் இவனுடைய உடலிலே, கிடந்து வளைந்து கொண்டிருக்கும் அந்தப் பாம்புகட்குத் தான் பசியாதோ? எம்மை வருத்துகின்ற இத்தென்றலைத் தான் புசித்து எம்மைக் காவாதோ?' என்பார்கள் சில பெண்கள்.

**மெய்வளையும் மறுவுடைய தெய்வநா யகன்முடித்த**
**வெண்மதியும் விளங்குதெங்கள் பெண்மதிபோல் என்பார் 9**

**பைவளைத்துக் கிடக்குமிவன் மெய்வளையும் பாம்புகட்குப்**
**பசியாதோ தென்றலைத்தான் புசியாதோ என்பார் 10**

'வளையலணிந்த நம் கைகள் தோள்களிலே பதியும் படியாக, இவன் மார்பிலே அழுந்தாமல் நமக்குப் பூரித்து எழுந்திருக்கும் அழகிய முலைகள்தாம் என்ன முலைகளோ? அவை எழுந்ததன் பயனைப் பெற்றிலவே' என்பார்கள் சிலர். 'மேகங்களும் வெட்கமுறும்படி யமைந்த கூந்தலினை அவிழ்ந்து தொங்கச் செய்தான்; நம் கைவளைகளைக் கவர்ந்து கொண்டான்; இஃதென்ன மாயமோ? இவன் சடைதரித்த நியாயமும் இதுதானோ?' என்பார் மற்றும் சில பேர்கள்.

**இவ்வளைக்கை தோளழுந்த இவன்மார்பில் அழுந்தாமல்**
**என்னமுலை நமக்கெழுந்த வன்னமுலை என்பார். 11**

**மைவளையும் குழல்சோரக் கைவளைகொண் டானிதென்ன**
**மாயமோ சடைதரித்த ஞாயமோ என்பார். 12**

(இவ்வாறு, இறைவன் திருவுலா வருகின்றபோது, அவனுடைய பேரழகிலே தம் மனத்தைப் பறிகொடுத்த கன்னியர் அனைவரும், தத்தம் நிலையழிந்த பித்தாகித் தளர்ந்துநின்றனர். இவர்கள் நிலை இப்படி இருக்க, 'வசந்த வல்லி' என்னும் கட்டழகுக் கன்னி ஒருத்தி வருகின்றாள். அவள் வரவையும், அதன்பின் நிகழ்வையும் எல்லாம் அடுத்து நாம் காண்போம்.)

★ ★ ★

# III. வசந்தவல்லியின் காதல்

## 1. வசந்தவல்லி வந்தாள்

*பொன்போலும் அணி செய்'தாகிய பொட்டினை நெற்றியிலே தீட்டிக் கொண்டாள்; கூந்தலிலே அழகிய மலர் மாலையினைச் சூட்டிக் கொண்டாள்; அழகிற் சிறந்த மோகினியைப் போலத் தன்னை அழகுறப் புனைந்து காட்டிக் கொண்டாள்; நன்மையுடைய குற்றால நகரத்துப் பெருமானின் முன்னர்ச் சென்று, தம் நாணமும் ஆடையும் இழந்து நின்ற கன்னியர்களுக்குத் தானும் ஒரு துணை யாவாள் போலக் காட்டிக் கொண்டவளாக, ஆடவர்கள் பகுதி எங்கணுமே காமவேளின் கலகச் செயலை மூட்டி விடுபவளே போல, வசந்தமோகினி என்பவள், தன் வீட்டினின்றும் புறப்பட்டு வெளியே தெருவில் வருவாளாயினாள்.*

**விருத்தம்**

**நன்னகர்ப் பெருமான் முன்போய்**
**நாணமும் கலையும் தோற்ற**
**கன்னியர் சநுப்போற் காட்டிக்**
**காமவேள் கலகம் மூட்டிப்**
**பொன்னணித் திலகம் தீட்டிப்**
**பூமலர் மாலை சூட்டி**
**வன்னமோ கினியைக் காட்டி**
**வசந்தமோ கினிவந்தாளே.**

*(கலை - ஆடை. சநு - உதவி. சநுப்போல் - உதவிபோல; அதாவது அவளும் துணையாவாள் போல, காமவேள் - மன்மதன். வன்ன மோகினியைக் காட்டி - அழகுள்ள மோகினிப் பெண் கண்டாரைத் தன் பேரழகால் கவர்ச்சித்து அவர் உயிரை வருத்துவாள் என்பர்; அவள்போலக் காட்டி என்க. 'அணங்கு*

கொல்' என்று குறளும் கூறும். பொன் அணித் திலகம் - பொன் அணியாகிய நெற்றிச் சுட்டியுடன் விளங்கும் பொட்டுமாம்.)

## 2. அவள் வரும் அழகு!

### (கண்ணிகள்)

பொன்னாலாகிய ஆபரணங்கள் பலவற்றையும் பூட்டிக் கொண்டாள். நெற்றிக்குத் திலகம் இட்டுக் கொண்டாள். மாரனையும் தன் கண் பார்வையினாலேயே மயங்கச் செய்பவள் போலத் தோன்றினாள். சிருங்காரத்துக்கு ஏற்ற அந்த மோகனப் பெண்ணாளான வசந்த வல்லியானவள் இப்படியாகத் தேவலோகத்து அரம்பையைப் போல வீதியிலே வந்து கொண்டிருந்தாள்.

தன்னை ஏறெடுத்துப் பார்ப்பவரின் கண்களுக்குத் தன் இரண்டு கண்களுமே ஏற்ற பதிலைக் குறிப்பாலேயே சொல்லத் திரிகூடக் கண்ணுதலைத் தன் பார்வையினாலே வென்று வசப்படுத்தப், பெண்ணுக்குப் பெண்ணும் மயக்கங் கொள்ளும் படியான பேரெழிலுடன், வசந்தவல்லியானவள், அன்னத்தின் பேடையைப் போலே, மெல்ல மெல்ல நடை பயின்று வெளியே வந்து கொண்டிருந்தாள்.

**இராகம் - கல்யாணி** **தாளம் - ஆதி**

**வங்காரப் பூஷணம் பூட்டித் - திலகந்தீட்டி**
**மாரனைக்கண் ணாலே மருட்டிச்**
**சிங்கார மோகனப் பெண்ணாள் - வசந்தவல்லி**
**தேவரம்பை போலவே வந்தாள்.** 1

**கண்ணுக்குக் கண்ணிணை சொல்லத் - திரிகூடக்**
**கண்ணுதலைப் பார்வையால் வெல்லப்**
**பெண்ணுக்குப் பெண்மயங்கவே - வசந்தவல்லி**
**பேடையன்னம் போலவே வந்தாள்.** 2

(வங்காரம் - பொன். பூஷணம் - ஆபரணம். மருட்டி - மயக்கி. சிருங்காரம் - சிற்றின்பம்; அழகுமாம். மோகனம் - மயக்கும் எழில். 'கண்ணுக்குக் கண் இணைசொல்ல' அவன் ஒரு கண்ணுக்கு இவளுடைய மற்றொரு கண்ணே இணையாகுமேயன்றி வேறொருவர் கண்ணும் இணையாகாது என்று சொல்லும்

*படியாக என்றும் சொல்லலாம். பெண்ணுக்குப் பெண் மயங்குதல் - 'பெண்ணும் மிக விரும்பிக் காமுறும் பேரழகினள் அவள்' எனக் காட்டுவதாகும். பேடையன்னம் - அன்னத்தின் பேடு; நடையழகிற்குச் சிறப்புடையது அன்னப்பேட்டின் நடை.)*

*கைகளிலே தன் ஆர்வம் தீரும் அளவுக்குச் சூடகங்களை இட்டுக் கொண்டாள். தன் போன்றவரான, பிற இள மங்கையர்களை எல்லாம் வெற்றி கொள்ளும் பொருட்டுத் தன் கண்ணிலே, தான் ஏதுமறியாதவள் போலேயொரு நாடகத் தையும் இட்டுக் கொண்டாள். ஒய்யாரமாக நடை நடந்து, இந்த வசந்தவல்லியானவள், ஓர் ஓவியத்தைப் போலே தானும் வீதியிலே வந்து தோன்றினாள்.*

*சல்லாபத்துக்குரிய, தன் மனைவியான குழல்வாய் மொழி அம்மையுடன் இன்புற்று மகிழ்கின்றவர் குற்றால நாதர். அவர் உலாவந்து கொண்டிருக்கும் நீண்ட சங்கவீதியிலே உல்லாசம் பொருந்திய நடனமாதான இரதிதேவியைப் போல விளங்கும் வசந்தவல்லியானவள், ஊர்வசியும் தன்னைக்கண்டு வெட்க முறுமாறு ஒயிலுடன் நடந்து வந்தாள்.*

**கையாரச் சூடகம் இட்டு - மின்னாரை வெல்லக்**
**கண்ணிலொரு நாடகம் இட்டு**
**ஒய்யார மாக நடந்து - வசந்தவல்லி**
**ஓவியத்தைப் போலவே வந்தாள். 3**

**சல்லாப மாது லீலர் - குற்றால நாதர்**
**சங்கநெடு வீதிதனிலே**
**உல்லாச மாது ரதிபோல் - வசந்தவல்லி**
**உருவசியும் நாணவே வந்தாள். 4**

*(சூடகம் - பெண்கள் கையணிகளுள் ஒன்று, வளை போல்வது; எனினும் அதனினும் வேறான அமைப்பும் உடையது. கண்ணில் நாடகமிடல் - கண் அசைவின் மூலம் பல வகையான கருத்துகளை உணரக் காட்டுதல். சல்லாபம் - சரச சல்லாபம். லீலர் - லீலைகளைப் புரிபவர். சங்கம் - கூட்டம். அரம்பை, ஊர்வசி - தேவலோகத்து நடன மாதர்.)*

## 3. வசந்தவல்லியின் அழகு

### (கண்ணிகள்)

*(1) இருண்ட மேகங்கள் தம்முள் சுற்றிச் சுருண்டு சுழி கொண்டு எறிந்தாற்போல விளங்கும் சுருண்ட மயிரடர்ந்த கொண்டையினாள் அவள். காதளவு ஓடிக், காணும் ஆடவர்களது நெஞ்சையெல்லாம் சூறையாடும் கயல்மீன் விழியினாள் அவள். திருத்தமான அழகினையுடைய முருக்கம் பூவினது அரும்பினைப் போலச் செக்கச் சிவந்திருக்கும் இதழ்களை உடையவள் அவள். அழகிய வில்லைப் போல வளைந்து, இளம்பிறையின் வடிவினைப் போல விளங்கி, ஒளியுடன் திகழுகின்ற நெற்றியினையும் உடையவள் அவள்.*

*(2) அரம்பையின் தேசமாகிய வானுலகத்து வில்லாகிய வானவில்லும், இவள் புருவத்தின் அழகைப் பெறல் வேண்டும் என விருப்பமுற்று ஆசையாகச் சொல்லுமளவுக்கு, அழகாகத் தோன்றும் புருவங்களையுடையவள் அவள். கருப்பஞ்சாறு போல இனித்தும், அமுதம்போல வாழ்வு தந்தும் விளங்கும் சொல்லினை உடையவளும் அவள், ஆரவாரிக்கும் கடலலைகள் கொணர்ந்து குவித்த முத்துக்களை, நிரையாகப்பதித்து வைத்தாற்போன்ற பல்வரிசையினையும் உடையவள் அவள்.*

**இராகம் - பைரவி** **தாளம் - சாப்பு**

**கண்ணிகள்**

**இருண்ட மேகஞ்சுற்றிச் சுருண்டு**
**சுழி எறியும் கொண்டையாள் குழை**
**ஏறி யாடி நெஞ்சைச் சூறையாடும்**
**விழிக் கெண்டையாள்.**
**திருந்து பூமுருக்கின் அரும்புபோ**
**லிருக்கும் இதழினாள் வரிச்**
**சிலையைப் போல்வளைந்து பிறையைப்போல்**
**இலங்கும் நுதலினாள். 1**
**அரம்பை தேசவில்லும் விரும்பி**
**ஆசை சொல்லும் புருவத்தாள் பிறர்**

அறிவை மயக்குமொரு கருவம் இருக்கும்
மங்கைப் பருவத்தாள்.
கரும்பு போலினித்து மருந்துபோல்
வடித்த சொல்லினாள் கடல்
கத்துந் திரைகொழித்த முத்து
நிரை பதித்த பல்லினாள். 2

*(இருண்ட மேகம் - மழைக் காலத்து மேகம்; அவள் கூந்தல் சுருண்டு கருமையாகத் திகழ்ந்தது என்பது கருத்து. குழை - காதணி; இங்கே காதைக் குறித்தது. சூறையாடல் - கொள்ளை யடித்தல். வரிச்சிலை - அழகிய வில். அரம்பை தேசம் - வானுலகம். கருவம் இருக்கும் பருவம் - பிறரை மயக்கி வெல்வோம் என்ற கர்வம் குடிகொண்டிருக்கும் பூரித்த எழிற் பருவம். மருந்து - அமுதம். கத்தும் - ஒலிக்கும்.*

*(3) பல்வரிசையின் அழகினை எட்டி எட்டிப் பார்ப்பது போலே மூக்கிலே விளங்கும் ஒப்பற்ற முத்துப் புல்லாக்கினையும் உடையவள் அவள். திங்களும் பழகுவதற்குரிய ஒளியுடைய வடிவ நிலைபெற்று, அழகு குடிகொண் டிருக்கும் முகத்தினையும் உடையவள். ஒளி பொருந்திய பல வகையான அணிகளை எல்லாம் புனைந்து, அதனால் கொடி படர்ந்திருக்கும் கமுகையும் வெற்றி கொண்ட கழுத்தினை யுடையவள். உலகனைத்தையும் தனக்குரிய விலையாக இட்டு எழுதி அத்துடன் இன்பநிலை இதுவே எனவும் எழுதியது போன்ற தொய்யிலாகிய எழுத்தினையும் உடையவள்.*

*(4) மணிகள் பதித்த தங்கத்தாற் செய்த அழகிய கடகங்கள் இட்டு விளங்கும் சிவந்த கைகளையும் உடையவள். எவ்விடத்தும் கச்சுக்குள் அடங்கிக் கிடப்பனவாயினும் காணக் காணத் தித்தித்துக் கிடக்கும் இரு கொங்கைகளையும் உடையவள். இறைவனடிகளிலேயே ஒன்றிக் கிடக்கும் கருத்தினரான தவசிகளின் கல்லான மனமும் சுழலும்படியாகச் செய்யும் அழகிய உந்திச் சுழியினையும் உடையவள். அந்த உந்திச் சுழிக்கும் மேலாக, ஒழுங்கு கொண்டு ஆடவரின் உள்ளத்தை விழுங்கும் சிறிய ரோம பந்தியினையும் உடையவள் அவள்.*

பல்லின் அழகைஎட்டிப் பார்க்கும்
மூக்கிலொரு முத்தினாள் மதி
பழகும் வடிவுதாங்கி அழகு
குடிகொளும் முகத்தினாள்.
வில்லுப் பணிபுனைந்து வல்லிக்
கமுகைவென்ற கழுத்தினாள் சகம்
விலையிட் டெழுதியின்ப நிலையிட்
டெழுதுந் தொய்யில் எழுத்தினாள். 3

கல்லுப் பதித்ததங்கச் செல்லக்
கடகம்இட்ட செங்கையாள் எங்கும்
கச்சுக் கிடக்கினும்தித் திச்சுக்
கிடக்குமிரு கொங்கையாள்.
ஒல்லுங் கருத்தமர்மனக் கல்லுஞ்
சுழிக்குமெழில் உந்தியாள் மீதில்
ஒழுங்கு கொண்டுளத்தை விழுங்குஞ்
சிறிய ரோம பந்தியாள். 4

*(மூக்கிலொருமுத்து - புல்லாக்கு. மதிபழகும் வடிவு - முழுமதியும் வடிவினைப் பார்த்துப் பார்த்துத் தானும் அங்ஙனம் அமைத்துக் கொள்ள வேண்டுமெனப் பழகுவதற்குரிய ஒப்பற்ற வடிவு. வல்லி - கொடி. வல்லிக் கமுகு - கொடி படர்ந்த கமுகு. 'சகம் விலையிட்டெழுதி இன்ப நிலையிட்டெழுதி' என்பன. சகம் முழுவதற்கும் அது மேலானதெனவும் இன்ப நிலையினுக்கு ஓர் உறைவிடமானது எனவும் காட்டும்.*

*கடகம் - ஒருவகைக் கையணி. எங்கும் கச்சுக் கிடக்கினும் தித்திச்சுக் கிடக்கும் - எவ்விடத்தும் கைத்துக் கிடந்தாலும் அவ்விடம் மட்டும் தித்திச்சுக் கிடக்கும் எனவும் உரைக்கலாம். கருத்தர் - இறைவன். மனக்கல்லும் - கல்மனமும், ரோமபந்தி - உரோம ஒழுங்கு.)*

*(5) உடுக்கையின் நடுவிலேயுள்ள குறுகிய பகுதியானது பெண்களின் இடையின் நுண்மைக்கு உவமையாகக் கூறப் படும். அதற்கும் உள்ளடங்கிய மிக நுண்மையான இடை யினையும் உடையவள் அவள். ஒரு கைப்பிடிக்குள்ளே*

*அடங்கிவிடுகின்ற அவ்வளவு சின்ன இடையினள். காமன், இளைஞர் உள்ளங்களை நிலையழியச் செய்து இன்புறுகின்ற ஒரு துட்டன். அவனுடைய அரண்மனை வாயிலுக்குக் கட்டி வைத்துள்ள கதலி வாழைகளைப்போல விளங்கும் அழகிய தொடைகளையும் உடையவள் அவள். அடுக்கடுக்காகப் பல வண்ணங்களையுடைய சேலையினைத் தேர்ந்தெடுத்து, அவற்றை நெறிப்படுத்திக் கொய்து, அழகாக உடுத்துக் கொண்டிருப்பவள் அவள். அன்னப் பேட்டின் நடையினுங் காட்டில் மெல்லென நடை பயின்று வரும் மென்மையான நடையினளும் அவள்.*

*(6) அலைகளின் ஆரவாரத்தையுடைய கடலினிடத்தே தோன்றிய அமுதத்தை எடுத்து, அப்படியே பெண்ணின் உருவாகச் சமைத்தது போல விளங்கும் அமுதத் திருமேனியினையும் உடையவள் அவள். அடுதல் தொழிலிலே வீமனுடைய பாகமே சிறந்தது என்பார்கள்; அத்தகையோனால் பாகம் செய்யப் பெற்றது போலப், பக்குவமுடன் காய்ச்சப்பட்டுள்ள காமப்பாலுக்கு, மேலும் மேலும் சுவையூட்டுவதற்கு ஏற்புடைய சீனியினைப் போன்றவள் அவள். நறுமணம் கொண்டுள்ள வல்லிக் கொடியினைப் போல விளங்கும் வசந்தவல்லி என்பவளினுடைய அழகின் பெருக்கமானது, அறுபத்து நான்கு சக்தி பீடங்களுள் ஒன்றாகிய திருக்குற்றாலத்திலே எழுந்தருளியிருப்பவரான திரிகூட ராசரையுங்கூடத், தம் சித்தம் உருகச்செய்யும் வண்ணம் மேற்கண்டவாறு விளங்கிற்று.*

**துடிக்குள் அடங்கியொரு பிடிக்குள்**
**அடங்குஞ்சின்ன இடையினாள் காமத்**
**துட்டன் அரண்மனைக்குக் கட்டும்**
**கதலிவாழைத் தொடையினாள்.**
**அடுக்கு வன்னச்சேலை எடுத்து**
**நெறிபிடித்த உடையினாள் மட**
**அன்ன நடையிலொரு சின்ன**
**நடைபயிலும் நடையினாள். 5**

வெடித்த கடலமுதை எடுத்து
வடிவுசெய்த மேனியாள் ஒரு
வீமப் பாகம்பெற்ற காமப்
பாலுக்கொத்த சீனியாள்.
பிடித்த சுகந்தவல்லிக் கொடிபோல்
வசந்தவல்லி பெருக்கமே சத்தி
பீடவாசர்திரிகூட ராசர் சித்தம்
உருக்குமே. 6

*(காமத் துட்டன் - காமனாகிய துஷ்டன், அல்லது காமத்தை எழுப்பிக் கலகம் விளைவிக்கும் துஷ்டன். அவனுடைய அரண்மனை மன்மத பீடம். அதற்குள் வரவேற்கும் கதலி வாழைகள் போன்ற தொடைகள். 'துடிக்குளடங்கும்' துடியுள்ள டங்கும் என்பதும் பாடம். நெறிபிடித்தல் என்பர். கொய்சுதல். இதனைக் கொசுவம் வைத்தல் என்பர்.)*

*'வெடித்த கடலமுது' எனக்கொண்டு, 'கடலைக் கடைந்து பெற்ற கடலமுது' எனவும் கொள்ளலாம். வடிவு - உருவு. சீனி - சர்க்கரை, சத்திபீடம் அறுபத்து நான்கு எவை எவை என்பதனைத் தேவி புராணங்களுள் காண்க. இக்கண்ணிகள் வசந்தவல்லியின் லட்சணங்களைக் கேசாதி பாதமாக முறையே குறிப்பிட்டு வருணிப்பன. அந்த வருணனைகளின் நயத்தினைப் பொருளுணர்ந்து அறிந்து இன்புறுக. பெருக்கம் - செருக்கம் என்பதும் பாடம்; கர்வமுடன் விளங்குவது என்பது அதற்குப்பொருள்.*

## 4. பந்தடி பயிலுதல்

*சிவபெருமான் விளங்கிய மெய்யறிவினை உடையவர். அவருடைய திரிகூட நகரத்திலே மேலே சொல்லிய பேரழகினை உடையவளான வசந்தவல்லி என்பவள், தன் வீட்டினின்றும் வெளியே வந்து தோன்றினாள். 'தாவித் தாவிக் குதிக்க வேண்டும்' என்ற விளையாட்டு ஆர்வத்தினாலோ, அல்லது பணைத்த கொங்கைகள் பூரித்துள்ள பருவத்தின் குறும்பினாலோ, அவள் தன் தோழியருடன் பந்தடிக்கத் தொடங்கினாள். சங்கு வளைகள் விளங்கும் கைகள் சிவக்கும்*

படியாக, நாலடி தூரம் முன்னுக்குத் தாவியும், பத்தடி தூரம் பின்னுக்கு வாங்கியும், அவள் ஒய்யாரமாகப் பந்தாடினாள்.

**வித்தகர் திரிகூடத்தில் வெளிவந்த வசந்தவல்லி**
**தத்துறு விளையாட்டாலோ தடமுலைப் பணைப்பினாலோ**
**நத்தணி கரங்கள் சேப்ப நாலடி முன்னே ஓங்கிப்**
**பத்தடி பின்னே வாங்கிப் பந்தடி பயில்கின் றாளே.**

(திரிகூடம் - மூன்று மலை முடிகளையுடைய இடம். இப்பகுதியை அரசாண்ட குறுநில மன்னர்கள் திரிகூடப் பதிகள் எனப்படுவதும் காண்க. தத்துறுதல் - தாவுதல், பணைப்பு - பூரிப்பு. நத்து - சங்கம். ஓங்குதல் - முன்போதல். வாங்குதல் - பின்போதல். இவள் விளையாடிய பந்து இந்நாளிலே நாம் உந்துபந்து (வாலிபால்) என்கிறோமல்லவா அதுபோன்ற வோர் பந்து விளையாட்டுப் போலும். கைகள் சிவக்க, அவள் பந்தடித்தனள் என்பதனால் அங்ஙனம் உய்த்து உணரலாம்.)

## 5. பந்தாடிய சிறப்பு

அப்படி, வசந்தவல்லியானவள் பந்தடிக்கும்போது அவளுடைய செங்கைகளிலேயுள்ள வளையல்கள் 'கலீர் கலீர்' என்றும், 'செயம் செயம்' என்றும் ஒலி முழங்கின. 'இடை இனி நிலைத்திருப்பதே சந்தேகந்தான்' என்று சிலம்புகள் புலம்பிக் கொண்டிருக்க, அவற்றுடன் தாமும் கலந்து புலம்புவது போலத் தன்டைகளும் சேர்ந்து ஒலி முழங்கின. அவளுடைய இரு கொங்கைகளும் வடிவமைதியிலே தம்மைப் போன்று விளங்கும் கொடிய எதிரியான பந்தினை வென்று விட்டோம்' என்று குதூகலிப்பன போலக் குழைந்து குழைந்து குதித்து ஆடிக் கொண்டிருந்தன. இப்படியாக, மலர்களையுடைய பசுங்கொடி போல விளங்கும் நங்கையான, வசந்தவல்லி என்னும் அந்த அழகியானவள் பந்தடித்துக் கொண்டிருந்தாள்.

மிகவும் பெரிய காதணிகளோடு நெருங்கிய கயல்மீன் களையொத்த விழிகள் இரண்டும் புரண்டு புரண்டு ஆடிக் கொண்டிருந்தன. மேகம் போன்ற கூந்தலிலே மொய்த்துக் கொண்டிருந்த வண்டுகள் கலைந்து போதலைக் கண்டு,

*மதனனின் சிலையிலே நாணாக விளங்கும் வண்டும், அவற்றுடன் கலந்து உடனே போயிற்று. இனி, 'இங்கு இவள் பந்தடிக்கும் இந்த நிலையினைக் கண்டால், ஆடவர் உலகமானது என்ன பாடுதான் படுமோ?' என்று கவலைப் படுவது போல, அவளுடைய இடையும் துவண்டு துவண்டு வாட்டமடைந்தது. மலர்க்கரசாகிய தாமரை மலரிலே வீற்றிருக்கும் திருமகள் போன்ற நங்கையாகிய அந்த வசந்தசவுந்தரி, அவ்வாறு எழிலுடன் பந்தடித்துக் கொண் டிருந்தாள்.*

இராகம் - பைரவி தாளம் - சாப்பு

**கண்ணிகள்**

செங்கையில் வண்டு கலின்கலின் என்று
செயம் செயம் என்றாட இடை
சங்கதம் என்று சிலம்பு புலம்பொடு
தண்டை கலந்தாட இரு
கொங்கை கொடும்பகை வென்றனம் என்று
குழைந்து குழைந்தாட மலர்ப்
பைந்கொடி நங்கைவசந்த
சவுந்தரி பந்து பயின்றனளே. 1

பொங்கு கனங்குழை மண்டிய கெண்டை
புரண்டு புரண்டாடக் குழல்
மங்குலில் வண்டு கலைந்தது கண்டு
மதன் சிலை வண்டோட இனி
இங்கிது கண்டுல கென்படும் என்படும்
என்றிடை திண்டாட
பங்கய மங்கை வசந்த சவுந்தரி
பந்து பயின்றனளே. 2

*(செங்கை - சிவந்த முன்னங்கை. வண்டு - கரு வளையல்கள். செயம் - வெற்றி. சங்கதம் - சந்தேகம். புலம்பு - ஒலி. குழைதல் - துவள்தல். பொங்குதல் - மிக்கிருத்தல். மண்டுதல் - நெருங்குதல். மங்குல் - மேகம், கூந்தல். மதன்சிலை வண்டு -*

மதனனின் கருப்பு வில்லிலே நாணாக விளங்கும் சுரும்பு. மலர்ப் பங்கய மங்கை - திருமகள்.)

சூடகம் அணியப் பெற்றிருக்கும் முன்கைகளிலே அணிந்துள்ள வெள்ளிய வளையல்கள் தம்மருகே தோன்றக் கண்டு, தோள் வளைகளும் மேலெழுந்தாடின. புனைந் துள்ள பாடகமும், சிறுபாதச் சிலம்பும் மேலும் கீழுமாக எழுந்தாடி அவை அங்கொரு பாவனை கொண்டவை போல ஆடிக்கொண்டிருந்தன. நன்மை விளங்கும் நகரமாகிய திருக்குற்றாலத்து வீதியிலே, அழகிய பொன்கொடி போன்ற ஒயிலினளான அந்த வசந்தவல்லியானவள், நடனம் ஆடிக் கொண்டிருக்கும் ஒரு தோகை மயிலினைப் போலவே, ஒய்யாரமாகத் துள்ளித் துள்ளி அவ்வாறு பந்தடித்துக் கொண்டிருந்தனள்.

"இவள் திருமகளோ? இவள் இரதி தேவியோ? இவள் தேவலோகத்து அரம்பையோ? இவள்தான் அன்று அசுரரை மயக்கிய மோகினியோ?" என்று எல்லாம் கண்டோர் தம்மை மறந்து வியந்து நின்றனர். "மனம் முந்தியதோ? விழி முந்தியதோ? கரங்கள் முந்தினவோ?' என்னும்படியாக, அவள் துள்ளித் துள்ளிப் பந்தாடினாள். சந்திரனைச் சூடியிருக் கின்றவர், குறும்பலாவின் அடியிலே வீற்றிருக்கும் ஈசுவரர்; அவர் உலாவர, அவரைக் காண விரும்பிய தொண்டர் கூட்டம் நெருங்கியிருக்கும் சங்க வீதியிலே, பசிய வளைகளணிந்த நங்கையான வசந்தவல்லியானவள், இவ்வாறாகப் பந்தாடிக் கொண்டிருந்தனள்.

சூடக முன்கையில் வால்வளை கண்டிரு
    தோள்வளை நின்றாடப்      புனை
பாடக முஞ்சிறு பாதமும் அங்கொரு
    பாவனை கொண்டாட      நய
நாடகம் ஆடிய தோகை மயிலென
    நன்னகர் வீதியிலே      அணி
ஆடகவல்லி வசந்த வொய்யாரி
    அடர்ந்துபந் தாடினளே!      3

இந்திரை யோவிவள் சுந்தரி யோதெய்வ
ரம்பையோ மோகினியோ மன
முந்திய தோவிழி முந்திய தோகர
முந்திய தோவெனவே உயர்
சந்திர சூடர் குறும்பல வீசுரர்
சங்கணி வீதியிலே மணிப்
பைந்தொடி நாரி வசந்த ஒய்
யாரிபொற் பந்து கொண்டாடினளே! 4

(வால்வளை - வெண்மையான சங்கு வளையல்கள். புனை பாடகம் - புனைதற்றொலினையுடைய பாடகம். சிறுபாதம் - பாதச்சிலம்பு; அன்றிப் பாதமெனவே கொள்ளவும் செய்யலாம். அப்போது 'பாடகமும் பாதமும் துள்ளித்துள்ளி நடனத்திலே அங்கொரு பாவனையினைக் கொண்டவைபோல ஆட' என்க. நாடகம் - நடனம். ஆடகவல்லி - ஆடிக் கொண்டிருக்கும் அழகிய பூங்கொடி போன்றவள். ஒய்யாரி ஒய்யாரத்தினை உடையவள். இந்திரை - இந்திராணியெனவும்; சுந்தரி - திருமகள் எனவும் கொள்வர்; அதனினும் இதன்கண் கூறியதே சிறப்புடைத்தென்க. சந்திர சூடர் - சந்திரனைச் சடையிலே சூடியிருப்பவர்; சிவபெருமான். சங்கணி வீதி - கூட்டம் அணிவகுத்து நிற்கின்ற அவர் உலாவரும் சங்கவீதியாகிய திருவீதி. மணிப்பைந்தொடி - மணிகள் பதித்த பசிய வளைகளும் ஆம்; இக்காலத்துக் கல்லிழைத்த வளைகள்போல என்க.)

## 6. பந்தாடலின் சிறப்பு

பூங்கொத்துகள் அணிந்துள்ள அழகிய கூந்தலானது அவிழ்ந்து தொங்கியது. அப்படித் தொங்கிய வண்ணமாக அவள் முன்னால் அடியிட்டும், பின்னால் அடியிட்டும், இடையிலே மூன்றடி நாலடியிட்டு நடந்து சென்றும், விரைந்து மாதர்கள் கூட்டத்திலே ஒரு கலகலப்பு ஏற்பட, இடசாரி வலசாரியாகச் சுற்றிச்சுற்றி வந்தவளாகத், தன் சகிமார்கள் சூழப், பந்தடித்துக் கொண்டிருந்தனள். கொடிய காமனின் படையான அவள், அங்ஙனம் இளைஞரை வெல்லப் போரிடலிலே ஈடுபட்டிருந்த பாவனையைப் பார்த்த

ஆண்களோ, 'இதனைப் பார்க்கப் பிரமன் நமக்கு ஆயிரம் கண்களைப் படைத்தானில்லையே?' என்றுதான் எண்ணி ஏங்கிக் கொண்டிருந்தனர்.

கொந்தடிப்பூங் குழல்சரிய நன்னகரில்
வசந்தவல்லி கொடிய காமன்
முந்தடிபிந் தடியிடைபோய் மூன்றடிநா
லடிநடந்து முடுகி மாதர்
சந்தடியில் திருகியிட சாரிவல
சாரிசுற்றிச் சகிமார் சூழப்
பந்தடிக்கும் பாவனையைப் பார்க்கவயன்
ஆயிரங்கண் படைத்தி லானே!

(கொத்து - பூங்கொத்து, பூங்குழல் - அழகிய கூந்தல். முடுகி - விரைந்து. திருகி - சுற்றிச் சுற்றி வந்து. இது கண்டோர் கூறுதல் என்ற முறையிலமைந்தது.)

## 7. விந்தை! விந்தை!

வசந்த சுந்தரியானவள், இவ்வண்ணம் ஒரு விந்தையான முறையிலே பந்தாடினாள். மந்தரமலை போன்ற முலைகள் தம் பகையோடு அவள் உறவுகொண்டாடுதலைக் கண்டு துள்ளித் துள்ளி ஊசலாடின. அவள் காதுகளிலே விளங்கும் மகரக் குழைகளோ, அவள் துள்ளி விளையாடுதலால் ஊசலாடின. அழகிய விழிகளோ ஆடவர் உள்ளங்களிலே பூசலிட்டுக் கொண்டிருந்தன. இப்படியாகத், 'தொங்கத் தொங்கத் தொங்கத் தொம்மென' அந்த வசந்த வல்லியானவள் பந்தடித்துக் கொண்டிருந்தனள். பொன்னின் ஒளியினிலே, இடையிடையே வந்து தாவும் மின்னலின் ஒளி போலத் தன் தோழிமாருடன் சொல்லாடலின் இனிமையையும் அநுபவிக்க விரும்பி அவருடன் கூடிக் கூடி நன்னகராகிய குற்றாலத்தின் புகழினைப் பாடிப் பாடி, 'நகுர்தத் திகுர்தத் தகுர்தத் தொம்மென' வசந்தவல்லியானவள் தாவியாடிப் பந்தடித் தனள்.

இராகம் - காம்போதி

தாளம் - ஆதி

**பல்லவி**

பந்தடித்தனளே வசந்த சுந்தரி -
விந்தையாகவே (பந்)

**அனுபல்லவி**

மந்தர முலைகள் ஏசலாட
மகரக் குழைகள் ஊச லாடச்
சுந்தரவிழிகள் பூசலாடத்
தொங்கத் தொங்கத் தொங்கத்
தொம் மெனப் (பந்)

**சரணம்**

பொன்னின் ஒளிவில் வந்து தாவிய
மின்னின் ஒளிவு போலவே
சொன் னயத்தினை நாடி நாடித்
தோழியருடன் கூடிக் கூடி
நன் னகர்த்திரி கூடம் பாடி
நகுர்தத் திகுர்தத் தகுர்தத் தொம்மெனப் (பந்)

*(பொன்னின் ஒளிவடிவினராகத் தோழியரையும் அவரிடையே சொன்னயத்தினை வந்து நாடிக் கூடும் வசந்த வல்லியை மின்னின் ஒளியினளாகவும் உவமித்த உவமையின் நயம் காண்க. சொன்னயம் - சொல்லாடிப் பெறுகின்ற இன்பம்.)*

## 8. நாதனை எதிர் கண்டாள்!

தொண்டர்களின் கூட்டம் நிரம்பியிருக்கின்ற அந்தச் சங்க வீதியிலே அந்த வசந்தவல்லியானவள் அப்படியாக வந்தனள். அவள் குதிகால்களாகி இரு பந்துகளும் தாவித் தாவி ஆடுவன போலக் குதியிட்டு வந்தன. அவள் நடக்கும் பொழுது இரு பந்துகள் போன்ற முலைகளுமோ அவள் நடையின் அசைவிற்கு ஏற்பத் தரமும் குதித்தாடின. தான் ஆடிய ஒரு பந்தினைக் கையிலே கொண்டாடியவளாக அவளும் வந்தாள். செப்புப் பதுமைபோன்ற அவளிடத்தே அப்படியாக ஐந்து பந்துகளும் தெளிவுகொண்டு ஆடும் வண்ணம் வித்தையாடு

கின்ற சித்தரான திரிகூடநாதரை, அவளும், தனக்கு எதிராகப் பவனி வரக் கண்டனள்.

**வருசங்க வீதி தன்னில் வசந்தபூங் கோதை காலில்**
**இருபந்து குதிகொண் டாட இருபந்து முலைகொண்டாட**
**ஒருபந்து கைகொண் டாடஒரு செப்பில் ஐந்து பந்தும்**
**தெரிகொண்டு வித்தை யாடும் சித்தரை எதிர்கண்டாளே.**

(பந்து என உருட்சிபற்றி உவமித்தனர் என்க. அனைத்தையும் உள்நின்று இயக்குபவனும் ஈசனே! அதனால் அவளை அவ்வாறு ஆடிவரச் செய்து வித்தை ஆடும் சித்தன் அவன்; என்கிறார். 'அன்றிப் பஞ்சபூதங்களையும் ஊழி முடிவிலே மாயையுள் ஒடுக்கி விளையாடுபவன் அவன்' என்றும் பொருள் கொள்ளலாம்.

## 9. கண்டாள்! வியந்தாள்!

"சித்து வேலையில் வல்லவர் இவர்தாம் யாவரோ? வெகு வேடிக்கைக்காரராக, எருதின் மேலே ஏறி வருகின்றாரே? இவர் யாவரோ?

"மார்பினிலே நாகாபரணத்தைப் பூண்டுள்ளார். நஞ்சுக் கறையைக் கழுத்திலே கொண்டுள்ளார். காகங்கூட அணுக வராதபடி எப்புறத்தும் காடு கட்டிக்கொண்டு, தம் இடப் பாகத்திலே, பச்சைக் கிளிபோல ஒரு பெண்ணையும் வைத்திருக்கின்றார். அதனாலும் தீராத மோகம் தீரப் பெறுவதற்கு போலும். மற்றொரு பெண்ணைத் தன் சடை முடியிலும் வைத்திருக்கின்றார்? இவர்தாம் யாவரோ?

"திருமேனியிலே சிவப்பு வண்ணத்தின் அழகு இருக்கின்றது. திருக்கையிலே மழுவாயுதத்தின் அழகும் விளங்குகின்றது. மைதீற்றிக் காண்பாராயின் மயக்கங் கொள்ள மாட்டார்களோ? சிவந்த சடையின் மேலேயோ திங்கட் கொழுந்தான ஒரு பிறை இருக்கவும், அது நடுங்குமே எனக் கூடப் பாராமல் அவர் அணிந்துள்ள பாம்பு அடிக்கடி படத்தை விரித்துக் கொண்டிருக்கின்றதே? அம்மாவோ?

"அருட்கண்ணின் பார்வையினால் என் மேனியெல்லாம் தங்க நிறங்கொள்ளும்படியாக, அவர் என்னை உருக்கிப்

*போட்டாரே! இவரைக் கண்டவுடன் இவருடைய இவ்வழகுப் பெருக்கங்களை எல்லாம் பார்க்கப் போனால் எங்கள் திருக்குற்றால நாதர் போலேயும் ஒவ்வொரு சமயங்களிலே அவர் செய்யும் மாயங்கள் எல்லாம் இருக்கின்றனவே? இந்தச் சித்தர்தாம் யாவரோ?" இப்படி எண்ணி எண்ணி மயங்கினாள் வசந்தவல்லி.*

இராகம் - அடாணா

தாளம் - ரூபகம்

**பல்லவி**

இந்தச் சித்தர் ஆரோ - வெகு
விந்தைக் காரராக விடையி லேறி வந்தார் (இந்தச்)

**சரணங்கள்**

நாகம் புயத்திற் கட்டி நஞ்சு கழுத்திற் கட்டிக்
காகம் அணுகாமல் எங்கும் காடு கட்டிப்
பாகந் தனிலொரு பெண் பச்சைக்கிளிபோல் வைத்து
மோகம் பெற வொருபெண் முடியில் வைத்தார்.(இந்தச்)

மெய்யிற் சிவப்பழகும் கையில் மழுவழகும்
மையார் விழியார் கண்டால் மயங்காரோ?
செய்ய சடையின் மேலே திங்கட் கொழுந்திருக்கப்
பையை விரிக்கு தம்மா பாம்பு சும்மா. (இந்தச்)

அருட்கண் பார்வை யாலென் அங்கந் தங்கமாக
உருக்கிப் போட்டார் கண்ட உடனேதான்
பெருக்கம் பார்க்கில் எங்கள் திருக்குற்றாலர்போலே
இருக்கு திவர்செய் மாயம்ஒருக் காலே. (இந்தச்)

*(காடுகட்டுதல் - வேலி வளைத்துக் கட்டுதல். பச்சைக் கிளி - உமையம்மை. முடியில் வைத்த பெண் - கங்கை. மழு - மழுவாயுதம். பை - படம். அங்கம் தங்கமானது மோகத்தால் மேனி பசலை படர்ந்து பொன்னிறம் பெற்றது. பெருக்கம் பார்த்தல் - அனைத்தையும் ஒருசேர நோக்கிக் காணுதல். சும்மா - அடிக்கடி. 'அரிக்கண் பார்வையிலே அனங்கன்றங்கமாக' என்றும் பாடம் - நெற்றிக்கண்ணால் பார்த்து மன்மதனை எரித்தவர் என்பது கருத்து.)*

## 10. மயங்கி நின்றாள்!

"இளந்திங்களைச் சடையிலே முடித்தவர் இவர் என்பதைக் காண்பாயாக. அதனால், இவரே திரிகூடச் செல்வர் என்பதனையும் அறிவாயாக. எவ்விடத்துக்கும் உள்ள சித்துகளுக்கு எல்லாம் தலைவர் இவரேதாம்" என்று, நங்கைமார்கள் பலரும் கூறினர். அந்த நன்மொழிகளாகிய தேறலை, வசந்தவல்லியும் ஆர்வமுடனே பருகினாள். மங்கையாம் அந்த வசந்தவல்லி, அதன்பால் மன ஈடுபாடும் கொண்டாள்! அவர்மீது மையலும் கொண்டாள்!

### விருத்தம்

**திங்களை முடித்தார் கண்டாய் திரிகூடச் செல்வர் கண்டாய்**
**எங்குள சித்துக் கெல்லாம் இறையவர் இவரே என்று**
**நங்கைமார் பலரும் கூறும் நன்மொழித் தேறல் மாந்தி**
**மங்கையாம் வசந்தவல்லி மணங்கொண்டாள்! மயல்**
**கொண்டாளே!**

*(சித்து - மாயவித்தைகள். அதனைச் செய்பவர் சித்தர். 'தேறல் மாந்துவார் மயங்குவதுபோல, அந் நன்மொழி தேறல் மாந்தி அவளும் மயங்கினாள்' என்க. மனங்கொள்ளல் - மன ஈடுபாடு கொள்ளுதல்.)*

## 11. உருகினாள்! உருகினாள்!

அகத்திய முனிவர் போற்றிப் பரவுகின்ற அந்த இனியவனும் இவன்தானோ? வேதங்களாகிய பலாவின் முழுக் கனியும் இவன் தானோ? அக்கனியிலே வைத்த செந்தேனோ? பெண்களின் கருத்துகளை உருக்குவதற்கென்றே இப்படி எழுந்து உலா வந்தானோ? இளஞாயிறு போன்ற சிவப்பு அழகினையும், அழகிய கழுத்திலே தோன்றும் கறுப்பின் அழகினையும் பாம்பணி விளங்கும் இரு காதுகளின் அழகினையும் காணப்பெற்றால் பொற்பாவைகளும் அந்த அழகுக்கு வசமாகி உருகிவிட மாட்டாவோ?

அவன். அந்த அழகன், அவனைக் கண்டதும் என் மனமும் தானே உருகுகின்றதே? ஒரே மயக்கமாய் வருகின்றதே? 'மோகம்' என்று சொல்வார்களே, அதுவும் இதுதானோ?

*இதனை நான் முன்னமேயே அறியேனோ? மேனி முழுவதும் பசந்துபோய் விட்டேனே? பெற்ற தாயின் சொல்லையும் இன்று கசப்பாகக் கருதினேனே? அவன்பாற் கொண்ட தாகமன்றி வேறெதுவும் பூணேனே? என் கைகளிலே அணிந்து வந்த வளைகளையும் அங்கே இருக்கக் காணேனே? ஐயோ! என்ன செய்வேன்? இப்படி அவள் காதலுற்றுத் தன் நிலைகுலைந்து நின்று புலம்பினாள்.*

இராகம் - புன்னாகவராளி தாளம் - ரூபகம்

**கண்ணிகள்**

முனிபரவும் இனியானோ - வேத
முழுப்பலவின் கனிதானோ
கனியில் வைத்த செந்தேனோ - பெண்கள்
கருத்துருக்க வந்தானோ?
தினகரன்போற் சிவப்பழகும் - அவன்
திருமிடற்றிற் கறுப்பழகும்
பனகமணி இருகாதும் - கண்டால்
பாவையுந்தான் உருகாதோ? 1

வாகனைக்கண் டுருகுதையோ - ஒரு
மயக்கமதாய் வருகுதையோ
மோகமென்ப திதுதானோ - இதை
முன்னமேநான் அறிவேனோ?
ஆகமெல்லாம் பசந்தேனே - பெற்ற
அன்னை சொல்லும் கசந்தேனே
தாகமின்றிப் பூணேனே - கையில்
சரிவளையும் காணேனே? 2

*(முனி - அகத்திய முனி. வேதப்பலவின் முழுக்கனி - வேதங்கள் அனைத்தின் பொருளாகவும் அமைந்த இறையவன். கனியின் செந்தேன் - அவன் அடியவர்களுக்காக உருவத் திருமேனி காட்டி வருவது வேதசாரம். தினகரன் - உதய சூரியன். கறுப்பு - நச்சுக் கறை. பனகம் - பாம்பு. வாகனம் - வாகான உடலினன்; அழகன். மயக்கம் - காம மயக்கம். வேத, பெண்கள்*

*அவன் கண்டால் ஒரு, இதை பெற்ற கையில், இச்சொற்கள் முன் வெளிவந்த சில பிரதிகளில் இல்லை.)*

## 12. தோழியரின் புலம்பல்

*இவள் நடையழகினைக் கண்டால் அன்னமும் தோற்றுப் போகுமே! நம் நன்னகரிலேயுள்ள வசந்தவல்லியான இவளோ, ஏற்றூர்தி கொண்டவனின் எதிரே போய்த், தெருவிலே கூட்டமிட்டுள்ள பலருமறியத் தன் சங்கு வளைகளைத் தோற்று நிற்கின்றாளே? சடை கொண்டானின் உடையாகிய திகம்பரக் கோலத்தைத் தான் ஏற்றுக்கொண்டு, அவனுக்குத் தன்னுடைய உள்ளத்தையும் பறிகொடுத்து நிற்கின்றாளே? நம் ஐயனான அவன், இவள் உடை கவர்ந்த வழுக்கினால்தானோ, இவள் அவன் செல்கின்ற தேராகிய நிலத்தினைத் தனக்கும் புகலிடமாகக் கொண்டனள்? (அவள் மயங்கித் தெருவிலே விழத் தோழியர் இப்படிக் கூறினர்.)*

### விருத்தம்

**நடைகண்டால் அன்னம் தோற்கும்**
**நன்னகர் வசந்தவல்லி**
**விடைகொண்டான் எதிர்போய்ச் சங்க**
**வீதியிற் சங்கம் தோற்றாள்**
**சடைகொண்டான் உடைதான் கொண்டு**
**தன்னுடை கொடுத்தாள் ஐயன்**
**உடைகொண்ட வழக்குத்தானோ**
**ஊர்கின்ற தேர்கொண் டாளே.**

*('சங்கம் தோற்றாள் - ஆடையும் தோற்ற போது நாணத்தால் தன்னை மறைக்க நிலத்திலே மயங்கி வீழ்ந்தாள்' என்க. சடை கொண்டான் உடை - நிர்வாணம். பூமியை இறைவன், தேராகக் கொண்ட கதை புராணங்களுட் காணப்படும். 'காமத்தால் உடை நெகிழ நிற்றல்' - இயல்பு.)*

## 13. தோழியரின் ஐயுறவு!

*'நமக்கு நேசமான குற்றாலநாதர் மீது ஆசை கொண்டதனால் மயங்கிப் பூமியில் இப்படி வீழ்ந்தாளே!'*

*என்பார் சிலர். விளையாட்டை மறந்தாள். பாடவும் மறந்தாள். வாடாத மாலைகளைச் சூடவும் மாட்டாள்; பாருங்கள்! என்பார் சிலர். 'காமமாகிய பேய் தான் பிடித்துவிட்டதோ? அல்லது பித்தம்தான் கொண்டனளோ?' என்பார் சிலர். 'என்ன மாயமோ?' என்பார் வேறு சிலர். 'ஐயோ! என் செய்வோம்? என்று பதறுவார் சிலர். 'தெய்வமே' என்று வேண்டுவார் சிலர் 'களைப்பாய் விட்டதோ?' என்பார் சிலர். 'மூச்சு இருக்கின்றதோ?' என்பார் சிலர். கையிலே திருநீறு எடுப்பார் சிலர். இப்படியாகப் புலம்பிய பெண்கள் எல்லாம் இறுதியாக, 'சூலக் கையானே! திரிகூட நாதனே! கண் பாராய்!' என்று வாய்விட்டுப் புலம்பி இறைவனை நோக்கி வேண்டி னார்கள்.*

இராகம் - தோடி தாளம் - சாப்பு

**கண்ணிகள்**

ஆசைகொண்டு பாரில் வீழ்ந்தாள்
நேசமான் என்பார் விளை
யாடாள் பாடாள் வாடா மாலை
சூடாள்காண் என்பார்
பேசிடாத மோசம் என்ன மோசமோ
என்பார் காமப்
பேயோ என்பார் பிச்சோ என்பார்
மாயமோ என்பார்! 1

ஐயோ என்ன செய்வ மென்பார்
தெய்வமே என்பார் களைப்
பாச்சோ என்பார் மூச்சே தென்பார்
பேச்சேதோ என்பார்
கையில் திரு நீறெடுப்பார் தையலார்
எல்லாம் சூலக்
கையாதிரி கூடநாதா கண்பாராய்
என்பார். 2

*(வசந்தவல்லி காமுற்று மயங்கித் தரையிலே வீழ்ந்த நிலை யினைக் கண்டதும் அவளுடைய தோழிமார்கள் எல்லாம்*

*இவ்வாறு வாய்விட்டுப் புலம்பினார்கள். ஒவ்வொருவரும் அவளுடைய மயக்கத்தின் காரணமாக, ஒவ்வொன்றைக் கூறினர். இறுதியிலே அனைவருமாக 'திரிகூடனாதா! இவளைக் காப் பாற்றுவாயாக!' எனச் சிவனருளை வேண்டுகின்றனர்.)*

## 14. வெதுப்பினார்கள்!

'வானவரான திருக்குற்றாலநாதரின் மீது கொண்ட மையலினாலேயே வசந்தவல்லியானவள் தன்னுடல் சோர்ந்து வீழ்ந்தனள்' என்பதை அப் பாங்கியர் முடிவிலே அறிந்தனர். அறிந்த உடனே, அவளைத் தூக்கிக் கொண்டு போய்த், தமனிய மாடத்திலே சேர்த்தனர். அரிய அழகுத் தோற்றத்தினை யுடையவரும் மின்னலைப் போன்ற ஒளி பொருந்திய சாயலினை உடையவருமான அப்பெண்கள், கிணற்றுள்ளே தவறி விழுந்தவர்களை எடுப்பதற்குக், கூனையைக் கிணற்றினுள் இறக்கிவிட்டாலும், அறியாமல், அதனால் மேலும் அவரை அந்த நீரினுள்ளேயே அமிழ்த்துகின்ற அறியாமையுடையவர்களைப் போலே, வசந்தவல்லியின் உடலின் வெப்பம் தணியுமாறு, குளிர்ச்சியான கலவைகளைப் பூசிப் பூசி, மேலும் அவளுடைய உடல் நோயை அதிகமாக்கிக் கொண்டே யிருந்தனர்.

### விருத்தம்

வானவர் திருக்குற் றாலர்
மையலால் வசந்த வல்லி
தானுடல் சோர்ந்தாள் என்று
தமனிய மாடஞ் சேர்த்து
மேனியார் அழகு தோற்ற
மின்னனார் விழுந்த பேரைக்
கூனைகொண்டமிழ்த்து வார்போல்
குளிர்ச்சியால் வெதுப்பு வாரே!

*(வானவர் - வானகத்தவர்; மேலானவர். தானுடல் தன்னுடைய மேனி. தமனியம் - பொன். மேனியார் அழகு - அழகு ஆர் மேனி எனக் கூட்டுக. கூனை - நீர் இறைக்கும் உலோகத்தாலான சால். குளிர்ச்சி - குளிர்ச்சிப் பொருள்கள்.)*

## 15. தாபத்தின் வேகம்!

மணமிகுந்த சந்தனக் குழம்பினை அவளுடலிலே பூசுவார்கள். விரகத்தீயை மூட்டி மூட்டி மேலும் கொழுந்து விட்டு எரியச் செய்வது போல் விசிறி வீசிக் கொண் டிருப்பார்கள். "இவள் உடலனைத்தும் கருகுகின்றதே! இவள் மேனி உருகுகின்றதே!" என்றும் அங்கலாய்ப்பார்கள். "மேலே பரப்பிய பூக்கள் கருதுகின்றனவே! முத்துமாலையின் முத்து களும் பொரிகின்றனவே!" என்று சொல்லித் துடிப்பார்கள் சில பேர்.

அவளருகிலேயே அமர்ந்து கொண்டு, அவளுக்கு வெப்பந் தணிவிக்கும் அந்தக் கதைகளையே அவர்கள் மீண்டும் விடாது நடத்திக் கொண்டேயிருப்பார்கள். அவளை மெதுவாக அணைத்து எடுத்து, மெல்லிய வாழைக் குருத்திலே கிடத்துவார்கள். அவ்வேளையிலே, நன்மை பெருகும் குற்றால நகரத்துக் குறும்பலாவினடியிலே எழுந்தருளியிருப்பவரின் திருமுடியின் மீதுள்ள நிலவின் மீது, வசந்தவல்லியானவள் சினங்கொண்டு அதனைப் பழித்துப் புலம்பத் தொடங்கினாள்.

**இராகம் - கல்யாணி** **தாளம் - சாப்பு**

**கண்ணிகள்**

முருகு சந்தனக் குழம்பு பூசுவார் - விரகத்தீயை
மூட்டி மூட்டி விசிறி வீசுவார்
குருகு தேயுடல் உருகுதே என்பார் - விரித்த பூவுங்
கரியு தேமுத்தம் பொரியுதே என்பார். 1

அருகில் இருந்து கதைகள் நடத்துவார் - எடுத்துமாதர்
அணைத்து வாழைக் குருத்தில் கிடத்துவார்
பெருகு நன்னகர்க் குறும்ப லாவினார் - வசந்த மோகினி
பெருநி லாவி னொடுக லாவினாள். 2

(முருகு - மணம். விரகம் - காமம். முத்தம் - முத்துமாலை. கதைகள் நடத்தல் செய்தவற்றையே மீண்டும் மீண்டும் செய்தல். உடல் வெப்பந்தீர வாழைக் குருத்திலே கிடத்தல் மரபு. அது நோக்கி அவளையும் அவ்வாறு எடுத்துக் கிடத்தினர் என்க. கலாவுதல் - கோபம் கொண்டு பேசுதல்.)

## 16. கொடும்பாவி நிலவே!

சற்றுங் குளிர்ச்சியே இல்லாதுபோன கொடிய பாவியாகிய வெண்ணிலாவே! பெண்களுக்குள்ளே குழல்வாய் மொழிக்கு ஓர் உடற்பாதியையே கொடுத்தவர், எனக்குத் தந்த மயக்கத்தின் காரணமாக, யான் இப்படி மண்ணிலே மதிமயங்கிக் கிடக்கின்றேனே? என்போலவே உனக்கும் மதிமயக்கந்தானோ? நம் நெற்றிக் கண்ணிலே நெருப்பை வைத்துக் கொண்டு, பிறரையெல்லாம் எரியச் செய்கின்ற அவருடன் கூடிக் காந்திக் காந்தி, விண்ணிலேயும் இப்படி நெருப்பை வைத்து விட்டாயோ? இது என்ன முறையோ?

**பெண்ணிலே குழல்மொழிக்கோர் பங்குகொடுத்**
**தவர்கொடுத்த பிரமை யாலே**
**மண்ணிலே மதிமயங்கிக் கிடக்கின்றேன்**
**உனக்கும்மதி மயக்கந் தானோ**
**கண்ணிலே நெருப்பை வைத்துக் காந்துவா**
**ருடன்கூடிக் காந்திக் காந்தி**
**விண்ணிலே நெருப்பை வைத்தாய் தண்ணிலாக்**
**கொடும்பாவி வெண்ணிலாவே!**

## 17. நிலவைப் பழித்தல்!

வெண்ணிலாவே! தண்மையான அமுதத்துடனன்றோ அந்நாளிலே பாற்கடலில் நீ பிறந்தாய்! இருந்தும், அந்தக் குளிர்ச்சியான தன்மைகளை எல்லாம் ஏன்தான் மறந்து விட்டாயோ? திருமகளாகிய பெண்ணுடன், உடன் பிறப்பாகவும் அன்று நீ தோன்றியதும் உண்டல்லவோ? வெண்ணிலாவே! என் பெண்மையைக் கண்ட பின்னும், என்னை நீயும் இப்படிக் காய்ந்து வருத்தலாமோ?

என்னைப்போல மண்ணிலே பிறவாமல் நீ விண்ணிலே பிறந்துவிட்ட காரணத்தாலோ? அல்லது நான் சிறுமியாக இருக்கையிலே உன்னை வேண்டி எருவிட்டு எறிந்தேனே அந்தக் காரணத்தினாலோ? கண்ணிலேயே விழிக்க விரும்பாத கொடிய பகைவனைப் போலே என்னைக் காந்தச் செய்து, இப்படி நீயும் வெறியாட்டம் ஆடுகின்றாய்?

முறையற்ற செயல்களை முன்னர் நீ செய்ததனால் அல்லவோ அடிமைக்காரன்போல இப்போது நீ கூனிக் குறுகிப் போயிருக்கின்றாய்? 'எனக்கு மோகம் விளை வித்தவன் என்னருகே வரக் காணேன்' என்று நான் துடி துடித்துக் கொண்டிருந்தால் உனக்கு அதனால் இப்படி வேகம் ஏற்பட்டு, என்னைக் காய்வதற்குத்தான் காரணம் என்னவோ?

என் கூந்தலை நாகப்பாம்பு என்று நீ தவறாக எண்ண வேண்டாம். அது நீண்ட கூந்தலைப் பின்னலிட்டுத் தொங்கும் சடையேதான் என்பதைக் காண்பாயாக. அழகிய தாமரை மலரின் பெருமையையும் நீ தோன்றிக் கெடுத்து விட்டாய். என்னையும் ஏன் இப்படிக் காய்கின்றாய்? முக்கூடலிங்கரின் முன்னாற்போய் அவரைக் காய்ந்தால் என்னவோ?

இராகம் - வராளி தாளம் - ஆதி

**கண்ணிகள்**

தண்ணமு துடன்பிறந்தாய் வெண்ணிலாவே - அந்தத்
தண்ணளியை ஏன்மறந்தாய் வெண்ணிலாவே
பெண்ணுடன் பிறந்ததுண்டே வெண்ணிலாவே - என்றன்
பெண்மைகண்டும் காயலாமோ வெண்ணிலாவே 1

விண்ணிலே பிறந்ததற்கோ வெண்ணிலாவே - எரு
விட்டுநான் எறிந்ததற்கோ வெண்ணிலாவே
கண்ணில்விழி யாதவர்போல் வெண்ணிலாவே - மெத்தக்
காந்தியாட்டம் ஆடுகிறாய் வெண்ணிலாவே. 2

ஆகடியம் செய்தல்லவோ வெண்ணிலாவே - நீதான்
ஆட்கடியன் போற்குறைந்தாய் வெண்ணிலாவே
மோகன்வரக் காணேன்என்றால் வெண்ணிலாவே - இந்த
வேகமுனக் கானதென்ன வெண்ணிலாவே. 3

நாகமென்றே எண்ணவேண்டாம் வெண்ணிலாவே - இது
வாகுகுழற் பின்னல் கண்டாய் வெண்ணிலாவே
கோகனக வீறழித்தாய் வெண்ணிலாவே - திரி
கூடலிங்கர் முன்போய்க் காய்வாய் வெண்ணிலாவே 4

(காந்தி ஆட்டம் - வெப்பம் விளைவித்து ஆடும் வெறியாட்டம். ஆகடியம் - அநியாயம். ஆட்கடியன் - மனிதனுக்கு அடிமையான மனிதன்; ஆள் அடிமை. எருவிட்டு எறிதல் - தைநீராடலின்போது சிறுமியர் நிலவை வேண்டி வணங்கித், தாம் மார்கழி நாள்தோறும் வாயிலில் பூவைத்துப், பின்தட்டி வைத்திருக்கும் எருக்களை நீரிலே எறிதல்.)

## 18. வேனிலானே!

தண்மையான நிலவினையே குடையாகக் கொண் டவரான குற்றாலநாதர் தந்த மையலின் விளைவே இது. இதனை அறிந்திருந்தும், என் தோழிப் பெண்கள் எண்ணற்ற பகைகளை எல்லாம் எடுத்துக் கொணர்ந்து அவற்றால் என்னைத் தெளிவிக்க முயலுகின்றனரே? இந்த நகரத்தையும் நல்ல நகரமென்று எவர்தாம் சொன்னார்களோ? 'அண்ண லார் திரிகூடநாதர்' என்று போற்றுவார்களே! அவர், என்னளவிலே எனக்கு அருள் செய்பவராக அமைந்திடவும் மாட்டாரோ? வெண்ணிலவினைக் குடையாகப் பிடித்துக் கொண்டு, மகரமீன் கொடிபிடித்து, இளந்தென்றலிலே ஊர்ந்து வருகின்ற மன்மதனே! நீயாவது சொல்வாயாக.

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

தண்ணிலா மௌலிதந்த மையலா
　　னதையறிந்தும் தைய லார்கள்
எண்ணிலாப் பகையெடுத்தார் இந்நகரை
　　நன்னகரென் றெவர்சொன் னாரோ
அண்ணலார் திரிகூட நாதரென்ப
　　தென்னளவும் அமைந்தி டாரோ
வெண்ணிலாக் குடைபிடித்து மீனகே
　　தனம்பிடித்த வேனி லானே!

(தையலர்கள் எடுத்த பகை - செய்த உபசரணைகள். அதனால் அவள் வெப்பம் அதிகமானதால் அவற்றைப் பகை என்றனள். 'அண்ணலார்' என்ற பேருக்குரிய அருள் அற்றவராயினர் போலும் என்று புலம்புகிறாள் அவள்.)

## 19. மதனனைப் பழித்தல்!

மன்மதா! நின் கையிலேயுள்ள கரும்புவில் எதற்காக? அதிற்பூட்டி எய்யும் மலர்க்கணைகள் தாம் எதற்காக? நீதான் எதற்காக? செக்கச் சிவந்து தோன்றுகின்றதே. இந்தப் பாவி நிலவு. இது ஒன்றே போதாதோ என்னை வதைப்ப தற்கு? மையிட்ட கருங்கண்ணினளான இரதிதேவியினிடத் திலே மோகமயக்கம் கொண்டவனே! இடபத்தின் மேலேறி வரும் குற்றால நாதரிடத்திலே நான் மையல் கொண்டால், உனக்கு என்மீது என்னதான் பொல்லாப்போ! அதனைக் கூறுவாயாக!

எல்லாத் திசைகளிலே யிருந்தும் தென்றலாகிய புலிவந்து என்மேற் பாய்கின்றதே, மன்மதா! குயிலின் குரலாகிய எக்காளம் ஒலித்தபின்னர், எனக்கு அன்னமும் பிடியாமற் போய்விட்டதே, மன்மதா! ‘என் அக்காள்’ என்று சொல்லத் தக்க என் தோழியானவள், வெட்கமில்லாமல் என்னை ஏசுவாளே மன்மதா! அஃதல்லாமல் என்னைப் பெற்ற தாயும் ஒரு பொல்லாத, நீலியாயிற்றே! என்ன செய்வேன் மன்மதா!

இராகம் - எதுகுலகாம் போதி தாளம் - சாப்பு

**கண்ணிகள்**

கைக்கரும் பென்ன கணையென்ன
நீயென்ன மன்மதா - இந்தச்
செக்கரும் பாவி நிலவுமே
போதாதோ மன்மதா!
மைக்கருங் கண்ணாள் இரதிக்கு
மால்கொண்ட மன்மதா - விடை
வல்லார்க்கு மால் கொண்டாற்
பொல்லாப் பென் மேலுண்டோ மன்மதா! 1

திக்கெல்லாம் தென்றற் புலிவந்து
பாயுதே மன்மதா - குயிற்
சின்னம் பிடித்தபின்
அன்னம் பிடியாதே மன்மதா!

*அக்காள் என்னுஞ்சகி வெட்காமல்*
*ஏசுவாள் மன்மதா - அவள்*
*அல்லாமல் தாயொரு*
*பொல்லாத நீலிகாண் மன்மதா! 2*

*(கணை - மலர்க்கணைகள். அவற்றை எய்யும்போது ஏற்படுகின்ற தாபங்கள் முதலியவற்றைக் கொக்கோக நூலிலே காணலாம். 'செக்கரும் பாவி நிலா' என்றதனால் மாலைக் காலத்தினையடுத்து இருள் மயங்கிக் கொண்டிருக்கும் நேரம் என்க. என்னை வருத்த நிலவொன்றே போதுமே! நின் கணை எதுவும் வேண்டாமே! என்றனள். தாபமிகுதியால், இரதியிடம் நீ மால்கொண்டவனாயிற்றே; அங்ஙனம் மையலின் இயல்பை எல்லாம் அநுபவித்து அறிந்தும் என்னை ஏன் இப்படி வருத்துகின்றாய்? என்கிறாள். அக்காள் - மூத்தவள்; காதலின் போதையைத் தான் அநுபவித்தவளாயிருந்தும்கூட, அவள் என்னை ஏசுவாள் என்பது குறிப்பு.)*

*மன்மதா! இவ்வூரிலுள்ள பிற நேரிழைமார்களையும் ஊரவர்களையும் போய்ப் பாரடா! அவர்கள் எவ்வளவு கவலையற்று நிம்மதியாக இந்நேரத்திலே உறங்குகின்றனர்? எனக்கோ, கண்ணில் நித்திரையே அணுகாமல் அதுவும் ஒரு சத்துருவாகவே விளங்குகின்றதே! கடலொலியாகிய முரசமும் இல்லாமல், வேறொரு எக்காளமும் உனக்கு எதற்காகவோ பிள்ளாய்? சிறு பெண் பிள்ளையாகிய என்மேற் போரிடும் நீயும், ஓர் ஆண்பிள்ளையாவாயோ மன்மதா.*

*குற்றால நாதரின் நீண்ட சடை இதுவன்று; இது என் கருமையான கூந்தலின் பின்னல்; காண்பாயாக மன்மதா! என் நெற்றியிலே விளங்குவது நெற்றிக்கண்ணன்று; சிந்தூரப் பொட்டுத்தான் காண்பாயாக! பெண்ணைப் பாகமாக உடையவர்; தென்னாரிய நாட்டினர்; எங்கள் நன்னகரிலே யுள்ள குற்றாலர். என்னை விட்டுவிட்டு அவர் முன்னே உன் செயலைச் செய்யப் போவாயாக, மன்மதனே! போய் விடுவாயாக!*

**நேரிழை யாரையும் ஊரையும்**
**பாரடா மன்மதா - கண்ணில்**

நித்திரை தானொரு
சத்துரு வாச்சுதே மன்மதா!
பேரிகையே அன்றிப் பூரிகை
ஏன் பிள்ளாய் மன்மதா - சிறு
பெண்பிள்ளை மேற்பொரு
தாண்பிள்ளை யாவையோ மன்மதா! 3
வார்சடை ஈதல்ல கார்குழற்
பின்னல்காண் மன்மதா! - நெற்றி
வந்தது கண்ணல்ல
சிந்தூர ரேகைபார் மன்மதா!
நாரிபங் காளர்தென் ஆரிய
நாட்டினர் மன்மதா! - எங்கள்
நன்னகர்க் குற்றாலர்
முன்னமே செல்லுவாய் மன்மதா! 4

(பேரிகை - குற்றாலநாதர் உலாவிலே முழங்கிய முரசமும்; பூரிகை - குயிலாகிய எக்காளமும் ஆம். வார்சடை என்பது தொடங்கி மன்மதனைத் தன் காதலன்பாற் செல்லுமாறு வேண்டுகிறாள் வசந்தவல்லி. நேரிழையார் - நேரிய ஆபரணங்களை அணிந்தவர்; பெண்கள். வார்சடை - நீண்ட சடை.)

## 20. பாங்கி வினாவுதல்

கொடி போன்றவளே! இனிமை முதிர்ந்து ஒழுகிக் கொண்டிருக்கும் பூங்கொம்பினைப் போன்றவளே! கச்சினால் இறுக்கப்பெற்றும், வம்பாக அதனுடன் எப்போதும் மோதிக் கொண்டேயிருக்கும் மதர்த்த கொங்கைகளையுடைய பிடி போன்றவளே! எங்கள் குடிக்கு ஒரே பெண்ணாக வந்து பிறந்துள்ள பெண் பிள்ளையே! உலகம் ஏழினையும் உடையவர் திரிகூடநாதர். அவருடைய திரிகூட நகரிலே ஐம்படைகளுடன் வரும் மன்மதனைப் பயிற்று முகத்தால், நீ சொல்லிய சொற்களை, அடியேன் நின் தோழியாயிருக் கையிலே, அவற்றை நானும் தெரிந்து கொண்டால் ஆகாதோ? அதனை என்னிடமும் சொல்வாயாக.

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

படியே முடையார் திரிகூடப்
படைமா மதனைப் பயிற்றியசொல்
அடியேன் சகியா யிருக்கையிலே
அதுநான் பயின்றால் ஆகாதோ
கொடியே மதுரம் பகுத்தொழுகு
கொம்பே வம்பு பொருதமுலைப்
பிடியே எமது குடிக்கொருபெண்
பிள்ளாய் கருத்து விள்ளாயே. 1

*(படி - உலகம். பயிற்றிய - கற்பித்த. மதுரம் - இனிமை. வம்பு பெருகுதல் - கச்சை ஊடறுப்பது போலப் பூரித்தல்.)*

## 21. கேளாய் பாங்கி!

*சகியே! மெய்யடியார்களுக்கு மெய்யனாக விளங்கும் நம் திரிகூட நாயகரின் மீதிலே நானும் மிகவும் மையல் கொண்டவளானேன். அந்தச் செய்தியை நீயும் கேட்பாயாக. சிவந்த அவருடைய சடையும், அதன்கண் அவர் சூடியுள்ள அழகிய கொன்றை மாலையின் அழகும், அவர் கையிலே விளங்கும் மழுவும், என் கண்களைவிட்டுச் சற்றும் அகலா திருக்கின்றனவே?*

*கங்கையாகிய பெண்ணைத் தலையிலே வைத்துள்ள தெய்வங்களுக்குள் உயர்வான அந்தப் பொருளைக் கண்டேன். குளிர்ச்சியான திங்கட் கொழுந்தாகிய மூன்றாம் பிறை யினையும் என்னளவிலே தீக்கொழுந்தாக ஆக்கிக் கொண்டேன். சங்கக் குழைகள் அணிந்த அவரை, அடியார் கூட்டம் நிறைந்த சங்க வீதியிலே உலாவரக் கண்டேன். என் இரு செங்கைகளிலும் இருந்த சங்கு வளையல்களையும் இழந்து நான் மயங்கிவிட்டேனே!*

**இராகம் - கல்யாணி** **தாளம் - சாப்பு**

**கண்ணிகள்**

மெய்யர்க்கு மெய்யர் திரிகூட
நாயகர்மீதில் - மெத்த

மையல்கொண் டேனந்தச் செய்தியைக்
 கேளாய்நீ பாங்கி.
செய்ய சடையும் திருக்கொன்றை
 மாலை அழகும் - அவர்
கையில் மழுவுமென் கண்ணைவிட்
 டேஅக லாவே. 1

கங்கைக் கொழுந்தணி தெய்வக்
 கொழுந்தை நான் கண்டு - குளிர்
திங்கட் கொழுந்தையும் தீக்கொழுந்
 தாக்கிக்கொண் டேனே.
சங்கக் குழையாரைச் சங்க மறுகினிற்
 கண்டு - இரு
செங்கைக்குள் சங்கமும் சிந்தி
 மறுகிவிட்டேனே! 2

*('மெய்யர்க்கு மெய்யர்' ஆகவே, பொய்யர்க்கு அவனும் பொய்யனே யாவான் என்க. கொழுந்து - சிறப்புடையது; சுடர்).*

*அழகிய இளம்பிறையினைச் சூடியவரான திருக்குற்றால நாதரைக் கண்டேன். அதனால், சிறு தென்றல் என்னும் குளவி தினமும் என்னைக் கொட்டிக் கொண்டே இருக்கிறதே! அதனால் மிகவும் நொந்து போய்விட்டேனே! மேருவை வில்லாக வளைத்துக் கைக்கொண்டவர் திருக்குற்றாலநாதர். அவர் முன்னர்ப் போயினேன், அதனால், மதனவேளானவள் தன் வெற்றி பொருந்திய கரும்புவில்லைக் கொண்டு என்மீது மெல்ல மெல்லப் போரிடத் தொங்கிவிட்டானே?*

*நம் பெருமானை நல்ல நம் நகரின் பெரிய ராஜவீதியிலே உலாவரக் கண்டேன். அவர் கையிலேந்தியிருக்கும் மானைக் கண்டதும் என் ஆடையையும் நெகிழ விட்டேன். செம்பவழ மேனியிடத்திலே சிறு கறுப்புக் கறையினையுடையவரை நான் உலாவரக் கண்டேன். அம்மவோ! இப்போது என்மேனி அடங்கலுமே அவர்மீது கொண்ட மோகத்தினால் கறுத்துப் போய்விட்டேனே!*

மன்றற் குழவி மதியம்
புனைந்தாரைக் கண்டு - சிறு
தென்றற் குளவி தினங் கொட்டக்
கொட்டநொந் தேனே!
குன்றச் சிலையாளர் குற்றால
நாதர்முன் போனேன் - மதன்
வென்றிச் சிலைகொடு மெல்லமெல்
லப்பொரு தானே! 3

பெம்மானை நன்னகர்ப் பேரரச
வீதியிற் கண்டு - அவர்
கைம்மானைக் கண்டு கலையை
நெகிழவிட் டேனே!
செம்மேனி தன்னிற் சிறுகறுப்
பாரை நான் கண்டு - இப்போது
அம்மாவென் மேனியடங்கலுமே
கறுத் தேனே! 4

*(மன்றற் குழவி மதியம் - வளர்பிறையிலே மணங் கொள்ளுதல் மரபாதலால் வளர்பிறை என்று குறிக்க ‘மன்றற் குழவி மதியம்’ என்றனர் என்றும் கருதலாம்; அழகிய பிறை எனவும் கூறலாம். குளவி - கொட்டி வருத்தும் பூச்சி வகைகளுள் ஒன்று. குன்றச் சிலை - மேருவாகிய சிலை. மதன் வென்றிச் சிலை - கரும்பு வில். பெம்மான் - பெருமான். அடங்கலும் - அனைத்தும்.)*

*வெண்மை நிறமுடைய எருதின்மேல் ஊர்ந்துவரும் பாம்பணிகள் புனைந்தவரைக் கண்டு, அதற்குமுன் மனம் விரும்பியிருந்த குளிர்ச்சியான திங்களையும் ஞாயிறு போலக் கொதிப்புடையதாயிருக்கக் கண்டேனே! எள்ளளவும் உணவும் உறக்கமும் இல்லாத அவரைக் கண்டு நானும் மிகச் சிறந்த உணவும் உறக்கமும் அற்றவளாகப் போய்விட்டேனே!*

வெள்ளி விடையில் வியாளம்
புனைந்தாரைக் கண்டு - சிந்தை
நள்ளிய திங்களை ஞாயிறு
போலக்கண் டேனே

எள்ளள வூணும் உறக்கமும்
இல்லாரைக் கண்டு - நானும்
ஒள்ளிய ஊணும் உறக்கமும்
அற்றுவிட் டேனே!

*(இக் கண்ணியுள், வெள்ளி, வியாளம், திங்கள், ஞாயிறு ஆகிய கிழமைப் பெயர்கள் சுவையாக விளங்குதல் காண்க. வெள்ளி - வெண்மை, வியாளம் - பாம்பு.)*

## 22. பாங்கி பழித்தல்

*தரையின் மீதுள்ள பெண்களுக்கெல்லாம் ஆபரணம் போல வந்து தோன்றிய எங்கள் பொற்கொடியே! மாதர் களுக்குத் தலைவியாக விளங்குபவளே! வசந்தவல்லியே! இதுகாறும் நீ சொன்ன பேதைமையான சொற்களுக்கு நான் என்ன பதில் சொல்லப் போகின்றேன்? மலைமகளின் மீது ஆசை கொண்டவராக மக்கட் கூட்டம் பெருகியிருக்கின்ற வீதியின் ஊடே நரைத்த மாட்டின்மீது ஏறி வருகின்றாரே! இப்படி வருபவருக்கோ, அழகு நங்கையான நீ மையல் கொண்டனை? அதனை இப்பொழுதே விட்டுவிடுவாயாக!*

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

தரைப்பெண்ணுக்கு அணிபோல் வந்த
தமனியக் கொடியே மாதர்
துரைப்பெண்ணே வசந்த வல்லி
சொன்னபே தைமைக்கென் சொல்வேன்
வரைப் பெண்ணுக்கு ஆசை பூண்டு
வளர்சங்க மறுகின் ஊடே
நரைத்தமாடு ஏறு வார்க்கோ
நங்கைநீ மயல் கொண்டாயே!

*(வரைப்பெண் - இமவானின் மகள்; இங்கே குழல்வாய் மொழி என்ற நாமம் உடைய தேவி. நரைத்த மாடு வெள்ளை எருது. 'ஒரு பெண்ணின்மீது ஆசைகொண்டவராக, அவளுடன் நரைத்த எருதேறி வருபவர்மீதோ நீ காதல் கொண்டனை?' என்று, தோழி வசந்தவல்லியைத் தடுத்து மாற்ற முயலுகிறாள்.)*

## 23. ஈசரைப் புகழ்தல்

*மானே! மன்னவராகிய குற்றாலநாதரின் செய்தியினை நீ இன்னமின்னம் கேட்கமாட்டாயோ. அவருடைய வாகன மாகிய பெரிய எருதுக்கு உலகம் முழுவதும் ஓரடி தான் என்பதை நீ அறிவாயாக. அவர் சந்நிதியின் பயனால் பெற்ற பேறல்லவோ பொன்னுலகத்திலே தேவர்கள் எல்லோரும் பெற்றுள்ள செல்வமெலாம்! தினந்தோறும் சந்திரரும் சூரியரும் வந்திறங்கித் தரிசித்துச் செல்லும் வாசலன்றோ அவருடைய திருக்கோவிலின் வாசல்.*

*நன்னகரிலேயுள்ள ஈசரிடத்து நான் ஒருத்தி மட்டுந் தானோ ஆசை கொண்டேன் என்று நீ நினைத்தனை. பல கன்னியர்களும், முனிபத்தினிமார்களும்கூட அவர்மீது முன்னாளிலே ஆசை கொள்ளவில்லையோ? தென்னிலங் கையிலே வாழ்ந்த ஒப்பற்ற கன்னிகையாளான மண்டோதரி யாள், அவருடைய அழகிய திருவடியிலேசேர்ந்து அணை வதற்கு என்ன தவம் செய்தாளோ? அதனை நானும் செய்வதற்கு அறியேனே?*

**இராகம் - செளராஷ்டிரம் தாளம் - ரூபகம்**

**கண்ணிகள்**

**மன்னவர்குற் றாலர் இன்னமின்னங்**
**கேளாயோ மானே! - அவர்**
**வாகனத்தின் மால்விடைக்கு லோகம் ஒக்க**
**ஓரடி காண் மானே!**
**சன்னிதியின் பேறல்லவோ பொன்னுலகில்**
**தேவர் செல்வம் மானே! - தினஞ்**
**சந்திரரும் சூரியரும் வந்திறங்கும்**
**வாசல் கண்டாய் மானே! 1**
**நன்னகரில் ஈசருக்கு நான்தானோ**
**ஆசைகொண்டேன் மானே! - பல**
**கன்னியரும் ஆசைகொண்டார் பன்னியரும்**
**ஆசைகொண்டார் மானே!**

தென்னிலங்கை வாழுமொரு கன்னிகைமண்
டோதரியாள் மானே! - அவர்
பொன்னடியிற் சேர்ந்தணைய என்னதவம்
செய்தாளோ மானே! 2

*(மால்விடை - பெரிய ஆனேறு. வாகனம் - ஊர்தி. ஒக்க - ஒருமிக்க. பொன்னுலகம் - தேவருலகம். வாசல் - ஆசாரவாசல். கன்னியர் - தேவகன்னியர். பன்னியர் - தாருகாவனத்து ரிஷிகளின் பத்தினிமார்கள். மண்டோதரி - இராவணனின் மனைவி.)*

## 24. ஒரு பெண் கண்டாய்!

*குறும் பலாமரத்தின் வேரிலே பழமானது பழுத்து, அது நன்கு முற்றி, அதன் அடியிலே வெடிப்பு ஏற்பட்டுச் சுளைகள் வெளிவந்தன. அதனின்றும் இனிய தேனானது, 'பூமியிலே பாதாள கங்கை பீறிட்டு வந்ததோ' என்று சொல்லும் படியாகக் குதித்து வந்தது. அப்படிக் குதித்து வந்த புத்தம் புதுத் தேனான்து அருகிலிருந்த ஆற்று நீரிலே கலந்து பெருகிக் கொண்டிருக்கும். இப்படிப்பட்ட குறும்பலா மரத்தினடியிலே கொலுவீற்றிருக்கின்ற, மெய்யறிவின் உருவினரான தலைவர் நம் குற்றாலநாதர்; அவர் பேரிலே பிரமைகொண்ட பெண்களோ மிகப்பலர். அவர்களுள் நானும் ஒருத்தியே என்பதைக் காண்பாயாக.*

### விருத்தம்

வேரிலே பழம்பழுத்துத் தூரிலே
சுளைவெடித்து வெடித்த தீந்தேன்
பாரிலே பாதாள கங்கைவந்த
தெனக்குதித்துப் பசுந்தேன் கங்கை
நீரிலே பெருகுகுறும் பலாவிலே
கொலுவிருக்கும் நிமல மூர்த்தி
பேரிலே பிரமைகொண்ட பெண்களிலே
நானுமொரு பெண்கண் டாயே.

*(பசுந்தேன் - பசுமையான தேன்; புதிய தேனுமாம். அது பாய்தலால் ஆற்றிலே வெள்ளம் பெருக்கெடுத்தது என்பார்*

*'கங்கை நீரிலே பெருகு' என்றார். நிமலன் மலத்தால் பற்றப் படாதவன். பிரமை - மயக்கம்.)*

## 25. கருமம் ஏதோ?

*இளந்தென்றலைப் போலே உல்லாசமாக உலாவரும் பூங்கொடியே! பூங்கொடிக்குப் பூங்கொடி பேசுவதுபோல என்னிடம் பேசும்போதே நின்மேனியிற் படர்ந்து கொண் டிருக்கும் இப் பசலை நோயினையும் காண்பாயாக. உண்மையாகவே நீ பரமர்மீதில் ஆசை கொண்டு விட்டனை. உண்மையான பேரின்பத்தை நல்கும் குற்றால நாதராகிய நிலையான நம்பெருமான் உன்பால் இசைந்து கூடுமாறு செய்வதற்குரிய செயல்தான் யாதோ? அதனை நானும் அறியுமாறு எனக்குத் தெரிவிப்பாயாக.*

### விருத்தம்

**வசந்தஉல் லாசவல்லி**
**வல்லிக்கு வல்லி பேசிப்**
**பசந்ததோர் பசப்பும் கண்டாய்**
**பரமர்மேல் ஆசைகெண்டாய்**
**நிசந்தரும் திருக்குற் றால**
**நிரந்தர மூர்த்தி உன்பால்**
**இசைந்திடக் கருமம் ஏதோ**
**இசையநீ இசைந்தி டாயே.**

*(வல்லிக்கு வல்லி பேசிப் பசந்தது அது வசந்த வல்லியின் காதலனைப் பற்றிய பேச்சாதலினால். பரமன் - இறைவன். நிசந்தரும் - உண்மையான இன்பந்தரும். நிரந்தரமூர்த்தி - பிறப்பு இறப்பு அற்ற நித்தியனான தலைவன். கருமம் - செயல். இசைய இசைத்திடல் - கேட்போர் சந்தேகங் கொள்ளாதவாறு அப்படியே ஒப்புக் கொள்ளும்படியாக உண்மையாகப் பேசுதல்.*

## 26. வருத்திக் கூறுதல்!

*முன்னாளிலே திரிபுரங்களைப் பற்றிக் கொண்ட பெரு நெருப்பினை, அது மேலும் பரவாமல் அவித்துச், சுதன்மன்,*

*சுசீலன், சுபத்தி ஆகிய மூவர்களுக்கும் அளித்தவர் அவர். அவர்மீது மையல் கொண்ட என் ஒருத்தியின் காமத்தீயை இப்படி அவிக்காமலிருக்கின்றாரே? பருத்த மலையான மகாமேருவையே அந்நாள் தன் கைப் பிடியினுள் இணக்கிக் கொண்டவர் அவர். என் கொங்கைகளான பருவ மலைகளைத் தம் கையால் இணக்காமல் இன்னமும் இருக்கின்றாரே?*

*தம்முடைய ஐந்து தலைகளுக்குள்ளாக ஆறாகிய கங்கையையும் தலைமீது கொண்டுள்ளவர் அவர்; ஆனால், எனது மனத்திலே எழுந்திருக்கும் அஞ்சுதலுக்கு ஓர் ஆறுதலைத் தந்தருளாமலிருக்கின்றாரே? நஞ்சைத் தாமுண்டு அமுதத்தைத் தேவராகிய பிறருக்கு வழங்கிய கருணையாளரான அவர் என் வாள் போன்ற விழிகளிலே படர்ந்துள்ள நோயாகிய இந்நஞ்சையும் தாம் பருகி எனக்கு அமுதமாகிய இன்பத்தைத் தந்தனரில்லையே?*

*தேவர் தலைவனாகிய இந்திரனின் சாபத்தைத் தீர்த்து அவனுக்கு அருளியவர் அவர், மாஞ்சோலைக் குயிலான சின்னத்தையுடைய தலைவனான மன்மதன் என்மீதிலிட்ட மையலாகிய இந்தச் சாபத்தைத் தீர்க்கின்றவரில்லையே? எல்லோரும் போற்றுகின்ற திருக்குற்றாலர்தாம் சகல பேர்க்கும் இரங்குவார். ஆனாலும், எனக்கு மட்டும் இரங்காதிருக்கின்றனரே? பெண்ணே! (என் செய்வேனோ?)*

**இராகம் - நாதநாமக்கிரியை** **தாளம் - ஆதி**

**கண்ணிகள்**

**புரத்து நெருப்பை மூவர்க் கவித்தவர்**
**மையல் கொண்டஎன்**
**ஒருத்தி காம நெருப்பை அவிக்கிலார்**
**பருத்த மலையைக் கையில் இணக்கினார்**
**கொங்கை யான**
**பருவமலையைக் கையில் இணக்கிலார்** 1

**அஞ்சு தலைக்குள் ஆறு தலைவைத்தார்**
**எனது மனதில்**
**அஞ்சு தலைக்கோர் ஆறு தலைவையார்**

நஞ்சு பருகி அமுதங் கொடுத்தவர்
எனது வாள்விழி
நஞ்சு பருகி அமுதங் கொடுக்கிலார். 2

தேவர் துரைதன் சாபந் தீர்த்தவர்
வன்ன மாங்குயில்
சின்னத் துரைதன் சாபந் தீர்க்கிலார்
ஏவ ரும்புகழ் திருக்குற் றாலர்தாம்
சகல பேர்க்கும்
இரங்கு வார்எனக் கிரங்கிலார் பெண்ணே. 3

*(இணக்குதல் - இணக்கப்படுத்துதல்; கையாற் பிசைதல். புரம் - திரிபுரம். பருத்தமலை - பெரிய மகாமேரு பர்வதம். பருவமலை - பருவத்தால் பூரித்து மலைபோல வடிவு பெற்று மதர்த்து விளங்கும் இளைய கொங்கைகள். வாள்விழி நஞ்சு - வாள்போலும் விழியிலே படர்ந்துள்ள நஞ்சாகிய ஏக்கக் கலக்கம். தேவர்துரை தன் சாபம் - தக்கன் யாகத்திலே இந்திரன் பெற்ற சாபம். சின்னம் - திருச்சின்னம். 'தேவர் துரையின் சாபந்தீர்த்த அவர் இந்தச் சின்னத்துரையின் சாபந்தீர்க்க மாட்டேனென்கிறாரே' என்ற ஏக்கம் காண்க.)*

## 27. உன் விருப்பம்போல்!

*நன்னகரமாகிய நம் திருக்குற்றாலத்திலே, கோவில் கொண்டிருக்கும் ஈசராகிய திருக்குற்றால நாதரின்மேல் நீ ஆசை கொண்டதனால், அதனை மறுத்துக் கூறுபவர் களுக்குத் தக்கபடியெல்லாம் சமாதான வார்த்தைகளைச் சொல்லவும் படித்துக் கொண்டாய். மயில் போலச் சாயல் உடையவளே! அவருடைய சந்நிதியின் சிறப்பையெல்லாம் என்னால் எடுத்துச் சொல்வதற்கும் முடியுமோ? ஏதோ என்னால் ஆனதைச் சொன்னேன். இனி, உனது விருப்பம் எப்படியோ அதன்படியே நடந்து கொள்வாயாக.*

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

**நன்னகர்த் திருக்குற் றால**
**நாதர்மேல் ஆசை பூண்டு**
**சொன்னவர்க் கிணங்க வார்த்தை**
**சொல்லவும் படித்துக் கொண்டாய்**

**சன்னிதி விசேடஞ் சொல்லத்**
**தக்கதோ மிக்க தோகாய்**
**என்னிலா னதுதான் சொன்னேன்**
**இனிஉன திச்சை தானே.**

*(தோகாய் - மயில் போன்ற பெண்ணே. சொன்னவர் - அவள் மயல் கொண்டது தவறு என்று சொன்னவர்.)*

## 28. தூது சொல்லி வாராய்!

*நீ எனக்காக அவரிடம் போய்த் தூது சொல்லி வருவாய் பெண்ணே! குற்றாலநாதர் முன்பாகப் போய்த் தூது சொல்லி வருவாய்! முன்னாளிலே, சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்காகத் தூதுபோன அவர் முன்னே நீ போய், என் பொருட்டாகத் தூது சொல்லி வருவாயடி பெண்ணே!*

*உறங்கலாமென்றாலோ உறக்கமும் வரவில்லை. மாயஞ் செய்த அவரை மறக்கலாமென்றாலோ, மறக்கவும் முடிய வில்லை. பெண் சென்மம் என்று பிறந்தாலும்கூட எனக்குப் பேராசை கூடாது என்பதை அறிந்திருந்தும், அந்தச் சலுகைக் காரரிடத்திலே, நான் ஆசையுடையவளாகி விட்டேன். அதனால் இப்போது நீ போய்த் தூது சொல்லி வருவாயாக.*

*நேற்றைக்கெல்லாம் குளிர்ச்சியாகக் காட்டி, இன்று கொதிப்புடையதாக மாறிவிட்ட நித்திரையாகிய பாவிக்குத் தான் என்னுடன் என்ன போட்டியோ? நடுவே, இந்தத் தென்றற் காற்றுக்கும் அல்லவோ ஒரு கோட்டி வந்திருக்கிறது. 'என் விரக நோய்க்கு மாற்று மருந்து முக்கண் மருந்தே' என்று பொறுப்புக் கட்டி, அவரிடம் போய் நீ எனக்காகத் தூது உரைத்து வாராயோ?*

*'வருவதென்றால், இந்த நேரத்திலேயே வரச்சொல்லு. அப்படி உடனே வராதிருந்தனரென்றால் அவருடைய மார்பிலே அணிந்துள்ள கொன்றைமாலையினை யாகிலும் தரச்சொல்லு. குற்றாலநாதர் எனக்கு எதனையாவது தருவ தாயிருந்தால் என்னிடமிருந்து பறித்துப் போன என் நெஞ்சைத் திருப்பித் தரச்சொல்லு. அப்படி அவர் தராதிருந் தால், தானும் ஒரு பெண்ணாகிய அவருடைய சக்தியை, நான்*

*எளிதில் விடமாட்டேன்' என்று சொல்லு. இப்படிச் சொல்லிப் போய்த் தூது சொல்லி வருவாயாக.*

இராகம் - காம்போதி                                   தாளம் - ஆதி

**பல்லவி**

தூதுநீ சொல்லி வாராய் பெண்ணே
குற்றாலர் முன்போய்த்
தூதுநீ சொல்லி வாராய்.

**அனுபல்லவி**

ஆதிநாட் சுந்தரர்க்குத் தூதுபோ
னவர் முன்னே (தூது நீ)

**சரணங்கள்**

உறங்க உறக்கமும் வாராது மாயஞ் செய்தாரை
மறந்தால் மறக்கவும் கூடாது - பெண்சென்மம் என்று
பிறந்தாலும் பேராசை ஆகாது அஃதறிந்துஞ்
சலுகைக் காரர்க்கு ஆசையாயி னேன் இப்போது
(தூது நீ)

நேற்றைக் கெல்லாங்குளிர்ந்து காட்டி இன்று கொதிக்கும்
நித்திரா பாவிக்கென்ன போட்டி - நடுவே இந்தக்
காற்றுக்கு வந்ததொரு கோட்டி விரக நோய்க்கு
மாற்று மருந்து முக்கண் மருந்தென்று பரஞ்சாட்டி
(தூது நீ)

வந்தால்இந் நேரம்வரச் சொல்லு வராதி ருந்தால்
மாலையா கிலுந்தரச் சொல்லு குற்றாலநாதர்
தந்தாலென் நெஞ்சைத் தரச்சொல்லு தராதி ருந்தால்
தான்பெண்ணா கியபெண்ணை நான் விடேன் என்று.
(தூது நீ)

*(மாயம் செய்தவர் - வஞ்சனை செய்தவர். சலுகைக் காரர் - சலுகைகளுக்கு உரியவர்; பெரிய மனிதர். காற்று - தென்றற் காற்று. மாலை - அடையாள மாலையாகிய கொன்றை. பரஞ்சாட்டுதல் - குற்றஞ்சாட்டிப் பொறுப்பு உரைத்தல்.)*

## 29. தக்க சமயம் கேளடி!

*மின்னற் கொடியினைப் போன்றவளே! செவ் வேளாகிய குமரனை ஈன்று உலகுக்கு அருளியவர்; கரும்புச் சிலையினையுடையவனான மதனவேளை வென்று அழித் தருளினவர்; திரும்பத் தாமே அவ்வேளை உயிர் பெற அழைத்து அவனுக்கு அருளும் செய்தவர்; அகங்காரம் மிகுந்த காரணத்தினாலே, தாருகாவனத்து முனிவர்கள் பெரிய வேழத்தினை ஏவிவிட, அதனைக் கொன்று அதன் தோலை உரித்தவர்; குற்றாலநாதர். அவருடைய கொலு அமரருக்கும் கூட எளிதாகக் காணமுடியாத தொன்றாகும். கடுமையான சமயங்கள் பலவுண்டு. ஆனாலும், தக்க வேளை எதுவென நான் சொல்வேன்; அதனைக் கேட்பாயாக.*

### விருத்தம்

**செவ்வேளை ஈன்றருள்வார் சிலைவேளை**
**வென்றருள்வார் திரும்பத் தாமே**
**அவ்வேளை அழைத்தருள்வார் அகங்கார**
**மிகுதலால் அறவர்ஏவும்**
**கைவேழம் உரித்தவர்குற் றாலர்கொலு**
**அமரருக்குங் காணொ ணாதால்**
**வெவ்வேளை பலவுமுண்டு வியல்வேளை**
**நான்சொலக்கேள் மின்ன னாளே.**

(*செவ்வேள் - முருகன். சிலைவேள் - மதனன். அறவர் - தாருகா வனத்து முனிவர். கைவேழம் - துதிக்கையினையுடைய வேழம்; வலியுடைய வேழமும் ஆம்.*)

## 30. நல்ல சமயமடி!

*சகியே! திரிகூடராசருக்குத் 'திருவனந்தல் முதலாக ஏகாந்தம் முடியத் தினமும் ஒன்பது காலப் பூசை உண்டு. பெரிதான அபிடேகங்கள் நடைபெறுகின்ற அந்த ஏழு காலத்தினும், அவரிடம் ஒருவரும் பேசுவதற்கு ஏற்ற சமயம் அன்று. வாரத்து ஏழு நாள்களில், மூன்று திருநாள்களாகவே இருக்கும். வசந்தத் திருநாளும் மாத வழிபாடுகளும் வருட*

வழிபாடுகளும் நடக்கும். பல திருநாள்களும் அடிக்கடி நிகழ்வனவாம். குழல் வாய்மொழிப் பெண்ணானவள், ஒரு நாளுக்கு ஒரு நாள் மிகவும் மகிழ்ச்சியுடன் அவரோடு ஆனந்தமாகக் கொலு வீற்றுக் கொண்டிருப்பாள். செருக்கு மிகுந்த திருக்குற்றாலநாத லிங்கருடைய பெருங்கொலுவிலே தக்க சமயம் அறியாமல் சென்று, சித்தர்களும் தேவ கணங்களும் சிவ கணங்களும் உள்ளே நுழைய விடாமல் தடை செய்து நிற்கக் கடைவாயிலிலேயே காத்து நிற்பார்கள் சிலர்.

அப்படிப்பட்ட சமயங்களில், எப்படியோ கடந்து உள்ளே சென்றவர்கள், நந்தியின் பிரம்படிக்குப் பயந்து ஒதுங்கி, அங்கே ஆட்கொண்டார் குறட்டிலே போய் நிற்பார்கள். மைதீற்றிய கருங்கண்களை உடையவரான மாதர்கள், தூதாக அனுப்பிய வண்டுகளும் கிளிகளும் ஒவ்வொரு வாசலிலும் உள்ளே செல்லத்தக்க சமயம் நோக்கிக் காத்திருக்கும். குற்றாலத்துச் சங்க விசுவநாதன் பெற்ற புதல்வனாகிய சிவராம நம்பி என்பவன் செய்கின்ற ஆகம விதிப்படியுள்ள சடங்குகள் மிகவும் அழகுடன் விளங்கும். பாலாறாகவும் நெய்யாறாகவும் அபிஷேக நைவேத்தியம் பணிமாறுகின்ற காலத்தையும் அவன் ஏற்றுக் கொண்டருள் வான். நான்கு வேதங்களாகிய பழம்பாட்டும், நாயன்மார்கள் மூவர்கள் சொன்ன திருமுறைகளும், நால்வகைக் கவிகளையும் பாடும் புலவர்களின் புதுப்பாட்டும் அங்கே சதாமுழங்கிக் கொண்டேயிருக்கும். நீலகண்டர், குற்றாலர் அப்படிக் கோலங்கொண்டருளுகின்ற நிறைந்த கொலுவிலே எவர்க்கும் எவ்விதமான பேதமும் கிடையாது. எல்லாம் எல்லோருக்கும் பொதுவான காட்சியேயாகும். அப்போது குற்றாலர் தம் தேவியுடன் அங்கே கொலு வீற்றிருப்பார். அதனால், நம் ஆசையை அங்கே சொல்லிவிடக்கூடாது.

முப்பொழுதும் திருமேனி தீண்டுவார் வந்துநின்று தம் காரியங்களைச் செய்கின்ற திருவனந்தல் வாய்க்கும் நேரத்திலே, பூங்கொம்பினைப் போன்ற அழகினையும், குழையணிந்த காதுகளையும் உடைய மடந்தையானவளின் பள்ளியறையிலே யிருந்து, அவர்தம் கோவிலை நோக்கிப்

*போகின்ற ஏகாந்த சமயமே, அவரிடம் பேசுவதற்கு மிகவும் ஏற்ற சமயம். மைதீற்றிய அழகு விழியாளே! அவ்வேளை யிலே, என் பெருமயக்கத்தை நீ அவரிடம் எடுத்துச் சொல்லி, அவருடைய கொன்றை மாலையினை வாங்கிவருவாயாக.*

இராகம் - பியாக்டை தாளம் - ஆதி

**கண்ணிகள்**

திரிகூட ராசருக்குத் திருவனந்தல் முதலாகத்
தினமும் ஒன்பதுகாலம் கொலுவிற் சகியே!
பெரிதான அபிஷேகம் ஏழு காலமும் ஒருவர்
பேசுவதற்குச் சமயம் அல்ல கண்டாய் சகியே!
வருநாளி லொருமூன்று திருநாளும் வசந்தனும்
மாதவழி வருடவழிச் சிறப்பும் சகியே!
ஒருநாளுக் கொருநாளில் வியனாகக் குழல்மொழிப்பெண்
உகந்திருக்கும் கொலுவேளை கண்டாய் சகியே!

பெத்தரிக்கம் மிகுந்ததிருக் குற்றால நாதலிங்கர்
பெருங்கொலுவிற் சமயமறி யாமற் சகியே!
சித்தரொடு தேவகணம் சிவகணங்கள் தடைசெய்யத்
திருவாசற் கடைநிற்பாற் சிலபேர் சகியே!
அத்தலையில் கடந்தவர்கள் நந்திபிரம் படிக்கொதுங்கி
ஆட்கொண்டார் குறட்டில் நிற்பார் சகியே!
மைக்கருங்கண் மாதர்விட்ட வண்டுகளும் கிள்ளைகளும்
வாசல்தொறும் காத்திருக்கும் கண்டாய் சகியே!

கோலமகு டாகமசங் கரவிசுவ நாதனருள்
குற்றாலச் சிவராம நம்பிசெயும் சகியே!
பாலாறு நெய்யாறாய் அபிஷேக நைவேத்யம்
பணிமாறு காலமுங்கொண் டருளிச்சகியே!
நாலுமறைப் பழம்பாட்டும் மூவர்சொன்ன திருப்பாட்டும்
நாலுகவிப் புலவர்புதுப் பாட்டுஞ் சகியே!
நீலகண்டர் குற்றாலர் கொண்டருளும் நிறைகொலுவில்
நீக்கமிலை எல்லோர்க்கும் பொதுக்காண் சகியே!

அப்பொழுது குற்றாலர் தேவியுடன் கொலுவிருப்பார்
ஆசைசொல்லக்கூடாது கண்டாய் சகியே!
முப்பொழுதும் திருமேனி தீண்டுவார் வந்துநின்று
முயற்சிசெயுந் திருவனந்தல் கூடிச் சகியே!
கொப்பழகு குழைமடந்தை பள்ளியறை தனிலிருந்து
கோயில்புகும் ஏகாந்த சமயம் சகியே 15
மைப்பழகு விழியாய்என் பெருமாலை நீ சொல்லி
மருமாலை வாங்கியே வாராய் சகியே! 16

*(வியனாக - மிகுதியாக. பெத்தரிக்கம் - செருக்கு. ஆட்கொண்டார் குறடு - நந்திதேவர் பீடத்திற்கு அருகிலுள்ள குறடு. வண்டுகளும் கிள்ளைகளும் மாதர்விட்ட தூதாக வந்தவை. பணிமாறு காலம் - ஒப்பனை அடிக்கடி மாறிக் கொண்டே போகும் அபிஷேக காலம். நாலுகவி - சந்தக் கவி முதலியன. மருமாலை - மணமாலை; மறுமாலை என்பதும் பாடம். தோழி தூதுரைக்கப் போகிறாள், வசந்தவல்லி தனியே இருந்து நோகின்றாள்.)*

## 31. கூடல் இழைத்தாள்!

*தெளிந்த நீரையுடையது வடவருவி. அதனைத் தீர்த்தமாக உடையவர் திருக்குற்றாலர். அவருடைய சிவந்த சடையின் மேலாக விண்ணினின்றும் வீழ்ந்த நீராகிய கங்கையைச் சூடியும் இருப்பவர். அவர்பால் மையல் கொண்டதனால் வந்த விரகத்தின் வெம்மைக்கு ஆற்றாதவளாகக், கண்ணீரே நறும் புனலாக ஒழுகிக் கொண்டிருக்கவும் சுழன்று வீழும் கை வளையல்களே செய்ய கரையாக விளங்கவும் கொண்டு உள்ளேயிருக்கும் மோக வாதையினால் கூடலாகிய உறைக் கிணறு செய்பவளானாள் வசந்தவல்லி.*

**தெண்ணீர் வடவருவித் தீர்த்தத்தார் செஞ்சடைமேல்**
**விண்ணீர் புனைந்தார் விரகவெம்மைக்கு ஆற்றாமல்**
**கண்ணீர் நறும்புனலாக் கைவளையே செய்கரையா**
**உண்ணீரிற் கூடல் உறைக்கிணறு செய்வாளே.**

*(இங்ஙனம், காதல் கொண்ட பெண்கள் கூடலிழைத்துப் பார்த்து, அது கூடினால் தம் எண்ணம் கைகூடுமெனவும், கூடாவிட்டால் தம் எண்ணங் கைகூடாதெனவும் அறியும்*

*வழக்கத்தை இலக்கியங்களுள் காணலாம். தெண்ணீர் - தெளிந்த நீர்; விண்ணீர் - ஆகாய கங்கை. உண்ணீர் - உள்ளத்து நீர்மை. உறைக் கிணறு - வட்டவடிவமான பல ஓடுகளை அடுக்காக வைத்துக் கட்டப்படும் கட்டுமானத்தையுடைய கிணறு; இங்கே, சுழலும் வளையல்கள் அப்படி ஒன்றன்மேல் ஒன்றாய் ஓடுகளாகக் கண்மேல் விளங்கக் கண்கள் உறைக் கிணறுகள் போல அமைந்தனவென்க.)*

## 32. கூடாய் கூடலே!

*பாடிய பழைய வேதங்கள் நான்கும் தேடியும் அறியாத நாயகன், நாகர்களும் வந்து பணிகின்ற நல்ல திருக்குற்றால நாதரின் நாயகன்; பாவலர்கள், மக்களின் காவலர்கள், ஆகியோரின் நாயகன்; பதஞ்சலி முனிவர் பணியும் பாதங் களை உடையவன்; வளைந்த இளம்பிறையினைச் சூடி யிருக்கும் நாயகன்; குழல்வாய் மொழியானவள் சேர்கின்ற அழகிய நாயகன்; குறும்பலாவினருகே என்னைக் கூடுவார் என்பது உண்மையானால், கூடலே! நீயும் இப்போது எனக்குக் கூடிவர மாட்டாயோ?*

**பாடியமறை தேடிய நாயகர்**
**பன்னகர்பணி நன்னகர் நாயகர்**
**பாவலர்மனுக் காவலர் நாயகர்**
**பதஞ்சலி பணி தாளர். 1**

**கோடியமதி சூடிய நாயகர்**
**குழல்மொழி புணர் அழகிய நாயகர்**
**குறும்ப லாவினிற் கூடுவர்**
**ஆமெனிற் கூடலே நீகூடாய் 2**

*(பாடியமறை - முழங்கிய வேதங்கள்; தேடிய நாயகர் - வேதங்களையும் கடந்தவன் இறைவன் என்பது கருத்து. பன்னகர் - நாகர்; இவரைப் பாதாள லோக வாசிகள் என்பர். பதஞ்சலி - புலிக்கால் முனிவர்; யோக சூத்திரம் செய்தவர். கோடிய மதி - வளைந்த மதி; இளம்பிறை. குறும்பலாவினிற் கூடுவர் ஆம் எனில் - குறும்பலாவி னருகிலேயே என்னைக் கூடி என் தாபத்தைத் தணிப்பர் என்றாள்.)*

*தாமரை மலர்வாசனாகிய பிரமதேவனையும், நீலமேக வண்ணனாகிய திருமாலையும் அந்நாளிலே அடிமுடி தேடச் செய்து களைத்துச் சோர்ந்து போகும்படி செய்தவர். காம தேவனை எரித்தவர்; சந்திரனைச் சடையிலே முடித்தவர்; எல்லா நன்மைகளுக்கும் காரணமாக விளங்கும் மறையாகிய வேதங்களை அருளிச்செய்தவர்; அந்த வேதங்கள் அனைத்தும் கருதிய ஒரே மூலப்பொருளாக விளங்குபவர்! யானை முதலிய பலவகை உயிரினங்களும் பூசித்த நாயகர்; குறுமுனியாகிய அகத்தியரின் தமிழை மிகவும் விரும்பிக் கேட்டு இன்புற்ற தலைவர். குற்றாலப் பெருமானாகிய அவர், குறும்பலா வினிடத்திலே என்னைக் கூடுவாரானால், கூடலே! நீயும் இப்போது கூடி வருவாயாக.*

**கஞ்சனைமுகில் மஞ்சனை நொடித்தவர்**
**காமனைச் சிறு சோமனை முடித்தவர்**
**காரண மறை ஆரணம் படித்தவர்**
**கருதிய பெருமானார். 1**

**குஞ்சரமுதற் பூசித்த நாயகர்**
**குறுமுனிதமிழ் நேசித்த நாயகர்**
**குறும்ப லாவினிற் கூடுவ**
**ராமெனிற் கூடலேநீ கூடாய். 4**

*(கஞ்சன் - தாமரை மலரிலே வாசஞ் செய்பவன்; பிரமன். முகில் மஞ்சன் - கருநிற மேகம் போன்ற வண்ண முடையவன் திருமால். நொடித்தல் - இளைத்தல். மறை ஆரணம் - மறையாகிய வேதம். கருதிய பெருமான் - அவன் கருதிய பெருமானாகவும் கொள்ளலாம்.)*

*இவ்வாறு வசந்தவல்லியானவள் தன் பாங்கியைத் தூதாக அனுப்பிவிட்டுத் தான் தனித்துக்கிடந்து வெந்து கொண்டிருந்த வேளையிலே, குறவஞ்சியான சிங்கி என்பவள் வந்து குறி சொல்லுகிறாள். அந்தச் செய்திகளை அடுத்த பகுதியிலே காணலாம்.*

★ ★ ★

# IV. குறவஞ்சி நாடகம்

## 1. குறவஞ்சி வருகிறாள்!

*இறையவர் திருவிளையாடல் புரிந்த குற்றாலத்துச் சங்க வீதியிலே, அழகிய நெற்றிக் கண்ணினரான அவர் முன்னே, தரையில் நழுவ விட்டுவிட்ட தன் சங்கு வளையல்களை உள்வீட்டிலே சென்று தேடுவதற்காக இடத்தை வளைத்துக் கொண்டிருக்கும் அடையாளத்தைப் போலக் கூடலிழைத்த வளாக இருந்து கொண்டு வசந்த வல்லியானவள் மயங்கிக் கொண்டிருந்தாள். அந்த வேளையிலே வளையல்கள் நிரம்பிய தன் கைகளை அசைத்தவளாக, மாத்திரைக் கோலினை ஏந்திக் கொண்டு, மணிக்கூடையினையும் இடுப்பிலே தாங்கிக் கொண்டு, மாளிகைகள் நிரம்பிய திருக்குற்றாலநகரின் தெருவினூடே, குறவஞ்சி ஒருத்தியும் வருவாளாயினாள்.*

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

**ஆடல்வளை வீதியிலே அங்கணர்முன்**
**போட்டசங்கம் அரங்கு வீட்டில்**
**தேடல்வளைக்குங் குறிபோற் கூடல்வளைத்**
**திருந்துவல்லி தியங்கும் போதில்**
**கூடல்வளைக் கரம் அசைய மாத்திரைக்கோல்**
**ஏந்திமணிக் கூடை தாங்கி**
**மாடமறு கூடுதிரி கூடமலைக்**
**குறவஞ்சி வருகின் றாளே.**

*(ஆடல் - திருவிளையாடல், வளை - சங்கம்; சங்கவீதி, அங்கணர் - அம் கண்ணர்; அழகிய நெற்றிக் கண்ணினை யுடையவர். அரங்கு வீடு - உள்வீடு. தேடல் வளைக்கும் - தேடுவதற்காகச் சுற்றி வளைத்துக் கொள்ளும். குறவஞ்சி - குறப்பெண்.)*

## 2. வஞ்சி வந்தனள்!

*சைவத்தின் அடையாளமாகிய திரிசூலக் குறியினை வானின் மேலாகவும் தரித்திருப்பது போன்று விளங்கும், தெய்வத்தன்மை பொருந்திய மூன்று சிகரங்களையுடைய திரிகூட மலைக்கு உரியவன்; வான்புனலாகிய மழைநீரை உண்டு அதனால் திகட்டுதல் உடையதாகி அதனை உமிழ்ந்து வருகின்ற இளங்குருகிற்குத் தேன்கலந்த நீரையுண்டு புரை யேறும்படி செய்கின்ற சித்திரா நதிக்கு உரியவன்; ஏரிகள் எல்லாம் நீர்ப்பெருக்கால் செழிக்குமாறு, கடல் நீரை முகந்து பொழியும் மழைநீர் மிகுதியினையுடைய தென்னாரிய நாட்டினுக்கு உரியவன்; இளைய மாமரங்கள் பழுத்தும் கதலிகள் பழுத்தும் வடியும் தேன் எப்புறத்தும் பெருகிப் பாய்ந்து செந்நெல் வயல்களைக் காத்து, ஏராளமான விளைவுப் பெருக்கத்தினை உண்டாக்கும் நன்மை பொருந்திய குற்றால நகரிலே கோவில் கொண்டிருப்பவன் ஓராயிரம் சாகைகளையுடைய வேதங்களாற் சிறப்புற்ற பரியினை யுடையவன்; இரண்டாயிரம் கொம்புகளையுடைய அயிரா வணம் என்னும் யானையினை உடையவன்.*

### ஆசிரியப்பா

சைவமுத் திரையை வானின்மேல் தரிக்கும்
தெய்வமுத் தலைசேர் திரிகூட மலையான்
வான்புனல் குதட்டும் மடக்குரு கினுக்குத்
தேன்புரை ஏறுஞ் சித்திரா நதியான்;
ஏரிநீர் செழிக்க வாரிநீர் கொழிக்கும்
மாரிநீர் வளர்தென் ஆரிய நாட்டான்
கன்னிமாப் பழுத்துக் கதலிதேன் கொழித்துச்
செந்நெல்காத் தளிக்கும் நன்னகர்ப் பதியான்;
ஓராயிரமறை ஓங்கிய பரியான்;
ஈராயிரமருப்பு ஏந்திய யானையான்;

(*சைவமுத்திரை - சூலக்குறி. மடக்குருகு - இளைய புள். குதட்டுதல் - திகட்டுதல். புரை ஏறுதல் - மூக்கில் நீர் ஏறுதல். கன்னிமா - இளைய மாமரம்.*)

வீரவிருதாகிய நெற்றியையுடைய எருதுக்கொடியினை உடையவன், மூவகை முரசுகளும் சதா முழங்கிக் கொண்டிருக்கும் கொலுமண்டபத்தினை உடையவன், அண்டகோடிகளை எல்லாம் தன் ஆணையால் அடக்கி மழை போல் அருள்வெள்ளம் பொழிந்து, அனைத்துயிரையும் காத்தருளும் வெண்கொற்றக் குடையினையும் உடையவன்; இளவழகியாகிய குழல்வாய்மொழி அம்மையினது அருட்கண்களாகிய அழகிய கருவண்டுகள் சதா மொய்க்கின்ற கொன்றை மாலையினை உடையவன்; பூக்கள் நிரம்பிய செண்பகச் சோலையிலே வீற்றிருக்கின்ற தம்பிரான்; தேவர்களின் தலைவன்; அவன் திருவருளை வாய்விட்டுப் பாடிக்கொண்டு, விளங்குகின்ற திருநீற்றையணிந்து கொண்டு நெற்றியிலே பொட்டும் இட்டுக் கொண்டு சிறந்த பாசிமணிமாலையும் குன்றிமணிமாலையும் அணிந்து கொண்டு,

**சேவக விருது செயவிடைக் கொடியான்;**
**மூவகை முரசு முழங்குமண் டபத்தான்;**
**அண்டகோடிகளை ஆணையால் அடக்கிக்**
**கொண்டல்போற் கவிக்கும் கொற்றவெண் குடையான்;**
**வாலசுந் தரிகுழல் வாய்மொழி அருட்கண்**
**கோலவண் டிணங்குங் கொன்றைமா லிகையான்;**
**பூவளர் செண்பகக் காவளர் தம்பிரான்;**
**தேவர்கள் தம்பிரான் திருவருள் பாடி**
**இலகுநீ றணிந்து திலகமும் எழுதிக்**
**குலமணிப் பாசியும் குன்றியும் புனைந்து**

(சேவகம் - ஆண்மை; மூவகை முரசுகள் - படை கொடை மணமுரசுகள். அண்ட கோடிகள் - எண்ணற்ற உலகங்கள். பூவளர் - பூக்கள் வளமுடன் விளங்கும். இலகுநீறு - விளக்க முறத் தோன்றும் திருநீறு. குலமணிப் பாசி - நல்ல மணிகள் கோத்த பாசிமணி மாலை.)

வெளுத்த உடை பொருந்திய இடையிலே தாங்கியிருக்கும் கூடையும், வலதுகையிலே பிடித்திருக்கும் மாத்திரைக் கோலும் சொல்லுக்குச் சொல் விளங்கும் ஒருவிதமான பாசாங்கும் நடக்கும்போது முலைகளிலே ஒரு

குலுக்கமும், கண்களிலே ஒரு சிமிட்டும், வெளியிலே ஒரு பகட்டுமாக, உருவசி அரம்பையாகிய தேவமாதர்களின் கருவமும் அடங்குமாறும், அவன் முறுவலிலே தோன்றும் குறும்புத்தனத்தால் முனிவர்களும் கர்வம் அடங்குமாறும், அவள் சமதையாகப் பேசும் பேச்சினால் சபையெல்லாம் பேச்சு அவிந்து அடங்குமாறும், வானியங்கு முனிவர்களும் அவள் கடைக்கண் வீச்சினால் தம் செயலடங்குமாறும், கொட்டிய உடுக்கு, கோடாங்கிக்குறி முதலியவற்றுடன், மட்டிலாத பிறவகைக் குறிகளையும் தன் கட்டுப் பாட்டினாலே தனக்கு வசமாக அடக்கிக் கொண்ட வளாகச்,

சலவைசேர் மருங்கிற் சாத்திய கூடையும்
வலதுகைப் பிடித்த மாத்திரைக் கோலும்
மொழிக்கொரு பசப்பும் முலைக்கொரு குலுக்கும்
விழிக்கொரு சிமிட்டும் வெளிக்கொரு பகட்டுமாய்
உருவசி அரம்பை கருவமும் அடங்க
முறுவலின் குறும்பால் முனிவரும் அடங்கச்
சமனிக்கும் உரையால் சபையெலாம் அடங்கக்
கமனிக்கு மவரும் கடைக்கணால் அடங்கக்
கொட்டிய உடுக்கோ டாங்கிக் குறிமுதல்
மட்டிலாக் குறிகளும் கட்டினால் அடக்கிக்

*(கூடை - குறிசொல்வோர் வைத்திருக்கும் மணிக்கூடை. மாத்திரைக் கோல் - மந்திரக்கோல். முறுவலின் குறும்பு - புன் சிரிப்பிலே வெளிப்படும் குறும்பு. கமனிக்குமவர் - வானியங்கு முனிவர், அந்தரசாரிகள்.)*

கொங்கணம் ஆரியம் குச்சலம் ஆகிய நாடுகளிலும் செங்கையிலே பிடித்துள்ள தன் மாத்திரைக் கோலினாற் செங்கோல் செலுத்தியபின், கன்னடம் தெலுங்கு கலிங்க நாடுகளிலும் தென்னவரின் தமிழினாலே வெற்றிக்கொடி நாட்டியவளாக, ஆடவர்களுக்கு வலது கையினைப் பார்த்தும், இனிய முறுவலினையுடைய பெண்களுக்கு இடது கையினைப் பார்த்தும், கழிந்த காலத்திலே நிகழ்ந்து போனவைகளைப்

*பற்றிய குறிகளும், தற்போது கைப் பலனாகச் சம்பவித்துக் கொண்டிருக்கின்ற செய்திகளைப் பற்றிய குறிகளும், அதன்மேல் வருங்காலத்திலே வருவது பற்றிய குறிகளும், மனத்திலே எண்ணியவை, உடலின் குறிப்பால் சொல்லக் கூடியவை, கைரேகைகளினால் அறிந்து கூறக்கூடியவை, கண்களின் குறிப்பினால் அறிந்து சொல்லக்கூடியவை, பேச்சிலேருந்து அறிந்து உரைக்கும் குறி இப்படிப்பட்ட எந்தவகைக் குறியானாலும் இமைப் பொழுதிலே உரைக்க வல்லவளான, மைதீற்றிய கண்களையுடைய குறவஞ்சி யானவள், வசந்தவல்லியின் முன்பாக வந்து அப்போது தோன்றினாள்.*

**கொங்கணம் ஆரியம் குச்சலர் தேசமும்**
**செங்கைமாத் திரைக்கோற் செங்கோல் நடாத்திக்**
**கன்னடம் தெலுங்கு கலிங்கராச் சியமும்**
**தென்னவர் தமிழால் செயத்தம்பம் நாட்டி**
**மன்னவர் தமக்கு வலதுகை நோக்கி**
**இன்னகை மடவார்க்கு இடதுகை பார்த்துக்**
**காலமுன் போங்குறி கைப்பல னாங்குறி**
**மெய்க்குறி கைக்குறி விழிக்குறி மொழிக்குறி**
**எக்குறி யாயினும் இமைப்பினில் உரைக்கும்**
**மைக்குறி விழிக்குற வஞ்சி வந்தனளே.**

*(இதனால், குறிசொல்பவர் என்னென்ன வகையிலே குறி சொல்லுவார்கள் என்பதனை நன்கு அறியலாம். மைக் குறி விழி - மை தீற்றிய கண்; மன்னவர் - ஆண்கள்.)*

## 3. கொஞ்சி வருகிறாள்!

*வில்லினைப் போன்று விளங்கும் தன் நெற்றியிலே கஸ்தூரிப் பொட்டு இட்டிருந்தாள். நறுமணங் கமழும் கூந்தலிலே வெட்சிப் பூவைச் சூடியிருந்தாள். கொல்லுந் தன்மையுடன் விளங்கிய மதர்த்த கண்களுக்கு மையெழுதி இருந்தாள். கையிலே மாத்திரைக்கோலைப் பிடித்திருந்தாள். இடுப்பிலே மணிக்கூடை விளங்கிற்று. முலை முகங்களிலே குன்றிமணி மாலையினைப் பூண்டிருந்தாள். இப்படியாகத்*

*திரிகூடநாதரின் மலைச்சாரலிலே வாழ்கின்ற பொற்கொடி போன்ற இன்பக்களஞ்சியமான குறவஞ்சியானவள், காலின் சிலம்புகள் கொஞ்சக் கொஞ்ச நடை நடந்து வருவாளா யினாள்.*

**விருத்தம்**

**சிலைநுதலிற் கஸ்தூரித் திலதமிட்டு**
**நறுங்குழலிற் செச்சைசூடிக்**
**கொலைமதர்க்கண் மையெழுதி மாத்திரைக்கோல்**
**வாங்கி மணிக்கூடை தாங்கி**
**முலைமுகத்திற் குன்றிமணி வடம்பூண்டு**
**திரிகூட முதல்வர்சாரல்**
**மலைதனிற் பொன் வஞ்சிகுற வஞ்சியப**
**ரஞ்சிகொஞ்சி வருகின்றாளே!**

*(சிலைநுதல் - வில்போலும் நெற்றி. நறுங்குழல் - இயல் பாகவே நறுமணமுடைய கூந்தல். அபரஞ்சி - உருக்கி விட்ட தங்கம் போன்ற மேனியர்ள்.)*

## 4. குறவஞ்சி வந்தனளே!

*வஞ்சி வந்தனளே! திருக்குற்றால மலையின் குறவஞ்சி வந்தனளே! வஞ்சிக்கொடி போன்றவள் வார்த்துவிட்ட பொன் போன்ற அழகினையுடையவள்; செவ்வரி படர்ந்த விழிகள் என்னும் நஞ்சினையுடையவள்; முழுமையும் திண்மை யான நெஞ்சத்தையுடையவள்; குறும்பலாவின் அடியிலே வீற்றிருக்கின்ற அஞ்சு சடைமுடிகளை உடைய, மெய்யுணர் வினனான, பாசங்களின் பற்று அற்றவனைத் தன் நெஞ்சிலே நீங்காது எண்ணியவள்; உண்மையான குறிகளைச் சொல்வதற் காக அந்தக் குறவஞ்சியும் வந்தனளே!*

**இராகம் - தோடி** **தாளம் - சாப்பு**

**பல்லவி**

**வஞ்சி வந்தனளே! மலைக்குற வஞ்சி வந்தனளே!**

**அனுபல்லவி**

**வஞ்சி எழில்அப ரஞ்சி வரிவிழிநஞ்சி**
**முழுமற நெஞ்சி பலவினில்**

அஞ்சு சடைமுடி விஞ்சை அமலனை
நெஞ்சில் நினைவொடு மிஞ்சுகுறிசொல (வஞ்சி)

*1. சொக்கட்டான் காய்களை ஒத்த முலைகளை யுடையளவள். இல்லையோ என்று சொல்லும்படியான நுண்மையான இடையினை உடையவள்; வில்லைப் போன்ற நெற்றியினை உடையவள்; முல்லை அரும்புகளையும் வெல்லும் பல்வரிசையினை உடையவள்; பூங்கொடி என்று சொல்லத்தக்க ஒப்பற்ற கொல்லிமலைப் பாவையினும் சிறந்த மெல்லிய பூங்கொடி போன்றவள் இவள் என்று சொல்லு மளவுக்கு மிக்க அழகினையுடையவள்; வட தேசத்தேயுள்ள பெரிய தில்லி மாநகரம் வரையிலும் புகழ் பரவிய பிற்காலத்திலே நேர்ந்து வருகின்றவை பற்றிய குறிகளைச் சொல்லிய இனிய பேச்சினையுடைய நல்லவள். இமய மலையிலே பிறந்த பூங்கொடியான குழல்வாய்மொழிச் செல்வியானவள் சேர்ந்து இன்புறுகின்ற குற்றால நாதருடைய கல்வி சிறந்த மலைக் குறவஞ்சியானவள் அங்கே வந்தனள்!*

**சரணங்கள்**

வல்லை நிகர்முலை இல்லை எனும் இடை
வில்லை அனநுதல் முல்லை பொருநகை
வல்லி எனஒரு கொல்லி மலைதனில்
வல்லி அவளினும் மெல்லி இவள்என
ஒல்லி வடகன டில்லி வரைபுகழ்
புல்லி வருகுறி சொல்லி மதுரித
நல்லி பனிமலை வல்லி குழல்மொழிச்
செல்வி புணர்பவர் கல்வி மலைக்குற (வஞ்சி)

*(வல்லை - சொக்கட்டான் காய்கள். முல்லை - முல்லை யரும்புகள். மெல்லி - மென்மைத் தன்மையுடையவள், அழகி. கொல்லிமலைதனில் வல்லி - கொல்லிப்பாவை. ஒல்லி - அழகி. கல்வி மலை - தமிழ் வளர்த்த பொதியமாதலால் கல்விமலை என்றனர்.)*

*2. குன்றுகளிலே இடுகின்ற மழைக்காலத்து மின்னல்கள் என்னும்படியாக, நெருக்கமாகக் கோத்த குன்றிமணிமாலை*

*அவள் கொங்கைகளிலே தங்கி அசைந்து கொண்டிருந்தது. மணங்கமழும் இளந்தென்றல் இழைந்து வரும் நாசிப் பாதையருகே நிலைபெற்ற முத்துப் புல்லாக்கு விளங்கிக் கொண்டிருந்தது. ஒன்றிலே இரதிதேவியும், மற்றொன்றிலே மன்மதனும் ஊசலாடிக் கொண்டிருப்பது போல இரு செவிகளின் கண் ஆடிக்கொண்டிருந்த குழைகள் விளங்கின. எந்தக் காலத்துக்கும் நிலைபெறுமாறு ஒப்பனையாக எழுதிய மைந்த சித்திர சபையிலே நடனமிடுகின்ற திருவடிகளை உடையவரான திருக்குற்றால நாதரின், வெற்றி கொண்ட மலையிலே வாழ்பவளான குறவஞ்சி அங்கே வந்தனள்!*

**குன்றில் இடுமழை மின்கள் எனநிரை**
**குன்றி வடமுலை தங்கவே**
**மன்றல் கமழ்சிறு தென்றல் வரும்வழி**
**நின்று தரளம் இலங்கவே**
**ஒன்றில் இரதியும் ஒன்றில் மதனனும்**
**ஊசலிடு குழை பொங்கவே**
**என்றும் எழுதிய மன்றில் நடமிடு**
**கின்ற சரணினர் வென்றி மலைக்குற (வஞ்சி)**

*3. அசைந்தாடிக் கொண்டிருக்கின்ற இரு குழைகளாகிய தோடுகளையும், ஒப்பற்ற கூந்தலாகிய காட்டினையும், அவளுடைய இரு விழிகளும் சாடிக் கொண்டிருக்கும் குன்றுகளையும் தம் வடிவாற் பொருதும்படி அமைந்த முலைகளானவை, தம்மை மூடும் மேலாடையினூடே வெளியே பிதுங்கி வர முயல்வனபோல மல்லாடிக் கொண்டிருந்தன. தோடி, முரளி, வராளி, பயிரவி போன்ற இராகங்களின் இனிமை தோன்றுமாறு இசைத்துப் பாடிக் கொண்டே, நெடிய மலையினிலேயுள்ள மயில்கள் ஆடுகின்றதுபோல ஆடியவளாக, திருக்குற்றாலமாகிய நிலவு கவிந்திருக்கும் மலையான திரிகூட மலையிலேயுள்ள குறவஞ்சியானவள் அங்கே வந்தனள்!*

**ஆடும் இருகுழை தோடும் ஒருகுழற்**
**காடும் இணைவிழி சாடவே**

**கோடு பொருமுலை மூடு சலவையின்**
**ஊடு பிதுங்கிமல் லாடவே**
**தோடி முரளி வராளி பயிரவி**
**மோடிபெற இசை பாடியே**
**நீடு மலைமயில் ஆடு மலைமதி**
**மூடி மலைதிரி கூட மலைக்குற (வஞ்சி)**

*(கோடு - குன்றம். சலவை - மேலாடை; சால்வை. மோடி பெற - கேட்பவர் மயக்கமுறவும் ஆம்.)*

## 5. இடைபொறுக்காது!

*'முன் காலத்திலே மேருமலையையே வில்லாக வளைத்தவர் முக்கண்ணராகிய திருக்குற்றாலநாதர். அவருடைய மலைச்சாரலிலேயுள்ள, கன்னங் கரேலெனக் கறுத்திருக்கின்ற கூந்தலுடைய அழகிய குறத்தி அவள். அவளுடைய மார்பினிடத்தே பொற்குடங்களைப் போலப் புடைத்து எழுந்துள்ள பருத்த கொங்கைகளானவை இன்னமும் பருத்தால், அச்சுமையை அவளுடைய இடையானது பொறுக்க மாட்டாது ஒடிந்து விடுமே!' (கண்டோர் கூற்று.)*

**கொச்சகக் கலிப்பா**

**முன்னம் கிரிவளைத்த முக்கணர்குற் றாலவெற்பில்**
**கன்னங் கரியகுழற் காமவஞ்சி தன்மார்பில்**
**பொன்னின் குடம்போல் புடைத்தெழுந்த பாரமுலை**
**இன்னம் பருத்தால் இடைபொறுக்க மாட்டாதே.**

*(கிரி - மேருமலை. காமவஞ்சி - அழகிய பூங்கொடி. காமர் - விரும்பத்தக்க. பாரமுலை - பெரிய முலைகள்.)*

## 6. கொடி வந்தாள்!

*வஞ்சியானவள் வந்தாள்; மலைக் குறவஞ்சியானவள் வந்தாள்; திரிகூட மலையிலேயுள்ள இன்பமோகினியான வசந்தவல்லியின் முன்னாக, அவளுடைய மிதமிஞ்சிய விரக நோய்க்கு ஒரு சஞ்சீவி மருந்தினைப் போலே, குறவஞ்சியானவள் வந்தாள்.*

வட்டமான முலைகளையுடையவரான நங்கையர்க்கு, அவர்கள் மூன்றுலகங்களிலுமுள்ள ஆடவர்களையும் வெற்றி கொள்ளும்படிக்குச் செம்மையான முறையிலே குறிகள் சொல்வதற்காக, 'அம்மே! அம்மே!' என்று கூவிக் கொண்டே, அவர்களுக்குச் செல்லமான குறவஞ்சியானவள் வந்தாள்.

சோலைகளிலே, வசந்த காலத்திலே இளமையுடைய குயிலினம் வந்தாற்போல, அழகிய மலையினையே வில்லாக வளைத்துக் கொண்ட குற்றாலநாதரின் திருக்குற்றால மலையிலே வாழுகின்ற குறவஞ்சியானவள், கூவியபடியே வந்தாள்.

குறிசொல்லும் கருவியாகிய மாத்திரைக்கோல் கையிலே பொருந்தவும், கண்களின் பார்வையே குறி சொல்லுதலிலே அவளுக்குள்ள ஆற்றலை எடுத்துச் சொல்லவும், கண்டவர் போற்றும் வடிவம் ஒளிவீசவும். பூத்த மலர்க் கொடியானது அப்படியே நடந்துவந்தாற் போல, அந்தக் குறவஞ்சியானவள் வந்தாள்.

**இராகம் - தோடி** **தாளம் - ஆதி**

**பல்லவி**

**வஞ்சி வந்தாள் - மலைக்குற - வஞ்சி வந்தாள்**

**அனுபல்லவி**

**வஞ்சி வந்தாள் திரிகூட ரஞ்சித மோகினி முன்னே**
**மிஞ்சிய விரகநோய்க்குச்**
**சஞ்சீவிமருந்துபோலே (வஞ்சி)**

**மும்மை உலகெங்கும் வெல்லக்**
**கொம்மைமுலை யார்க்குநல்ல**
**செம்மையா குறிகள் சொல்ல**
**அம்மே அம்மே என்று செல்ல (வஞ்சி)**

**சோலையில் வசந்த காலம்**
**வாலகோ கிலம்வந் தாற்போல**
**கோலமலை வில்லியார்குற்**
**றாலமலை வாழுங் குற (வஞ்சி)**

மாத்திரைக் கோலது துன்னச்
சாத்திரக் கண்பார்வை பண்ணத்
தோத்திர வடிவம் மின்னப்
பூத்தமலர்க்கொடி என்ன (வஞ்சி)

*(செல்ல - செல்வாக்குள்ள. துன்ன - நெருங்கிப் பொருந்த)*

## 7. மலைவளம் கேட்டாள்!

*தேவலோகத்து வாத்தியங்கள் எப்போதும் முழங்கிக் கொண்டிருக்கின்ற நன்மை பொருந்திய நகரமான அவ்வூரிலே கோவில் கொண்டிருக்கின்ற திருக்குற்றாலநாதரின் அருளைப் பாடிக்கொண்டே வந்த குறவஞ்சியைக் கண்டு, வசந்த வல்லியானவள் மிகவும் மன மகிழ்ச்சி கொண்டாள். 'சாந்தம் பூசிய கொங்கைகளும், துவள்கின்ற இடையும், முத்துப் போன்ற பற்களும், பவளம் போன்ற இதழ்களும் உடைய வளாகிய குறப்பெண்ணே! உன்னுடைய சொந்த மலை எந்த மலையோ? அந்த மலையின் வளத்தைப் பற்றி எனக்குச் சொல்வாயாக!' என்றாள்.*

### விருத்தம்

அந்தரதுந் துபிமுழங்கு நன்னகர்க்குற்
றாலலிங்கர் அருளைப் பாடி
வந்தகுற வஞ்சிதன்னை வசந்தவல்லி
கண்டுமன மகிழ்ச்சி கொண்டு
சந்தமுலை துவளும் இடைத் தவளநகைப்
பவளஇதழ் தையலேயுன்
சொந்தமலை எந்தமலை அந்தமலை
வளமெனக்குச் சொல்லென் றாளே!

## 8. எங்கள் மலையே!

*ஆண் குரங்குகள் பலவகையான பழங்களையும் பறித்துக் கொண்டுவந்து கொடுத்துத் தம் மந்திகளோடு கொஞ்சிக் கொண்டிருக்கும்; அப்போது அம்மந்திகள் கீழே சிந்துகின்ற கனிகளுக்காக எதிர்பார்த்துத் தேவர்களும் கெஞ்சிக் கொண்டிருப்பார்கள். கானவராகிய வேடுவர்கள், தம்*

கண்களால் உறுத்து நோக்கி அந்த வானவர்களைக் கீழே வருமாறு அழைத்துக் கொண்டிருப்பார்கள். வானிலே இயங்கும் சித்தர்கள் பலரும் அடிக்கடி வந்துவந்து காய சித்தி மூலிகைகளை வளர்த்துக் கொண்டிருப்பார்கள். தேனருவியானது அலைகள் மேலே எழும்பிச் சென்று வானின் வழியாக ஒழுகிக் கொண்டிருக்க, அதனால் செங்கதிரோனின் தேர்க் குதிரைகளின் கால்களும் தேர்ச்சக்கரங்களும் வழுக்கிவிழவும் நேரும். வளைந்த இளம்பிறையினைத் தம் சடையிலே முடிந்திருக்கும் அழகினை யுடையவரான குற்றாலநாதரின் அத்தகைய வளமுடைய திரிகூட மலைதான் எங்களுடைய மலையுமாகும்.

**இராகம் - புன்னாகவராளி** **தாளம் - ஆதி**

**கண்ணிகள்**

**வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்**
**மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்**
**கானவர்கள் விழியெறிந்து வானவரை அழைப்பார்**
**கமனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பார்**
**தேனருவித் திரைஎழும்பி வானின்வழி ஒழுகும்**
**செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்**
**கூனலிளம் பிறைமுடித்த வேணியலங் காரர்**
**குற்றாலத் திரிகூட மலைஎங்கள் மலையே.**

முழக்கமிடும் அலைகளையுடைய நீர்வீழ்ச்சியானது தானும் கழங்காடுவதுபோல முத்துகளைச் சொரிந்து கொண் டிருக்கும் கானவர் மனைகளின் முற்றங்களிலெல்லாம் பரவிப் பெண்களின் சிற்றில்களையும் அவ்வருவி நீரானது கொண்டு ஓடிக்கொண்டும் இருக்கும். மலைச்சாரல்களிலே கிழங்கு களைக் கிள்ளி எடுத்தும், தேன் இறால்களை எடுத்தும், மலைவளங்களைப் பாடியும் நாங்கள் நடனமாடுவோம். களிற்றியானைகளின் கொம்புகளை ஒடித்துக் கொணர்ந்து, பூண்கட்டி, அதனாலே வறுத்த தினையினை உரலிலேயிட்டு இடிப்போம். குரங்குகள் இனிய மாமரத்தின் வளமான பழங்களைப் பறித்துப் பறித்துப் பந்தாடுவதுபோல எறிந்து

கொண்டிருக்கும். தேன் பெருகியிருக்கும் செண்பக மலர்களின் வாசமோ வானுலகிலும் சென்று பரவும். அருளோடு அடியவர்களுக்கு வழங்கும் கொடைத்தன்மையினையுடைய மகராசர் திருக்குற்றாலநாதர். குறும்பலாவி னடியிலே கோவில் கொண்டிருக்கும் ஈசராகிய அக்குற்றால நாதருடைய, வளம் பெருகிக் கொண்டிருக்கும் திரிகூட மலையே எங்கள் மலையுமாகும்.

**முழங்குதிரைப் புனலருவி கழங்கெனமுத் தாடும்**
**முற்றம்எங்கும் பரந்துபெண்கள்**
**சிற்றிலைக் கொண்டோடும்**

**கிழங்குகிள்ளித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம்**
**கிம்புரியின் கொம்பொடித்து**
**வெம்புதினை இடிப்போம்**

**செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப்பந் தடிக்கும்**
**தேனலர்சண் பகவாசம்**
**வானுலகில் வெடிக்கும்**

**வழங்குகொடை மகராசர் குறும்பலவில் ஈசர்**
**வளம்பெருகும் திரிகூட**
**மலை எங்கள் மலையே.**

ஆடும் நாகப் பாம்புகள் கக்கும் நாகரத்தினங்கள் கோடி கோடியாகக் கிடந்து ஒளிபரப்பிக் கொண்டிருக்கும். வெண்ணிலவைத் தாம் உண்ணும் வெண்சோற்றுக் கவளமென நினைத்து, யானைகள் அதனை வழிமறித்து நிற்கும். வேடுவர்கள் தினைப்பயிரினை விதைப்பதற்காகப் பண் படுத்தும் தினைப்புனங்கள்தோறும் அவர்கள் காடழித்து நெருப்பிடலால், வியப்பான அகில், குங்குமம், சந்தனம் முதலியவற்றின் நறுமணம் கமழ்ந்து கொண்டிருக்கும். காட்டின் எம்மருங்கும் வரையாடுகள் துள்ளிக் குதித்துப் பாய்ந்து ஓடிக்கொண்டிருக்கும். காகமும் அணுகாத உயர்ந்த மலையுச்சிகளிலே, மேகக்கூட்டங்கள் வந்து படிந்து கொண்டிருக்கும். நெடிய குறும்பலாவினடியிலே இருக்கும்

*ஈசர்; கயிலாச மலையினைத் தமக்கு வாசமாகக் கொண்டவர்; அவர் நிலையாகத் தங்கியிருக்கும் திரிகூட மலைதான் எங்கள் மலையுமாகும்.*

**ஆடுமர வீனுமணி கோடிவெயில் எறிக்கும்**
**அம்புலியைக் கவளமென்று தும்பிவழி மறிக்கும்**
**வேடுவர்கள் தினைவிரைக்கச் சாடுபுனந் தோறும்**
**விந்தை அகில் குங்குமமுஞ் சந்தனமும் நாறும்**
**காடுதொறும் ஓடிவரை ஆடுகுதி பாயும்**
**காகமணு காமலையில் மேகநிரை சாயும்**
**நீடுபல வீசர்கயி லாசகிரி வாசர்**
**நிலைதங்கும் திரிகூட மலைஎங்கள் மலையே.** 12

*கயிலைமலை என்று போற்றப்படுகின்ற வடதிசையிலுள்ள மலைக்கு ஒப்பாகத் தென்திசையிலே விளங்கும் மலை இந்தத் திரிகூட மலையேயாகும். 'பொன்னிறமான மகா மேரு மலை போலும்' என்று சொல்லும்படியாக உயர்ந்து நிற்கும் மலை, இந்த மலையேயாகும். சிவசயில மலை என்று கூறப்படும் தென்திசையிலேயுள்ள மலைக்கு வடதிசையிலே இருக்கும் மலை இந்த மலையேயாகும். சகல மலைகளும் கொண்டிருக்கும் சிறப்புகள் எல்லாவற்றையும் தனக்குள்ளே அடக்கிக் கொண்டிருக்கும் மலையும் இந்த மலையேயாகும். வயிரக் கற்களும் மாணிக்கங்களும் விளைகின்ற மலையும் இந்த மலையேயாகும். வானத்துக் கதிரவன் மலைக் குகைகள் தோறும் நுழைந்து நுழைந்து ஒளிபரப்பும் மலையும் இந்த மலையேயாகும். திருப்பாற்கடலிலே பாம்பணைமேல் துயில் கொண்டிருப்பவரான திருமாலும் கண் விழித்துக் கொண்டவராகி, அகிலமெல்லாம் தேடித் திரிகின்ற மேன்மையாளராகிய திருக்குற்றாலநாதரின், இந்தத் திரிகூட மலையே எங்கள் மலையுமாகும்.*

**கயிலை எனும் வடமலைக்குத் தெற்குமலை அம்மே**
**கனகமகா மேருஎன நிற்குமலை அம்மே**
**சயிலமலை தென்மலைக்கு வடக்குமலை அம்மே**
**சகலமலை யுந்தனக்குள் அடக்குமலை அம்மே**

வயிரமுடன் மாணிக்கம் விளையுமலை அம்மே
வானிரவி முழைகள் தொறும் நுழையுமலை அம்மே
துயிலுமவர் விழிப்பாகி அகிலமெங்கும் தேடும்
துங்கர்திரி கூடமலை எங்கள் மலை அம்மே. 16

*கொல்லிமலை என்பது எனக்கு இளையவளாகப் பிறந்த என் தங்கையான செல்லி என்பவள் இருக்கும் மலையாகும். என் கொழுநனுக்குக் காணியாட்சியான மலை பழநிமலை யாகும். கதிரவன் படிந்துசெல்லும் விந்தியமலை என் தந்தைக்குரிய மலையாகும். இமயமலை என்னுடைய தமையனுக்குரிய மலையாகும். சொல்வதற்கு அருமை யுடையதான சுவாமி மலை என்னுடைய மாமியின் மலையாகும். என் தோழியின் மலை நாஞ்சில் நாட்டிலுள்ள வேள்விமலையாகும். மேகக் கூட்டங்கள் முழவுகளைப் போல இடிமுழக்கினைச் செய்ய; அதற்கிணங்க மயிலினங்கள் ஆடிக்கொண்டிருக்கும் திரிகூட மலையே எங்கள் மலையாகும்.*

கொல்லிமலை எனக்கிளைய செல்லிமலை அம்மே
கொழுநனுக்குக் காணிமலை பழநிமலை அம்மே
எல்லுலவும் விந்தைமலை எந்தைமலை அம்மே
இமயமலை என்னுடைய தமையன்மலை அம்மே
சொல்லரிய சாமிமலை மாமிமலை அம்மே
தோழிமலை நாஞ்சிநாட்டு வேள்விமலை அம்மே
செல்லினங்கள் முழவுகொட்ட மயிலினங்கள் ஆடும்
திரிகூட மலையெங்கள் செல்வமலை அம்மே! 20

*(சொல்லரிய - சொல்லால் போற்றுதற்கும் அருமை யுடைய. செல்லினங்கள் - மேகக் கூட்டங்கள். எல் - சூரியன்.)*

*எங்கள் குலத்தைத் தவிர வேறொரு குலத்திலே பெண் கொடுக்கவும் மாட்டோம், பெண் கொள்ளவும் மாட்டோம். எங்கள் சாதியினரை ஒருவர் உறவு பிடித்துக் கொண்டனரென்றால், எந்நாளும் அந்த உறவை நாங்கள் கைவிடவும் மாட்டோம். அப்படிப்பட்ட குறவர் குலத்தவர் நாங்கள். நாங்கள் அச்சங்கொண்டு நடுங்கும்படியாகத்*

தினைப்புனத்திலே வந்த பெரிய மிருகமாகிய யானையை விலக்கி, வேங்கைமரமாகி நின்று எமக்கு நிழல் செய்த அந்த நன்மையினை எண்ணியே அருளாளரான இலஞ்சி வேலவர்க்கு, எம்குலத்துப் பெண்களுள் ஒருத்தியை மனைவி யாக நாங்கள் கொடுத்தோம். அதற்காக, எங்கள் ஆதினத் திலிருந்த பிற மலைகளையெல்லாம் அவளுக்குச் சீதனமாகவும் கொடுத்தோம். ஞாயிறும் திங்களும் சுற்றி வருகின்ற மகாமேரு மலையினைத் துருவன் என்பவனுக்குக் கொடையாகக் கொடுத்து உதவினோம். அத்தகைய பெருமையுடைய எங்களுடைய மலையானது, பரமனாகிய குற்றாலநாதர்க்கு உரிய திரிகூட மலையாகிய பழைய மலையேயாகும்.

**ஒருகுலத்தில் பெண்கள் கொடோம் ஒருகுலத்திற் கொள்ளோம்**
**உறவுபிடித் தாலும்விடோம் குறவர்குலம் நாங்கள்**
**வெருவிவருந் தினைப்புனத்திற் பெருமிருகம் விலக்கி**
**வேங்கையாய் வெயில்மறைத்த பாங்குதனைக் குறித்தே**
**அருளிலஞ்சி வேலர்தமக்கு ஒரு பெண்ணைக் கொடுத்தோம்**
**ஆதினத்து மலைகளெல்லாம் சீதமாக் கொடுத்தோம்**
**பருதிமதி சூழ்மலையைத் துருவனுக்குக் கொடுத்தோம்**
**பரமர்திரி கூடமலை பழையமலை அம்மே.** 24

(ஒரு பெண் - ஒப்பற்ற பெண்ணாகிய வள்ளிநாயகி. ஆதினத்து மலை - ஆட்சியிலிருக்கும் மலைகள்.)

## 9. வசந்தவல்லி சொன்னது!

சங்கக் குழைகளின் வளம் செறியுமாறு விளங்கும் காதுகளை உடையவர் திருக்குற்றாலநாதர். அவருடைய மலையிலே வாழ்ந்து வருகின்ற இளமயிலினைப் போன்றவளே! "யானைத் தந்தங்களினுடைய அழகினை உன் கொங்கைகள் காட்டும். பூங்கொடியின் நுண்மை வளத்தினை உன்னுடைய நுண்மையான இடையானது காட்டும். குறிஞ்சி மலர்கள் பூத்துள்ள காட்டின் வளத்தினை உன் கரிய கூந்தலானது காட்டிக் கொண்டிருக்கும். இப்படி நின் தோற்றமே மலை வளத்தின் சிறப்பினைக் காட்டிக்

கொண்டிருக்கும் போது, நீ நின் வாயினால் உரைத்து அவற்றையெல்லாம் காட்டுவது எதற்காகவே? உமது நாட்டின் வளத்தினையும் குற்றாலத்தலத்தின் வளத்தினையும் எனக்கு இனி எடுத்துச் சொல்லுவாயாக.

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

**கோட்டுவளம் முலைகாட்டும் கொடியின்வளம்**
**இடைகாட்டும் குறிஞ்சி பூத்த**
**காட்டுவளம் குழல்காட்டும் மலைவளந்தான்**
**நீயுரைத்துக் காட்டு வானேன்**
**தோட்டுவளம் புரிகாதல் குற்றால**
**மலைவளரும் தோகை யேஉன்**
**நாட்டுவளம் எனக்குரைத்துக் குற்றாலத்**
**தலவளமும் நவிலு வாயே.**

## 10. நாட்டு வளம் கூறுதல்

(1) மாமரங்களிலே இருந்து கொண்டு குயில்களாகிய திருச்சின்னங்கள், 'காமத்துரை வந்தான் வந்தான்' என்று முழக்கமிட்டுக் கொண்டிருக்கும். பருத்த முலைகளிலே முத்தாரங்கள் கிடந்து புரளும். மின்னல் போன்ற அழகினையுடையவரான பெண்கள், அவரவர்களுடைய அல்குல் தேர்களை அலங்காரம் செய்து கொண்டிருப் பார்கள். மிகப் பெரிய திங்களாகிய வெண்கொற்றக் குடையானது மேலே கவிந்து கொண்டிருக்கும். பறக்கின்ற கிளிகளாகிய குதிரைகள் தேர்களின் முன்னே கொஞ்சிச் சென்று கொண்டிருக்கும். இப்படியாகிய இளந்தென்ற லாகிய தேரினையுடையவனாகக், காமதேவன் வந்து உலாவருகின்ற சிறப்பினையுடையது திருக்குற்றால நாதரின் தென்னாரிய நாடாகும்.

**இராகம் - கேதாரகௌளம்) (தாளம் - சாப்பு**

**கண்ணிகள்**

**கூர மாங்குயிற் சின்னங்கள் காமத்**
**துரைவந் தான் துரை வந்தானென் றூத**

**ஆர மாமுலை மின்னார் அவரவர்**
**அல்குல் தேர்கள் அலங்காரஞ் செய்யப்**
**பார மாமதி வெண்குடை மிஞ்சப்**
**பறக்கும் கிள்ளைப் பரிகள்முன் கொஞ்சத்**
**தேரின் மாரன் வசந்தன் உலாவுந்**
**திருக்குற் றாலர்தென் ஆரிய நாடே. 1**

*(2) மேகத்தை ஒப்பான கருமையுடைய கூந்தலை உடையவரான பெண்களைக் கண்டு நாணங் கொண்டவை யாகக் கடலை நோக்கிச் சென்று சேர்ந்தன கறுப்பான மேகங்கள். அங்கே கடல் நீரை முகந்து கொண்டு, கச்சுகளைச் சேர்ந்த கொங்கைகளுக்கு ஒப்பான மலைகளைச் சேர்ந்து, அங்கே வானத்தே வில்லினை இட்டு, நீரைச் சேர்ந்த மழைத் தாரையாகிய அம்புகளுடன், நெடிய கீழ்க்காற்றாகிய தேரிலே ஏறி, வெம்மையாளனாகிய கதிரவனின் தேரைச் சுற்றி முற்றுகையிட்டுக் காலத்தையும் கார்காலமாக மாற்றி, முதுவேனிலை வெற்றிகொள்ளும் வளத்தினையுடையது, திருக்குற்றாலநாதரின் தென் ஆரிய நாடாகும்.*

**காரைச் சேர்ந்த குழலார்க்கு நாணிக்**
**கடலைச் சேர்ந்த கறுப்பான மேகம்**
**வாரைச் சேர்ந்து முலைக்கிணை யாகும்**
**மலையைச் சேர்ந்து சிலையொன்று வாங்கி**
**நீரைச் சேர்ந்த மழைத்தாரை அம்பொடு**
**நீளக் கொண்டலம் தேரேறி வெய்யவன்**
**தேரைச் சூழ்ந்திடக் கார்காலம் வெல்லும்**
**திருக்குற்றாலர்தென் ஆரியநாடே. 2**

*(3) எருமை மாடுகள் கூட்டங் கூட்டமாக இறங்குகின்ற நீர்த்துறையிலே, அவை சொரிகின்ற பாலினைப் பருகிய வாளைமீன்களானவை. மணம் பொருந்திய கூழைப் பலாவினை நோக்கிப் பாயும். அதனால் கொழுவிய பலாக்கனிகள் வாழை மரங்களின் மேலே உதிரும். வாழை மரங்கள் சாய்ந்து ஒப்பற்ற தாழை மரத்தினைத் தாக்கும். வருகின்ற விருந்தினர்க்குச் சோறிட்டு உபசரிப்பவரைப்*

*போலத், தாழை அப்போது மகரந்தத்தோடு கூடிய பூக்களைச் சோறுபோலச் சொரியும். வாழை தன் குருத்தினை விரித்து அச் சோற்றினை ஏந்திக் கொண்டிருக்கும். இத்தகைய வளமுடையது சந்திரசூடரின் தென்னாரிய நாடு.*

**சூழ மேதி இலங்குந் துறையிற்**
**சொறியும் பாலைப் பருகிய வாளை**
**கூழை வாசப் பலாவினிற் பாயக்**
**கொழும்ப லாக்கனி வாழையிற் சாய**
**வாழை சாய்ந்தொரு தாழையில் தாக்க**
**வருவி ருந்துக் குபசரிப் பார்போல்**
**தாழை சோறிட வாழை குருத்திடும்**
**சந்த்ர சூடர்தென் ஆரிய நாடே.** 3

*(மேதி - எருமை. துறை - ஆற்றின் இறங்குமிடம். வாளை - வாளை மீன். கூழைப்பலா - பலாவிலே ஒரு வகை. தாழைச் சோறு - தாழைப் பூக்களின் மகரந்தம். சந்திரசூடர் - சந்திரனைச் சடையிலே சூடியவர்; குற்றால நாதர்.)*

*(4) அழகிய நல்லாரான இள நங்கையர்களின் இனிய சொற்களைப் பழித்ததென்று. ஆடவர்கள் கரும்புகளை வெட்டி மண்ணிலே புதைத்து மூடுவர். எனினும், அவை மீண்டும் செழிப்புடன் வளர்ந்து மடந்தையரின் தோள் அழகையும் தம் பொலிவினாலே வெற்றி கொள்ளும். ஒளியுடைய முத்துகளை ஈன்று, பின்னர் அவர்களுடைய பற்களையும் வெற்றி கொள்ளும். அதன்பின், அவர்களுடைய காதலர்கள் பிரிந்துபோன காலத்திலே, பெண்மையை முற்றிலும் வெற்றி கொள்ளக் கருதி, மதனவேளுக்குரிய கரும்பு வில்லாகவும் சிறந்து விளங்கும். இப்படிப்பட்ட கரும்பு வளம் உடையதான குற்றால நாதருக்குரிய தென்னாரிய நாடே எங்கள் நாடாகும்.*

**அந் நலார்மொழி தன்னைப் பழித்ததென்று**
**ஆடவர் மண்ணில் மூடும் கரும்பு**
**துன்னி மீள வளர்ந்து மடந்தையர்**
**தோளை வென்று சுடர்முத்தம் ஈன்று**

பின்னும் ஆங்கவர் மூரலை வென்று
பிரியுங் காலத்திற் பெண்மையை வெல்லக்
கன்னல் வேளுக்கு வில்லாக ஓங்கும்
கடவுள் ஆரிய நாடெங்கள் நாடே. 4

*(5) தகுதியான வளமுடைய பூமிக்குள்ளே முதன்மை உடையதாக விளங்கும் வளநாடு; சகல தேவர்களுக்கும் அனபுடையதாக விளங்கும் தெய்வீக நாடு; திசைகள் அனைத்திலும் வளர்ந்து ஓங்கிய நாடு; சிவத்துரோகம் என்ற தீமை அறவே நீங்கிப் போன சிவநாடு; பழைமையான நான்மறைகளும் பாடிப் பரவிய நாடு; மைதீற்றிய கண்களையுடைய குழல்வாய் மொழியினைப் பாகமாக உடையவரின் இளந்தென்றல் உலவும் ஆரிய நாடு; இதுவே எங்கள் நாடாகும்.*

தக்க பூமிக்கு முன்புள்ள நாடு
சகல தேவர்க்கும் அன்புள்ள நாடு
திக்கெ லாம்வளர்ந் தோங்கிய நாடு
சிவத்து ரோகமும் நீங்கிய நாடு
முக்க ணான்விளை யாடிய நாடு
முதிய நான்மறை பாடிய நாடு
மைக்க ணாங்குழல் வாய்மொழி பாகர்
வசந்த ஆரிய நாடெங்கள் நாடே 5

*(6) அகத்திய முனிவர் ஐந்நூறு வேள்விகளைச் செய்து முடித்ததற்கு இடமாயிருந்த நாடு; அநேக கோடி யுகங்களைக் கண்ட மிகவும் பழைய நாடு; தாமரை மலரிலே தோன்றிய நான்முகன் வந்து பிறக்கின்ற நாடு; திருமகளும் கலைமகளும் போற்றுகின்ற நாடு; செம்மையான தமிழ்ச் சொல் வளமுடைய பெரிய முனிவரான அகத்தியர் வந்து சார்ந்த நாடு; சிவந்த கண்களையுடைய திருமால் சிவனாகிய நாடு; பெண்ணைப் பாகத்திலே யுடைய திரிகூட நாதரின், தென்றல் உலவும் ஆரிய நாடே எங்கள் நாடாகும்.*

அஞ்சுநூறு மகம்கொண்ட நாடு
அநேக கோடி யுகங்கண்ட நாடு

**கஞ்ச யோனி உதிக்கின்ற நாடு**
**கமலை வாணி துதிக்கின்ற நாடு**
**செஞ்சொல் மாமுனி ஏகிய நாடு**
**செங்கண் மால்சிவன் ஆகிய நாடு**
**வஞ்சி பாகர் திரிகூட நாதர்**
**வசந்த ஆரிய நாடெங்கள் நாடே. 6**

*(7) மாதந் தவறாமல் மூன்று மழை பொழிகின்ற நாடு; வருடம் மூன்று போகங்கள் வீதம் விளைகின்ற நாடு; வேதங்களே வேர், மரம், பயன் என மூன்றாகவும் அமைந்த குறும் பலா மரத்தினை உடைய நாடு; நித்தியம், நைமித்திகம், காமியம் ஆகிய மூவகைச் சிறப்புகளும் தவறாமல் நிகழ்கின்ற நாடு; பிறப்பு, வாழ்வு, இறப்பு என்னும் மூன்று நிலைகளினும் நன்மை விளைவிக்கும் சிவநாடு; மூன்று புவனங்களாகிய மேல், நடு, கீழ் ஆகியவற்றில் உள்ளாரனை வரும் வலஞ்செய்து போற்றும் நாடு; நாத தத்துவத்தின் மெய்ப் பொருளாக, அரி, அயன், அரன் என மூன்றுருவாக விளங்கும் குற்றால நாதரின் ஆரிய நாடே எங்கள் நாடாகும்.*

**மாதம் மூன்றும் மழையுள்ள நாடு**
**வருடம் மூன்று விளைவுள்ள நாடு**
**வேதம் மூன்றும் பலாவுள்ள நாடு**
**விசேஷம் மூன்றும் குலாவுள்ள நாடு**
**போதம் மூன்றும் நலம்செயும் நாடு**
**புவனம் மூன்றும் வலஞ்செயும் நாடு**
**நாதம் மூன்றுரு வானகுற் றால**
**நாதர்ஆரிய நாடெங்கள் நாடே. 7**

*(8) இந்நாட்டினை வந்து சேர்ந்திருப்பவர்கள் தங்களிடம் இருந்து போய்விடக் காண்பதெல்லாம் தம்மிடமுள்ள பாவங்களேயாகும். இந்நாட்டிலே எம்மருங்கும் நெருங்கிக் கிடக்கக் காண்பதெல்லாம் வயல்களிலேயுள்ள கரும்பும் செந்நெல்லுமேயாகும். இங்கே தொங்கிக் கொண்டிருக்கக் காண்பதெல்லாம் மாம்பழக் கொத்துகள்தாம். இங்கே சுழன்று கொண்டிருக்கக் காண்பதெல்லாம் தயிர்கடையும் அழகிய*

மத்துகள்தாம். இங்கே வீக்கமுடன் விளங்கக் காண்ப தெல்லாம் மங்கையரின் கொங்கைகள்தாம். வெடிக்கக் காண்பதெல்லாம் தோட்டத்திலேயுள்ள முல்லை யரும்புகள்தாம். ஏங்கக் காண்பது எல்லாம் மங்கலமான பேரிகைகளின் ஒலியேயாம். இப்படிப் பட்ட ஈசருக்குச் சொந்தமான மேலான நாடே எங்களுடைய நாடாகும்.

**நீங்கக் காண்பது சேர்ந்தவர் பாவம்**
**நெருங்கக் காண்பது கன்னலிற் செந்நெல்**
**தூங்கக் காண்பது மாம்பழக் கொத்து**
**சுழலக் காண்பது பூந்தயிர் மத்து**
**வீங்கக் காண்பது மங்கையர் கொங்கை**
**வெடிக்கக் காண்பது கொல்லையின் முல்லை**
**ஏங்கக் காண்பது மங்கல பேரிகை**
**ஈசர் ஆரிய நாடெங்கள் நாடே.** 8

*(பாவந் தவிர ஏதும் இங்கே நீங்குவதில்லை. கன்னலும் செந்நெலும் நெருங்குவது தவிரப் பிற நெருக்கடிகள் இங்கே இல்லை. மாம்பழம் தொங்குவதன்றி மனிதர்கள் தொங்கிக் கிடந்து வாடுவதில்லை. மத்துகள் சுழல்வதன்றி மக்கள் வருந்தி வாடி மனம் சுழல்வதில்லை. கொங்கைகள் வீங்குவதன்றிக் குறிப்பிட்டார் சிலர் மட்டும் செல்வத்தால் வீக்கம் பெறுவதில்லை. பேரிகை புலம்புவதன்றி மக்களுள்ளே எவரும் வாய்விட்டுப் புலம்புவதில்லை. இத்தகைய வளநாடு என்கிறார். தூங்குதல் - தொங்குதல். வீங்குதல் - பூரித்தல். ஏங்குதல் - புலம்புதல்.)*

*(9) இங்கே ஓடிக் கொண்டிருக்கக் காண்பதெல்லாம் பூக்களுடன் வரும் புதுவெள்ளப் பெருக்கமேயன்றி மக்கள் அல்லர். இங்கே ஒடுங்கக் காண்பதெல்லாம் யோகியரின் உள்ளங்களேயன்றி மக்கள் அல்லர். இங்கே வாடக் காண்பது எல்லாம் நங்கையரின் இடைகளேயன்றி மக்களுள் எவரும் அல்லர். இங்கே வருந்தக் காண்பதெல்லாம் முத்துகளை ஈன வருந்தும் சங்கினங்களே யன்றி மனிதர்கள் அல்லர். இங்கே போடக் காண்பதெல்லாம் பூமியில் வித்துகளே யல்லாமல்*

பயனற்றவர் என எவருமே கழித்துப் போடப் படுவதிலர். இங்கே, புலம்பக் காண்பதெல்லாம் கிண்கிணிக் கொத்துகளே யல்லாமல் ஏழையரான மக்கள் அல்லர். இங்கே அனைவரும் தேடிக் கொண்டிருக்கக் காண்பதெல்லாம் நல்ல அறநெறி களும் புகழுமேயல்லாமல் போலிச் செல்வங்கள் அல்ல. இத்தகைய சிறப்புடைய திருக்குற்றால நாதர் வாழுகின்ற தென் ஆரிய நாடே எங்கள் நாடாகும்.

**ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம்**
**ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம்**
**வாடக் காண்பது மின்னார் மருங்குல்**
**வருந்தக் காண்பது சூலுளைச் சங்கு**
**போடக் காண்பது பூமியில் வித்து**
**புலம்பக் காண்பது கிண்கிணிக் கொத்து**
**தேடக் காண்பது நல்லறம் கீர்த்தி**
**திருக்குற் றாலர்தென் ஆரிய நாடே. 9**

## 11. நகர்வளம் உரைப்பேன்!

திருமால், அயன் ஆகியோரும், வேதங்கள் ஆகியவை யும் கூடத் தினந்தினந் தேடியும் காணுதற்கு அரிதாக நிற்கின்றவன் சிவபெருமான். அவனுக்கு உரியது திரிகூட நகரம். அது இருக்கின்ற திரிகூட நாட்டின் வளமோ உரைக்க உரைக்கத் தெவிட்டாத இனிமையினை உடையதாகும். ஆண் களிறுகளுடன் பெண்பிடிகள் கலந்து கூடித் திரிகின்ற மலைச்சாரலிலே, ஒரு வேடனானவன் தன் கையிலே வில்லினை ஏந்தியவனாக, நரியினைத் துரத்தியவாறே கயிலைமலையைச் சென்றடைந்து முத்தி பெற்றனன். அத்தகைய சிறப்புடையது இத் திரிகூட மலை. இதன் மகிமையையும் இனி நான் சொல்வேன்; நீ கேட்பாயாக.

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.**

**அரிகூட அயன்கூட மறைகூடத்**
**தினந்தேட அரிதாய் நின்ற**
**திரிகூடப் பதியிருக்கும் திருநாட்டு**
**வளமுரைக்கத் தெவிட்டாதம்மே**

கரிகூடப் பிடிதிரியுஞ் சாரலிலே
ஒரு வேடன் கைவில் ஏந்தி
நரிகூடக் கயிலைசென்ற திரிகூடத்
தலமகிமை நவிலக் கேளே.

*(அவர்கள் தேடற்குமரிதாய் நின்ற பெருமான், அடியார்க்கு அருள் புரிவானாகக் கோவில் கொண்ட காட்சி தரும் பதியாதலால், அதன் சிறப்பு உரைக்க உரைக்கத் தெவிட்டாதது என்றனர். வேடன் முத்திபெற்ற வரலாறு புராணங்களுட் காண்க.)*

## 12. நகர் வளம்

*மெய்யறிவினை உடையவரான முனிவர்களும் சித்திரா நதியினுடைய மூலத்தை இன்னவிடத்தது என்று அறிய மாட்டார்கள். அதனை நான் அறிந்த வகையினைச் சிறிது சொல்வேன் கேட்பாயாக. மேன்மை பெற்றிருக்கின்ற திரிகூடத்திலே தேனருவித் துறையினிடத்தே தேவர்களும் அறியமாட்டாத இரகசியம் உடையதாக வந்து ஒரு சிவலிங்கமானது தோன்றியிருந்தது. அத்தகைய தேனருவித் துறையினைப் பற்றிச் சொல்லப்பட்ட இடமானது, எவ்விடத்தே இருக்கிறதென்று அறிய மாட்டாமல், தான் அவ்விடத்தேயிருந்து தவஞ்செய்வதற்காக வந்த அயனானவன், பலவிடங்களிலும் தேடித் தேடித் திரிந்து அலைந்தனன். அந்தக் காலத்திலே மௌன நிலையினை எய்திய தேவனாகிய அந்த அயனுக்கு, எங்கள் இனத்தவரான கானவர்கள், 'பழைமை யுடைய கங்கையிருக்குமிடம் இதுவே' எனக் காட்டிக் கொடுத்த ஆறே, இந்நாளிலே சிவமதுகங்கை என வழங்கப் பெறுகின்ற ஆறாகும்.*

**இராகம் - பிலஹரி** **தாளம் - சம்பை**

**கண்ணிகள்**

ஞானிகளும் அறியார்கள் சித்ரநதி மூலம்
நானறிந்த வகைசிறிது பேசக்கேள் அம்மே!
மேன்மைபெறுந் திரிகூடத் தேனருவித் துறைக்கே
மேவுமொரு சிவலிங்கந் தேவரக சியமாய்

ஆனதுறை அயனுரைத்த தானம் அறியாமல்
அருந்தவத்துக்காய்த்தேடித்திரிந்தலையும் காலம்
மோனவா னவர்க்கெங்கள் கானவர்கள் காட்டும்
முதுகங்கை ஆறுசிவ மதுகங்கை ஆறே. 4

*(மோனம் - மௌனநிலை. முதுகங்கை - பழைமையினை யுடைய தான தேவகங்கை.)*

*அந்தச் சிவமதுகங்கையின் மகிமையினை உலக மெல்லாம் புகழ்ந்து கூறிக் கொண்டிருக்கும். அத்தகைய ஆற்றின் கரையிலே விளங்கும் செண்பகாடவித் துறையின் பண்பினையும் நான் சொல்லுகின்றேன் கேட்பாயாக; தவஞ் செய்யும் முனிவர்களுடைய கூட்டமும் அவர்கள் தங்கி யிருக்கின்ற மலைக்குகைகளும், சஞ்சீவி முதலான வியப்பான பலப்பல மூலிகைகளும் உடையதாக, வான் வழியே செல்லும் சித்தர்கள் முதலானோரும் மோன நிலையினைப் பெற்றுள்ள யோக புருஷர்களும், இறைவனின் தரிசனத்தை வேண்டிக் காத்துக் கிடக்கின்ற திருக்கைலாயத்தினைப் போன்றிருக்கும் அந்த அடவி. நவ நிதிகளும் விளைகின்ற சிறப்பினையுடைய அவ்விடத்தினைக் கடந்து சென்றால் நங்கைமார்களின் குரவையொலியினைப் போலே அலையெறிந்து ஒலிமுழங்கிக் கொண்டிருக்கும். 'பொங்கு மாங்கடல்' என்ற தீர்த்தத் துறையைக் காணலாம்.*

சிவமதுகங் கையின் மகிமை புவனமெங்கும் புகழும்
செண்பகா டவித்துறையின் பண்புசொல்லக் கேளாய்
தவமுனிவர் கூட்டரவும் அவரிரும் குகையும்
சஞ்சீவி முதலான விஞ்சைமூ லிகையும்
கவனசித்தர் ஆதியரும் மவுனயோ கியரும்
காத்திருக்கும் கயிலாயம் ஒத்திருக்கும் அம்மே!
நவநிதியும் விளையுமிடம் அவிடம் அது கடந்தால்
நங்கைமார் குரவையொலிப் பொங்குமா கடலே. 8

*(செண்பகாடவித் துறை - செண்பகமரக் காடுகள் செறிந்த துறை. கூட்டரவும் - கூட்டத்தாலே எழும் அரவமும் நவநிதி - நவமணிகளாகிய செல்வங்கள்.)*

அந்தப் பொங்குமாங் கடலானது கங்கை, யமுனை, சரசுவதி ஆகிய நதிகள் ஒன்று கலக்கும் திரிவேணி சங்கமத்தினைப் போன்ற புண்ணியச் செழிப்பினையுடைய தாகும். அதனைப் பொருந்தியுள்ள சித்திரா நதியின் துறைகள் பொன்னும் முத்தும் கொழிக்கும் வளமுடையனவாகும். ஆகாய கங்கைநீர் என்று சொல்லும்படியாக வான வில்லிட்டு வீழுகின்ற வடவருவித் தீர்த்தத்திலே கலந்து நீராடினால், கழுவப்பட்ட நீரிலே அழுக்குகள் கரைந்து ஓடுவதைப் போல, நீராடுவோரின் பாவங்கள் அனைத்தும் அவரை விட்டுத் தொலைந்து ஓடிப்போகும். அந்தச் சித்திரா நதியானது சங்க வீதியிலே பரவிச் செல்ல, அங்கே சங்கினங்கள் மேய்ந்து கொண்டிருக்கும். பெரிய மதில்களின் உச்சியிலே எப்புறமும் கொழுமையான கயல் மீன்கள் துள்ளிப் பாய்ந்து கொண் டிருக்கும், பூங்கொத்துகள் இதழ் விரிந்து மணம் வீசிக் கொண்டிருக்கும் செண்பகச் சோலையினையுடைய குறும்ப லாவினடியிலே கோவில் கொண்டிருக்கும் பெருமானின், குற்றாலத்தலம் என்னும் திரிகூடத்தலமே, எங்களுடைய நகரமாகும்.

**பொங்குகடல் திரிவேணி சங்கமெனச் செழிக்கும்**
**பொருந்து சித்திரா நதித்துறைகள் பொன்னுமுத்தும் கொழிக்கும்**
**கங்கையெனும் வடவருவி தங்குமிந்த்ர சாபம்**
**கலந்தாடிற் கழுநீராய்த் தொலைந் தோடும் பாவம்**
**சங்கவீ தியிற்பரந்து சங்கினங்கள் மேயும்**
**தழைத்தமதிற் சிகரமெங்கும் கொழுத்த கயல்பாயும்**
**கொங்கலர் செண்பகச் சோலைக் குறும்பலா ஈசர்**
**குற்றாலத் திரிகூடத் தலமெங்கள் தலமே.** 12

குற்றாலநாதர் திருநடனம் செய்யும் மன்றமாகிய சித்திரசபையிலே, தேவ முரசமானது எப்போதும் மேனமை யாக ஒலிமுழங்கிக் கொண்டிருக்கும். வளமை பெற்றனவான நான்கு யுகங்களுங்கூட இத்தலத்திலே இருப்பவர்க்கு நான்கு கிழமைகளைப் போலக் கழிந்து போகும். மதயானையானது

*நாள் தவறாமல் வந்து நின்று, அந்நாளிலே சிவ பூசை செய்து பேறுபெற்ற தலமும் இதுவேயாகும். அனைவரும் பழித்துப் பேசிய புட்பகந்தன் என்பவன், வழிபாடு செய்து பேறுபெற்ற தலமும் இதுவேயாகும். பன்றியுடன் வேடனும் கூடி வலஞ்செய்து முத்தி பெற்ற தலமும் இதுவே யாகும். அடியவர்கள்பால் பாசத்னையுடையவராக இறையவர் வீற்றிருக்கின்ற குற்றாலத்தலம் இதுவேயாகும். வெற்றிச் சிறப்பினைப் பொருந்திய தேவர்களுங்கூடக் குன்றுகளாகவும், மிருகங்களாகவும் உருமாறி வந்து தவஞ் செய்து கொண் டிருக்கும் பெருஞ் சிறப்பினையுடைய தலமும் இதுவேயாகும்.*

**மன்றுதனில் தெய்வமுர சென்றுமேல் முழங்கும்**
**வளமைபெறுஞ் சதுரயுகம் கிழமைபோல் வழங்கும்**
**நின்றுமத கரிபூசை அன்று செய்த தலமே**
**நிந்தனை செய் புட்பகந்தன் வந்தனைசெய் தலமே**
**பன்றியொடு வேடன் வலஞ் சென்றதிந்தத் தலமே**
**பற்றாகப் பரமர்உறை குற்றாலத் தலமே**
**வென்றிபெறுந் தேவர்களும் குன்றமாய் மரமாய்**
**மிருகமதாய்த் தவசிருக்கும் பெரியதலம் அம்மே!** 16

*(மன்று - சித்ரசபை. சதுரயுகம் - நான்கு யுகங்கள். புட்ப கந்தன் - குசலன் என்பவன்.)*

## 13. கிளை விசேடம் கேட்டல்

*'வார்த்தைகளை மிகவும் நயமுடனே பேசுவதற்குக் கற்றவளான, மலைநாட்டைச் சேர்ந்த குறவஞ்சியே! பூங்கொடி போன்றவளே! தீர்த்தங்களின் பெருமையையும் தலத் தினுடைய சிறந்த பெருமையையும் இதுவரை சொன்னாய். திருக்குற்றால மூர்த்தியின் சிறப்பும் நின் சொற்கள் தோறும் விளங்குவதை நீ உரைத்த முறைமையினாலேயே நானும் அறிந்தேன். இனிக் குறும்பலாவினடியிலே வீற்றிருப்ப வருடைய கீர்த்தி விசேடங்களையும் பெரிதான உறவினர் களின் விசேடங்களையும் எனக்குச் சொல்லுவாயாக!' இவ்வாறு வசந்தவல்லியானவள் குறவஞ்சியினிடம் கேட்கிறாள்.*

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

தீர்த்தவிசே டமுந்தலத்தின் சிறந்தவிசே
டமும் உரைத்தாய் திருக்குற்றால
மூர்த்திவிசேடந்தனையும் மொழிதோறும்
நீயுரைத்த முறையிற் கண்டேன்.
வார்தைவிசே டங்கள் கற்ற மலைக்குறவஞ்
சிக்கொடியே வருக்கை வாசர்
கீர்த்திவிசே டம்பெரிய கிளைவிசே
டத்தைஇனிக் கிளத்து வாயே.

## 14. கிளை விசேடம் கூறுதல்

*அடி அம்மையே! குற்றாலநாதரின் சுற்றத்துச் சிறப்புகளை எல்லாம் நீ கேட்டபடியே கூறுகின்றேன்; கேட்பாயாக: அவருடைய குலத்தினைப் பார்த்தோமானால் எல்லாத் தேவர்களையும் காட்டிலும் பெருமையுடைய குலமாகும். "அவரைப் பெற்ற தாய் எவரோ? தந்தை எவரோ?" என்றெல்லாம் உன்னிப்புடனே என்னை நீ கேட்பாயானால், அவற்றை யான் அறியேன். அவருக்குப் பெண் கொடுத்தானே மலையரசன், அவனைத்தான் கேட்டு நீ தெரிந்து கொள்ளல் வேண்டும். சிறப்புப் பொருந்திய ஒப்பற்ற பனிமலையினனாகிய வெற்றி வேந்தனுக்கும் உயர்வுடைய மதுரை நகருக் குரியவனாகிய பாண்டியனுக்கும் இவர் வெற்றிச் சிறப்புடைய மருமகனார் ஆவர். பாற்கடலிலே பாம்பணையிலே உறங்கிக் கொண்டிருக்கும் வெற்றி கொள்ளும் சிறப்புடையோனான திருமாலுக்குக் கண்ணுக்குக் கண்ணான மைத்துனரும் இவர், அம்மையே!*

இராகம் - முகாரி தாளம் - ஏக தாளம்

**கண்ணிகள்**

குற்றாலர் கிளைவளத்தைக் கூறக்கேள் அம்மே
குலம்பார்க்கில் தேவரினும் பெரியகுலம் கண்டாய்
பெற்றதாய் தந்தைதனை உற்று நீ கேட்கில்
பெண் கொடுத்த மலையரசன் தனைக் கேட்க வேணும்

உற்றதொரு பனிமலையின் கொற்றவேந் தனுக்கும்
உயர்மதுரை மாறனுக்கும் செயமருகர் கண்டாய்
வெற்றிபெறும் பாற்கடலிற் புற்றரவில் உறங்கும்
வித்தகர்க்குக் கண்ணான மைத்துனர்காண் அம்மே! 4

*(கிளைவளம் - குலப்பெருமை. பெரிய குலம் - பெருஞ் சிறப்பு உடைய சிவகுலம். உற்றுக் கேட்டல் - உன்னிப்பாகக் கேட்டல். மதுரை மாறன் - மதுரைப் பாண்டியன். புற்றரவு - புற்றிலே வாழும் இயல்பினையுடைய பாம்பு; இங்கே ஆதிசேடன்)*

*வெள்ளை யானையான அயிராவதத்தினைத் தனக்கு ஊர்தியாக உடைய தேவேந்திரனை வானுலகில் நிலையாகத் தன் பதவியிலேயே இருத்தியவர்; பெருச்சாளி வாகனத்த வரான மூத்த பிள்ளையார். அவருக்கும் மயில் வாகனராகிய குமரப் பெருமானுக்கும், தன் கைப்படையினால் தன்னைப் பெற்ற தந்தையின் காலினையே வெட்டி யெறிந்த சண்டேசுவர நாயனார்க்கு, சீர்காழி நகரிலே தோன்றிய திருஞான சம்பந்தருக்கும் இவர் தந்தையாவர் என்பதைக் காண்பாயாக. தேவசேனைகளையுடையவனும் வேள்விகட்குத் தலைவனு மான தேவேந்திரனின் அரண்மனையிலேயுள்ள ஐராவத யானையினால் வளர்க்கப் பெற்ற, பெண் யானை போன்ற தேவ யானைக்கும் தேனிறால் மிகுதியாகப் பெற்றுள்ள மலைச்சாரலிலே மான் பெற்றெடுத்த பூங்கொடியாகிய வள்ளியம்மைக்கும் மணம் பாருந்திய செந்தாமரை மலர் மேலிருக்கும் மௌன நிலையினையுடைய தேவருக்கும், மன்மதனுக்கும் இவர் மாமனார் ஆவார்.*

ஆனைவா கனத்தானை வானுலகில் இருத்தும்
ஆகுவா கனத்தார்க்கும் தோகைவா கனர்க்கும்
தானையால் தந்தைகா லெறிந்தமக னார்க்குந்
தருகாழி மகனார்க்கும் தகப்பனார் கண்டாய்
சேனைமக பதிவாசல் ஆனைபெறும் பிடிக்கும்
தேனீன்ற மலைச்சாரல் மானீன்ற கொடிக்கும்
கானமலர் மேலிருக்கும் மோனஅய னார்க்கும்
காமனார் தமக்குமிவர் மாமனார் அம்மே! 8

(ஆகு - பெருச்சாளி. மகபதி - வேள்விகட்குத் தலைவன்; இந்திரன். கானமலர் - மணமுள்ள செந்தாமரை மலர்.)

பொன்னுலகம் எனப்படும் தேவலோகத்திலே யுள்ளவரான வானவர்களுக்கும், மண்ணுலகத்தவரான உயிர் இனங்களுக்கும், இப் பூமியின் கண்ணேயுள்ள தவசிகளான முனிவர்களுக்கும் பாதலத்திலே இருப்பவரான நாகர் களுக்கும், அன்னத்தின் வடிவினை எடுத்தவராகிய அயனுக் கும் பன்றியின் உருவினை எடுத்நவராகிய திருமாலுக்கும் மற்றும் இவரல்லாத பிறர் அனைவருககும் முன்னரே தோன்றிய செல்வர் இவர் என்றறிவாயாக. இப்படி இவர் களுக்கெல்லாம் முற்படத் தோன்றி வந்தவரைத் தமையனார் என்றும் சொல்லுவார்கள். அப்படிச் சொன்னாலும் சொல்லலாம். அதனாலும் ஏதும் பழுது இல்லை. நன்மை பொருந்திய இத் திருக்குற்றால நகரிலே கோவில் கொண்டிருக்கிற பெருமானின் கிளைவளத்தினை நான் எடுத்துச் சொல்வது என்பது அரிதாகும். உலகமெல்லாம் அதனை உரைத்துக் கொண்டிருக்கும். அதனைக் காண்பாயாக அம்மையே!

**பொன்னுலகத் தேவருக்கும் மண்ணுலகத் தவர்க்கும்**
**பூதலத்தின் முனிவருக்கும் பாதலத்து ளார்க்கும்**
**அன்னவடிவு எடுத்தவர்க்கும் ஏனஉரு வார்க்கும்**
**அல்லார்க்கும் முன்னுதித்த செல்வர்காண் அம்மே!**
**முன்னுதித்து வந்தவரைத் தமையனென உரைப்பார்**
**மொழிந்தாலும் மொழியலாம் பழுதிலைகாண் அம்மே!**
**நன்னகரிற் குற்றால நாதர்கிளை வளத்தை**
**நானுரைப்ப தரிதுலகந் தானுரைக்கும் அம்மே!** 12

(அல்லார் - பிற தேவர்களும் கடவுளர்களும். செல்வர் - பெருமானார். பூதலம் - பூஉலகம். பாதலம் - பாதாள உலகம்)

## 15. குறியின் தன்மையாது?

'நீரிலே வளர்கின்ற செம்பவளத்தைப் போன்ற திருமேனி வண்ணத்தையுடையவர்; இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கியவரான நின்மலர்; குற்றால நாதர். அவருடைய

*மிகுதியான பெருமைகளையெல்லாம் பாடி ஆடிவருகின்ற குறவஞ்சிப் பெண்ணே! கேட்பாயாக: கார்மேகத்தைப் போன்ற கூந்தலையுடைய நங்கைமார்களுக்கெல்லாம் விருந்து போல இனிக்கும்படியாக நீ ஆராய்ந்து சொல்லுகின்ற சிறப்புமிகுந்த குறியின் தன்மைகளை எல்லாம், நானும் தெரிந்து கொள்ளுமாறு சொல்லுவாயாக' (என்று வசந்தவல்லி குறவஞ்சியிடம் கேட்டாள்.)*

### விருத்தம்

**நீர்வளர் பவள மேனி**
**நிமலர்குற் றால நாதர்**
**கூர்வளம் பாடி யாடும்**
**குறவஞ்சிக் கொடியே கேளாய்**
**கார்வளர் குழலார்க் கெல்லாம்**
**கருதிநீ விருந்தாச் சொல்லும்**
**சீர்வளர் குறியின் மார்க்கம்**
**தெரியவே செப்பு வாயே.**

*(விருந்தாகச் சொல்லும் - புதுமையாகச் சொல்லும். சீர்வளர் குறி - சிறப்பு மிகுந்த குறி.)*

## 16. குறியின் சிறப்புகள்!

*மிகவும் வித்தாரமானது எனது குறி அம்மையே! மணியாரத்தினையும் முத்தாரத்தினையும் பூணுகின்ற, மேலெழுந்து முகிழ்த்திருக்கும் கொங்கைகளையுடைய பெண்ணே! என் குறியானது மிகவும் வித்தாரமானது அம்மையே!*

*வஞ்சி நாடு, மலையாள நாடு, கொச்சி நாடு, கொங்கு நாடு, மக்கம், மராடம், துலுக்காணம் ஆகிய நாடுகளில் எல்லாம் என் குறியினைப் பலரும் பாராட்டியுள்ளனர். செஞ்சி, வடகாசி, பரந்த, சீனநாடு, சிங்களம், ஈழம், கொழும்பு, வங்காளம், தஞ்சை, திருச்சிராப்பள்ளிக் கோட்டை, தமிழ்ச் சங்கம் வீற்றிருந்த மதுரை, தென்மங்கலப் பேட்டை ஆகிய பலவிடங்களிலும் மிகுதியாகக் குறிசொல்லிப் பேரும்*

*பெற்றேன். பல திசைகளையும் வென்று நான் பெற்றிருக்கின்ற விருதுகளையும் நீ இதோ காண்பாயாக.*

**இராகம் - தோடி** **தாளம் - ஆதி**

**பல்லவி**

**வித்தாரம் என்குறி அம்மே! - மணி**
**முத்தாரம் பூணும் முகிழ்முலைப் பெண்ணே**
**வித்தாரம் என்குறி அம்மே!**

**சரணங்கள்**

**வஞ்சி மலைநாடு கொச்சி கொங்கு**
**மக்கம் மராடந் துலுக்காணம் மெச்சி**
**செஞ்சி வடகாசி நீளம் சீனம்**
**சிங்களம் ஈழம் கொழும்புவங் காளம்**
**தஞ்சை சிராப்பள்ளிக் கோட்டை தமிழ்ச்**
**சங்க மதுரைதென் மங்கலப் பேட்டை**
**மிஞ்சு குறிசொல்லிப் பேராய்த் திசை**
**வென்றுநான் பெற்ற விருதுகள் பாராய். (வித்தாரம்)**

*(வித்தாரம் - பெருமையுடையது. மணி - நவமணிகள். மக்கம் - மெக்கா, அராபிய நாடு. மிஞ்சு குறி - மேலான குறி.)*

*(2) நன்னகராகிய இத் திருக்குற்றால நகரிலே, எங்கும் தன் பெரும்புகழை நிலை நாட்டிய கொல்லம் எண்ணூற்று எண்பத்தேழாம் ஆண்டிலேயே, பதஞ்சலி மாமுனிவர் போற்றும் வண்ணம் தமிழ் வளர்த்த பாண்டியனார், முதன் முதல் சிறிய கூரை ஓடுகள் வேய்ந்த அழகு பொருந்திய சித்திரசபையை எங்கள் சின்னணஞ்சாத்தேவன் செப்போடு வேய்ந்தனன். அதற்கு முன்பாக, அவனுக்குக் குறி சொல்லி நான் பரிசாகப் பெற்ற இந்த மோகனமாலையினை, மோகவல்லியே நீ பார்ப்பாயாக. அதனால், மிகவும் வித்தாரம் பொருந்தியது என் குறி அம்மையே!*

**நன்னகர்க் குற்றாலத் தன்னில் எங்கும்**
**நாட்டும் எண்ணூற்றெண்பத் தேழாண்டு தன்னில்**
**பன்னக மாமுனி போற்றத் தமிழ்ப்**
**பாண்டிய னார்முதற் சிற்றோடு மேய்ந்த**

**தென்னாரும் சித்ரசபையை எங்கள்**
**சின்னணஞ் சாத்தேவன் செப்போடு வேய்ந்த**
**முன்னாளி லேகுறி சொல்லிப் பெற்ற**
**மோகன மாலைபார் மோகன வல்லி (வித்தாரம்)**

*(3) அதற்கு வடகீழ்த் திசையிலே, கொல்லத்து ஆண்டு நானூற்று நாற்பத்து நாலிலே, அன்பாகத் தென்காசி ஆலயமானது சிறந்து ஓங்கும்படியாகச், செண்பகமாற பாண்டியனுக்குக் குறி சொன்ன பேர்களும் நாங்களே யாவோம். நல்ல பாண்டிய நாடானது உய்யும்படியாகச் சொக்க நாயகர் வந்து மணக்கோலம் செய்வதற்கு முன், மதுரை மீனாட்சியம்மை யானவள் இன்பமுடன் எங்களைக் குறி கேட்டதற்கு, மதுரைச் சங்கத்தார்களே சாட்சியுரைப்பார்கள். அதனால், மிகவும் வித்தாரமுடையது என் குறி அம்மையே!*

**அன்பாய் வடகுண பாலிற் கொல்லத்து**
**ஆண்டொரு நானூற்று நாற்பத்து நாலில்**
**தென்காசி ஆலயம் ஓங்கக் குறி**
**செண்பக மாறற்குச் சொன்னபேர் நாங்கள்**
**நன்பாண்டி ராச்சியம் உய்யச் சொக்க**
**நாயகர் வந்து மணக்கோலஞ் செய்ய**
**இன்பா மதுரை மீனாட்சி குறி**
**எங்களைக் கேட்டதும் சங்கத்தார் சாட்சி. (வித்தாரம்)**

### 17. எனக்கு ஒரு குறி!

*நின்னுடன் கலந்து மகிழ்வதற்குக் காமதேவனே வரவேண்டுமென நீ விரும்பினாலும், விழிப்பார்வையாகிய வாளினைக் கொண்டு அக் காமனையும் நின் வசமாக்கிக் கொள்ளக் கூடியவளே! நின்னுடைய குலவித்தை குறி சொல்லுதலே யாகுமானால், குறவஞ்சி! எனக்கும் ஒரு குறைவைத்தோ சொல்லப் போகின்றாய? பலாமரத் தினுள்ளே விளங்கும் கனியினைப் போல, என்னுள்ளே நிலை பெற்றிருக்கும் குற்றாலநாதருடைய நாட்டினிலே, இலவம் பூவினும் சிவந்த நின் வாயினால், எனக்கும் ஒரு குறியினைச் சொல்லுவாயாக.*

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

கலவிக்கு விழிவாள் கொண்டு
காமனைச் சிங்கி கொள்வாய்
குலவித்தை குறியே ஆனால்
குறவஞ்சி குறைவைப் பாயோ
பலவுக்குள் கனியாய் நின்ற
பரமர்குற் றாலர்நாட்டில்
இலவுக்கும் சிவந்த வாயால்
எனக்கொரு குறிசொல் வாயே.

## 18. குறி ஏற்பாடுகள்

*அம்மே! என்ன குறியானாலும் நான் சொல்லுவேன் அம்மே! இதற்காகச் சபை ஏறவும் செய்வேன். என்னை எதிர்த்த பேர்களை வெல்லவும் செய்வேன். மன்னவர்கள் கூட மெச்சுகின்ற குறவஞ்சி நான். என் வயிற்றுக்கு இத்தனை கஞ்சிபோதும். அதனை நீ வார்ப்பாயாக, அம்மையே! எந்த வேறுபாடும் இல்லாமல் கூழானாலும் அதனைக் கொண்டு வந்தால் என் பெரிய குடுக்கை நிறையக் குடித்து விடுவேன் அம்மே! அதன்பின் தின்பதற்கு வெற்றிலையும் வெட்டுப் பாக்கும் அள்ளித் தருவாயாக. கப்பலிலே வந்திறங்கும் சீனத்துச் சரக்கான புகையிலையிலும் கொஞ்சம் கிள்ளித் தருவாயாக, அம்மையே!*

இராகம் - அடாணா தாளம் - ஆதி

### கண்ணிகள்

என்னகுறி யாகிலும்நான் சொல்லுவேன் அம்மே-சதுர்
ஏறுவேன் எதிர்தத பேரை வெல்லுவேன் அம்மே!
மன்னவர்கள் மெச்சுமொரு வஞ்சிநான் அம்மே! - என்றன்
வயிற்றுக்கித் தனைபோதும் கஞ்சிவார் அம்மே!-
பின்னமின்றிக் கூழெனினும் கொண்டுவா அம்மே!-
பெரிய குடுக்கை முட்ட மண்டுவேன் அம்மே. வந்தால்
தின்ன இலை யும்பிளவும் அள்ளித்தா அம்மே - கப்பற்
சீனச்சரக் குத்துக்கிணி கிள்ளித்தா அம்மே. 4

*(பெரிய குடுக்கை - பெரிய வயிறும் ஆம். புகையிலை அந்நாளிலே சீனத்திலிருந்து கப்பலிலே வந்திறங்கியதால் போலும் சீனச் சரக்கு என்கிறார்.)*

*அம்மே! அம்மே! நான் குறிசொல்வதைக் கேட்பதற்கு வருவாயாக. உனக்கு ஆக்கம் வருகுது பார். வெள்ளச்சி அம்மையே! விம்முகின்ற கொங்கைகளையுடைய கன்னி ஒருத்தி அதோ பேசுகின்ற பேச்சு நல்ல சகுனமாயிருக்கிறது. நேரே மேற்குப் புறத்திலே ஆந்தை வீறிட்ட குரலும் மிகவும் நல்லது. அம்மையே! தும்மலும் காகமும் இடப்புறமாகச் சொல்லுதே! சரம் மிகவும் நுட்பமாகப் பூரணத்தை வெற்றி கொள்ளுதே! இவை எல்லாம் மிகவும் செம்மையான நல்ல நிமித்தங்கள் பாராய். திரிகூட மலைத் தெய்வத்தின் அருள் உறுதியாக உனக்கு உண்டாகும் அம்மே!*

**அம்மேயம்மே சொல்லவாராய் வெள்ளச்சி அம்மே - உனக்கு**
**ஆக்கம் வருகுதுபார் வெள்ளச்சி அம்மே**
**விம்முமுலைக் கன்னிசொன்ன பேச்சு நன்றம்மே - நேரே**
**மேற்புறத்தில் ஆந்தையிட்ட வீச்சுநன்றம்மே**
**தும்மலுங்கா கமுமிடம் சொல்லுதே அம்மே சரம்**
**சூட்சமாகப் பூரணத்தை வெல்லுதே அம்மே**
**செம்மை இது நல்நிமித்தம் கண்டுபார் அம்மே - திரி**
**கூடமலைத் தெய்வமுனக் குண்டுகாண அம்மே! 8**

*(சரம்-மூச்சுகள் இடது நாசித்துவாரத்தினும், வலது நாசித் துவாரத்தினும் ஏறுவதை ஒட்டி ஞானசரநூல் என்றவொரு குறி நூல் உள்ளது. அப்படிச் சரம் பார்த்து அதுவும் நல்ல நிமித்தம் என்கிறாள்.)*

## 19. மாப்பிள்ளை வருவான்!

*பூங்கொடியே! பல்லியும் பலபலவென்று நல்ல நிமித்தம் சொல்லுகிறது. திரிகூட நாட்டிலேயே கல்விமானாகவும் மிகுந்த சிவப்பு நிறமுடையவனாகவும், கழுத்தின்மேல் கறுப்பு மச்சம் ஒன்று உள்ளவனாகவும், நல்ல மேற்குலத்தினனாகவும் இந்த நன்மை பொருந்திய ஊரினனேயாகவும், உனக்கு*

*நல்லவனான மாப்பிள்ளை ஒருவன் வந்து விரைவிலே வாய்ப்பான்.*

**விருத்தம்**

**பல்லியும் பலபலென்னப் பகருது திரிகூடத்தில்**
**கல்விமான் சிவப்பின் மிக்கான் கழுத்தின்மேல் கறுப்பும் உள்ளான்**
**நல்லமேற் குலத்தான் இந்த நன்னகர்த் தலத்தானாக**
**வல்லியே உனக்கு நல்ல மாப்பிள்ளை வருவான் அம்மே!**

## 20. குறி சொல்லவா?

*தரையினை மெழுகிக் கோலம் இடுவாயாக. முறையாகப் பிள்ளையார் உருவைப் பிடித்து வைப்பாயாக. நிறைகுடம் எடுத்து வைப்பாயாக. வாழை, மா, பலா ஆகிய முப்பழங்களும் படைப்பாயாக. தேங்காயையும் உடைத்து வைப்பாயாக.*

*அருகம்புல்லும், தண்ணீரும், விளக்கும் கொண்டு வைப்பாயாக. பாக்கும் வெற்றிலையும் கொண்டு வருவாயாக. வடை, அப்பம், அவல் ஆகியவற்றுடன் சர்க்கரையும் எள்ளுருண்டையும் பொரியும் கொணர்ந்து வைப்பாயாக.*

*நிறை நாழியிலே நெல்லினை அளந்து வைப்பாயாக. இறையவனைக் கரங்குவித்து வணங்குவாயாக. குறியின் நிலவரத்தை உன் உள்ளத்திலே தெளிந்து கொள்வாயாக.*

*பிறைபோன்ற நெற்றியினை உடையவளே! இவ்வளவும் செய்தாயிற்றா? இப்போது நான் சொல்லட்டுமோ? நம் தலைவர்; குறும்பலாவிலே கோவில் கொண்டிருப்பவர்; அவருடைய திருவுளத்தால் உனக்குப் பெரும்பலனாக விளங்கும் குறியினைச் சொல்லட்டுமோ!*

**இராகம்-ஸ்ரீராகம்** **தாளம்-அடதாளம், சாப்பு**

**கண்ணிகள்**

**தரைமெழுகு கோலமிடு**
**முறைபெறவே கணபதிவை அம்மே குடம்**
**தாங்காய்முப் பழம்படைப்பாய்**
**தேங்காயும் உடைத்து வைப்பாய் அம்மே! 1**

அருகுபுனல் விளக்கிடுவாய்
அடைக்காய்வெள் ளிலைகொடுவா அம்மே!வடை
அப்பம் அவல் வர்க்கவகை
சர்க்கரையோ டெட்பொரிவை அம்மே! 2

நிறைநாழி அளந்துவைப்பாய்
இறையோனைக் கரங்குவிப்பாய் அம்மே!குறி
நிலவரத்தைத் தேர்ந்துகொள்வாய் குல
தெய்வத்தை நேர்ந்துகொள்வாய் அம்மே! 3

குறிசொல்லவா! குறிசொல்லவா?
பிறைநுதலே குறிசொல்லவா அம்மே! ஐயர்
குறும்பலவர் திருவுளத்தாற்
பெரும்பலனாம் குறிசொல்லவா அம்மே! 4

*(குறி சொல்லத் தொடங்குவதற்கு முன்னர் இப்படி முறையாக முதலில் விநாயகரை வழிபட்டுப் பின்னரே தொடங்குவது மரபு. அப்படியே குறவஞ்சியும் வசந்த வல்லிக்குக் குறி சொல்லத் தொடங்குகின்றாள்.)*

## 21. கைம் மலர் காட்டாய்

*ஆன் ஏற்றிலே ஊர்ந்து வருகின்ற செல்வர் திரிகூட நாதர். அவருடைய அழகிய திரிகூட நகரத்திலே வாழுகின்ற மானே! வசந்தப் பசுங்கொடியே! நான் வந்தவேளை மிகவும் நன்றாகவே இருக்கின்றது. நீ இருந்த இடமும் மிகவும் நல்ல இடமேயாகும். செழுமையான தாமரைமலர் போல மணமிகுந்த நின் கைம்மலரை, நின் மனத்திலுள்ளவை பற்றி நான் குறிசொல்லுவதற்காக இப்படி என்னிடம் காட்டு வாயாக.*

### கட்டளைக் கலித்துறை

ஆனேறுஞ் செல்வர்திரிகூட நாதர் அணிநகர்வாழ்
மானே வசந்தப் பசுங்கொடி யேவந்த வேளைநன்றே
தானே இருந்த தலமும்நன் றேசெழுந் தாமரைபோல்
கானேறும் கைம்மலர் காட்டாய் மனக்குறி காட்டுதற்கே.

*முத்திரை மோதிரம் இட்டிருக்கின்ற நின் கையைக் காட்டுவாயாக. பெரிய வளையல்களணிந்த நின்னுடைய முன் கையினைக் காட்டுவாயாக. அழகிய கடகம் புனைந்த நின் கையைக் காட்டுவாயாக. பொன்னாலான அழகிய நெளி இட்டிருக்கும் நின் கையைக் காட்டுவாயாக. வேலைப்பாட மைந்த சூடகம் இட்ட நின் கையினைக் காட்டுவாயாக. சக்தி பீடமாகிய இக்குற்றாலத்துக்கு இறையவரான குற்றால நாதரின் நல்ல நகருக்குள்ளே வந்து பிறந்துள்ள சஞ்சீவி போன்றவளே! நின் கையை என்னிடம் காட்டுவாயாக.*

**இராகம் - கல்யாணி** **தாளம் - சாப்பு**

**கண்ணிகள்**

**முத்திரைமோ திரம்இட்ட கையைக்**
**காட்டாய் அம்மே - முன்கை**
**மூதாரி இட்ட கையைக்காட்டாய் 1**
**அத்தகட கம்புனைந்த கையைக்**
**காட்டாய் பொன்னின்**
**அலங்கார நெளியிட்ட கையைக் காட்டாய் 2**
**சித்திரச்சூ டகம்இட்ட கையைக் காட்டாய் பசும்**
**செங்கமலச் சங்கரேகக் கையைக் காட்டாய் 3**
**சத்திபீ டத்திறைவர் நன்னகர்க்குள்ளே வந்த**
**சஞ்சீவி யேஉனது கையைக் காட்டாய். 4**

*(மூதாரி - பெரிய வளையல். முத்திரை மோதிரம் அடையாள மோதிரம். அத்த கடகம் - பொற்கடகம். நெளி - விரலணிகளுள் ஒன்று; தற்காலத்தே நெளிவு என்பார்கள். சிவந்த உள்ளங் கையிலே விளங்கும் வெண்மையான கை ரேகைகளைக் குறிக்கச் 'செங்கமலச் சங்கரேகை' என்றனர். சஞ்சீவி - உயிர் பிழைக்கச் செய்யும் மூலிகை.)*

## 22. கவிஞர் பேசுகிறார்

*உமையம்மையைத் தன் ஒரு பாகத்திலே கொண் டிருப்பவர்; தம் சிவந்த கையிலே மழுவாயுதத்தைத் தரித் திருப்பவர் குற்றாலநாதர். அவருடைய மலைச்சாரலினைத் தன்*

*வாழிடமாகக் கொண்ட, அவர் பேரிலே ஆசை கொண்டவள் வசந்தவல்லி. அவளுடைய கைரேகைகளைப் பார்த்து வீழிக் கனியைப் போன்று செம்மை கனிந்த வாயினளான அழகிற் சிறந்த குறவஞ்சியானவள், வசந்தவல்லி அன்போடு அளித்த பழைய கூழினை உண்ட தன் வாயினால் குறியினை விரிவாகச் சொல்வாளாயினாள்.*

**கொச்சகக் கலிப்பா**

**ஏழைபங்கர் செங்கைமழு**
**வேற்றவர்குற் றாலர்வெற்பில்**
**வாழிகொண்ட மோக**
**வசந்தவல்லி கைபார்த்து**
**வீழிகொண்ட செங்கனிவாய்**
**மிக்ககுற வஞ்சிபழம்**
**கூழையுண்ட வாயாற்**
**குறியைவிண்டு சொல்வாளே.**

*(வாழிகொண்ட - வாழிடமாகக் கொண்ட. வீழி - கொவ்வைக்கனி', மிக்க குறவஞ்சி - அழகுமிக்க குறப்பெண். விண்டு - விரிவுபடுத்தி.)*

## 23. கைகளின் சிறப்பு

*பெரிய இந் நிலவுலகத்திலே சற்றும் மாறுபடாமல் அறம் வளர்க்கும் கை இந்தக் கையே. மனையறத்தின் மூலம் தர்மங்களை மிகுதியாகச் செய்து உறுதிப் பொருளாகிய புகழினை வளர்ப்பதும் இந்தக் கையே. மேம்பாட்டுடன் நவ நிதிகளையும் பெருக்குவதும் இந்தக் கையே! மென்மேலும் பாலமுதம் அளைவதும் இந்தக் கையே! பசியாறாத சனங்களின் பசியாற்றுவதும் இந்தக் கையே! தேவ மாதர்களை யொத்த பெண்கள் தினமும் வணங்கிப் போற்றுவதும் இந்தக் கையின் வளமே! பெறுதற்குரிய பெரும் பேறாக விளங்கி இந்த நல்ல நகரத்தைக் காத்து உதவுவதும் இந்தக் கையே! பிறவாத தன்மையினையுடைய குற்றாலநாதர் ஒருவருக்கே பொருத்த மானதும் இந்தக் கையே!*

இராகம் - பைரவி தாளம் - ரூபகம்

**கண்ணிகள்**

மாறாமல் இருநிலத்தில் அறம் வளர்க்கும் கையே!
மனையறத்தால் அறம்பெருக்கித் திறம் வளர்க்கும் கையே! 1

வீறாக நவநிதியும் விளையும் இந்தக் கையே
மேன்மேலும் பாலமுதம் அளையும் இந்தக் கையே 2

ஆறாத சனங்கள்பசி ஆற்றுமிந்தக் கையே
அணங்கனையார் வணங்கிநித்தம் போற்றும் இந்தக் கையே 3

பேறாக நன்னகரங் காக்கும் இந்தக் கையே
பிறவாத நெறியார்க்கே ஏற்கும் இந்தக் கையே. 4

*(மாறாமல் - எக்காலத்தும் தர்மம் சிதையாமல். திறம் - வளமைச்சிறப்பு. பாலமுதம் - பாற்சோறு. வீறு - மேன்மை.)*

## 24. மகராசி நீயே!

*அம்மையே! நின்னுடைய கையிலே தோன்றுகின்ற குறியினைப் பார்த்தால் இந்தக் கையைப் பிடித்து மண வாளராக வருபவர், தாம் எட்டுத் திசைகளையுமே தமக்குச் சொந்தமாக உடையவராவர் என்றே சொல்லலாம். நீயோ இந்த உலகம் முழுமைக்குமே பேரரசியாகத் திகழ்பவளாவாய். இந்தக் குறி ஒருபோதும் பொய்யாகவே போகாது என்று சொல்லினாள் குறவஞ்சி. அதனையடுத்து அவள் இறைவரின் திரிகூடத்திலே வாழும் உண்மையான குறப்பெண் தெய்வங் களையெல்லாம் காண்பவர் வியப்புற்று நிற்க வணங்கு வாளாயினாள்.*

**விருத்தம்**

கைக்குறி பார்க்கில் இந்தக் கைப்பிடிப்ப பவர்தாம் எட்டுத்
திக்குமே உடையார் ஆவர் செகமக ராசி நீயே
இக்குறி பொய்யாதென்றே இறையவர் திரிகூடத்தில்
மெய்க்குற வஞ்சி தெய்வம் வியப்புற வணங்குவாளே.

## 25. தெய்வ வணக்கங்கள்

*குழல்வாய் மொழி அம்மையினைத் தம்முடைய இடது பாகத்திலே கொண்டவரான குறும்பலா நாதருடைய அழகிய*

சந்நிதியிலே வீற்றிருக்கின்ற அம்பல விநாயகனே! திருச்செந்திலிலே வாழ்கின்ற முருகனே! சிவந்த கண்களுடையவனான திருமாலின் மருமகனே! கந்தனே! திரு இலஞ்சியிலே கோவில் கொண்டிருக்கின்ற கடவுளே! உனக்கு என் வணக்கங்கள். புள்ளிமான் ஈன்றெடுத்த பூவையே! எம் குறக்குலத்திலே வந்து வளர்ந்த வள்ளி நாயகியே! எழுந்தருளி வந்து எனக்கு நீ உதவாயோ! அப்பனே! மேலவாயிலின் தலைவனாகிய ஐயனாரப்பனே! சொல்லுதற்கும் அருமையுடைய மலையின்மேல் எழுந்தருளி இருக்கின்ற தேவ கன்னியர்களே! ஆரியங்காவு என்னுமிடத்திலே கோவில் கொண்டிருப்பவனே! அருள் செய்யும் சொரிமுத்தய்யனே! சிறப்புடைய குளத்தூரிலே நிலைபெற்றிருக்கும் சேவகனே! அழகிய மாகாளி அம்மையே! குற்றால நகரின் காவல் தெய்வமே! கால பைரவனே! மிக்க துடிப்பினையுடைய திருமலைக் கறுப்பனே! முன்னோடியாக விளங்கும் முருகப் பெருமானே! வன்னியராயனே! வீரம் பொருந்திய புலியைப் போலப் பாய்ந்து வருகின்ற பன்றிமாடனே! எக்கலா தேவியே! துர்க்கையம்மனே! பிடாரியே! சிறப்புமிக்கதொரு குறியினைத் தந்தருளும் பொருட்டாக உங்களையெல்லாம் வேண்டுகின்றேன். நீங்களும் அனைவரும் வந்து என் முன்னே இருந்து உதவுவீர்களாக!

இந்த வசந்தமோகினிப் பெண் தன் சிந்தையிலே நினைந்தது சீவனையோ! தாதுவையோ? வெண்மையான ஆடைகளையோ? பட்டுப் பீதாம்பரங்களையோ? தவச தானிய வகைகளையோ? கலவைச் சாந்தினையோ? புழுகினையோ? களப கத்தூரிகளையோ? வட்டிலோ? செம்போ? வயிரமோ? முத்தோ? கட்டிலோ? மெத்தையோ? கட்டி வராகனோ? புதையலோ? சிமிழில் சேர்த்து வைத்த பொருளோ? வரவோ? செலவோ? இவள் கையிலிருந்த செல்வங்கள் களவு போனதுவோ? குற்றமில்லாத பெண்மையின் பருவத்தினாலே வருகின்ற சிருஷ்டிதோஷமோ? முக்கண்ணனானவர் செய்த சிறிய மயக்கமோ? பிற அரசர்கள்

*இவள் மீதுள்ள தம் ஆசையைச் சொல்லிவிட்டதன் காரணமோ? இக் கன்னியானவள் மற்றொருவர் மீது மோகங் கொண்டு விட்டதன் அடையாளமோ? சேலை நெகிழவும் வளையல்கள் கழலவும் அதனால் ஏற்பட்ட திகைப்போ? மாலையும் திருமணமும் விரைவிலே வந்து வாய்ப்பதற்குரிய அடையாளமோ? இத்தனை குறிகளிலே இவளுடைய குறி இதுவே என்று அவள் மனத்திலே வைத்துள்ள குறியினை எனக்குக் காட்டி அருள்வீர்களாக!*

**நிலைமண்டில ஆசிரியப்பா**

குழல்மொழி இடத்தார் குறும்பலா உடையார்
அழகுசந் நிதிவாழ் அம்பல விநாயகா
செந்தில்வாழ் முருகா! செங்கண்மால் மருகா
கந்தனே இலஞ்சிக் கடவுளே சரணம்
புள்ளிமான் ஈன்ற பூவையே குறக்குல
வள்ளிநாயகியே வந்தெனக் குதவாய்
அப்பனே மேலை வாசலின் அரசே
செப்பரு மலைமேல் தெய்வகன் னியர்காள்
ஆரியங் காவா அருட்சொரி முத்தே
நேரிய குளத்தூர் நின்ற சேவகனே
கோலமா காளி குற்றால நங்காய்
கால வைரவா கனதுடிக் கறுப்பா
முன்னோடி முருகாவன்னிய ராயா
மன்னிய புலிபோல் வரும்பன்றி மாடா
எக்கலா தேவி துர்க்கை பிடாரி
மிக்கதோர் குறிக்காய் வேண்டினேன் உங்களை
வந்துமுன் னிருந்து வசந்தமோ கினிப்பெண்
சிந்தையில் நினைந்தது சீவனோ தாதுவோ
சலவையோ பட்டோ தவச தானியமோ
கவலையோ புழுகோ களபகத் தூரியோ
வட்டிலோ செம்போ வயிரமோ முத்தோ
கட்டிலோ மெத்தையோ கட்டி வராகனோ

வைப்பொடு செப்போ வரத்தொடு செலவோ
கைப்படு திரவியம் களவுபோனதுவோ
மறுவிலாப் பெண்மையின் வருந்திட்டி தோசமோ

திரிகண்ணர் ஆனவர்செய்தகைம் மயக்கமோ
மன்னர்தாம் இவள்மேல் மயல்சொல்லி விட்டதோ
கன்னிதான் ஒருவர்மேற் காமித்த குறியோ
சேலையும் வளையும் சிந்தின தியக்கமோ
மாலையும் மணமும் வரப்பெறுங் குறியோ

இத்தனை குறிகளில் இவள்குறி இதுவென
வைத்ததோர் குறியை வகுத்தருள் வீரே.

*(இடத்தார் - இடப்பாகமாக உடையவர். இலஞ்சிக் கடவுள் - திரு இலஞ்சி முருகன். பூவை - நாகணவாய்; இங்கே பெண். சொரி முத்து - சொரிமுத்தய்யன், ஐயனார். சேவகன் - வீரம் உடையவன். கனதுடி - பெருந்துடிப்பு. சீவனோ - உயிருள்ளவையோ. தாதுவோ - உயிரில் பொருளோ. தவச தானியம் - தானியங்களும் தவசங்களும்; தவசங்கள் - புன்செய்ப் பொருள்கள். கட்டி வராகன் - கட்டித் தங்கமான பவுன். வைப்பு - புதையல். திட்டி - கண் திருஷ்டி. கைம் மயக்கம் - சிறு மயக்கம்.)*

## 26. சொல்லப் போகிறேன்!

*அம்மையே! கடித்திடும் பாம்பினை அணியாகப் பூண்டிருக்கும் கர்த்தர்; குற்றாலநாதர். அவருடைய நேசம் வந்து பிடிக்கிறது. இந்தக் கருத்து மிகவும் நன்றாக வந்து பேசுகிறது. 'சொல்லு சொல்லு' என்று என் உதடுகளிலும் நாவிலும் சக்கதேவ வந்துநின்று துடிக்கின்றது. குறளிப் பேய் வந்து என் வாயிலே சொல்லச் சொல்லி இடிக்கிறது. இனிக்குறி சொல்லுகிறேன், கேட்பாயாக;*

### விருத்தம்

கடித்திடும் அரவம் பூண்ட
    கர்த்தர்குற் றாலர் நேசம்
பிடிக்குது கருத்து நன்றாய்ப்
    பேசுது சக்க தேவி

துடிக்குதென் உதடும் நாவும்
சொல்லுசொல் லெனவே வாயில்
இடிக்குது குறளி அம்மே!
இனிக்குறி சொல்லக் கேளே!

*(இது அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம். சக்கதேவி - சக்கம்மா தேவி. குறளி - குட்டைப்பேய்.)*

## 27. சொல்லக் கேளாய்!

*அம்மையே! பெண்கள் நாயகமே! நான் குறிசொல்வதைக் கேட்பாயாக. முல்லைப் பூக்களைச் சூடிய கூந்தலையுடையவளே! இந்த நல்ல நகரிலே வாழ்கின்ற முத்துமாலையணிந்த யாவரையும் கவர்ச்சிக்கும் அழகினையுடைய பசுங் கிளியே! நான் சொல்வதைக் கேட்பாயாக, பல்லக்கிலேறி மக்கள் செல்லுகின்ற தெருவினிடத்தே எருதூர்தியில் அமர்ந்து, அதனைச் செலுத்திக் கொண்டே, மணிகளையுடைய பாம்பணிகளைப் பூண்டிருக்கும் குற்றாலத்தரசன் பவனி வந்தான். செல்வமாக வளர்ந்த பூங்கோதையே! நீ பந்தடித்துக் கொண்டிருக்கையிலே அவனுடைய படைகளைப் பார்த்ததனால் நின் பால் தோன்றிய அச்சத்தால் ஏற்பட்ட மயக்கம் போலக் குறி தோன்றுகிறது அம்மையே!*

இராகம் - பிலஹரி தாளம் - சாப்பு

**கண்ணிகள்**

சொல்லக்கே ளாய்குறி சொல்லக்கேளாய் - அம்மே
தோகையர்க் கரசேகுறி சொல்லக் கேளாய்
முல்லைப்பூங் குழலாளே நன்னகரில்வாழ் - முத்து
மோகனப் பசுங்கிளியே சொல்லக் கேளாய்
பல்லக்கே றுந்தெருவில் ஆனை நடத்தி - மணிப்
பணியா பரணம்பூண்ட பார்த்திபன் வந்தான்
செல்லப்பூங் கோதையேநீ பந்தடிக்கையில் - அவன்
சேனைகண்ட வெருட்சிபோற் காணுதே அம்மே. 4

*(மோகனம் - எழிலால் பிறரை வசமாக்குகின்ற கவர்ச்சித் தன்மை. ஆனை - ஆன் + ஐ; ஆனேற்றை. பணி - பாம்பு. சேனை - சேனா முகமும் ஆம்.)*

## 28. மீண்டும் வினவுதல்

*நன்றாயிருக்கிறது குறவஞ்சியே! நீ ஒரு பெரிய நாடகக் காரி. இந்த நாட்டிலேயுள்ளவர்க்குத் தக்கவாறு நீ பேசும் வார்த்தைகளை நான் அறியேன் என்று நினைத்தாயோ? முதலிலே ஒன்றும் விடாமல் குறி சொல்லி வந்தாய். பின்னர் குறியை உழப்பிப் போட்டாய்; குழப்பிப் போட்டாய். திருவிழாவிலே வரும் சேனையைக் கண்ட பயத்தால் இந்த மயக்கமும் கிறுகிறுப்பும் பெண்களுக்கு வருவதுண்டோ? இன்று வரைக்கும் உடலிலே குளிரும் காய்ச்சலும் இருப்பது முண்டோ? பின்னே, அவை ஏற்பட்டது எந்த வகை? அதனை ஆராய்ந்து பார்த்துக் குறி சொல்லடி!*

**கண்ணிகள்**

**நன்றுநன்று குறவஞ்சி நாடக்காரி - இந்த**
**நாட்டானபேர்க் கானவார்த்தை நானறியேனோ**
**ஒன்றுபோ டாமற்குறி சொல்லியேவந்தாய் - பின்னை**
**உழப்பிப்போட் டாய்குறியைக் குழப்பிப் போட்டாய்**
**மன்றல்வருஞ் சேனைதனைக் கண்டுபயந்தால் - இந்த**
**மையலுங் கிறுகிறுப்பும் தையலர்க் குண்டோ**
**இன்றுவரை மேற்குளிரும் காய்ச்சலும் உண்டோ - பின்னை**
**எந்தவகை என்றுகுறி கண்டு சொல்லடி!**

## 29. காமக் காய்ச்சலடி!

*ஆனேறாகிய தன் வாகனத்திலே ஏறிவருகின்ற யோக புருஷன்; அவனுடைய கோலாகலமான திருவுலாவினைக் காண ஆசை கொண்ட பெண்களுக்குள்ளே தோகையே! நீ அவனைக் கண்டு அவன் மீது மோகங் கொண்டாய் அம்மையே. அதனைச் சொல்லப் பயந்திருந்தேன். இப்பொழுது நின்முன் வெளிப்படையாகச் சொல்வேன் கேட்பாயாக. காகம் அணுகாத திரிகூடமலைக்கு உன்மேல் எவ்விதக் காய்ச்சலும் கிடையாது. நீ கொண்டிருப்பது காமக் காய்ச்சல் என்றறிவாயாக. மோகினியே! உன்னுடைய கிறுகிறுப்பெல்லாம் அவனுடைய மோகத்தால் ஏற்பட்ட கிறுகிறுப்படி. மோகனக் கள்ளி!*

**கண்ணிகள்**

வாகனத்தில் ஏறிவரும் யோகபுருடன் - அவன்
வங்காரப் பவனியாசைப் பெண்களுக் குள்ளே
தோகைநீ அவனைக்கண்டு மோகித்தாய் அம்மே -அது
சொல்லப் பயந்திருந்தேன் சொல்லுவேன் முன்னே
காகம்அணு காததிரி கூட மலைக்கே உன்மேற்
காய்ச்சலல்ல காய்ச்சலல்ல காமக் காய்ச்சல்காண்
மோகினியே உன்னுடைய கிறுகிறுப் பெல்லாம் - அவன்
மோகக்கிறு கிறுப்படி மோகனக் கள்ளி!

*(வங்காரம் - ஒழுங்கு.)*

## 30. தாரும் பேரும் ஊரும்!

*குறப் பெண்ணே! இந்த நல்ல நகரத்தின் உள்ளே கன்னிப் பெண்ணாக நான் இருக்கும்போது சற்றும் வாய் கூசாமல் என்னைக் 'காமக்கள்ளி' என்றும் சொல்லி விட்டாய். நீ குறிப்பாகச் சொன்ன குறியினை உண்மையே என்று நிலை நாட்டுபவளானால் மாலையும், பேரும், ஊரும் ஆகிய விவரங்களையும் இப்போதே சொல்லடி!*

**கண்ணிகள்**

கன்னியென்று நானிருக்க நன்னகர்க்குள்ளே -என்னைக்
காமியென்றாய் குறவஞ்சி வாய்மதி யாமல்
சன்னையாகச் சொன்னகுறி சாதிப்பாயானால் - அவன்
தாரும்சொல்லிப் பேரும் சொல்லி ஊரும்சொல்லடி.

## 31. பெண்சேர வல்லவன்!

*பெண்களின் நாயகமே! உன்னைப் போல அவன் எனக்கு நன்றாக அறிமுகமானவனோ அம்மையே! ஊரும் பேரும் சொல்லுவது குறிமுகமோ? அல்லவே! பின்னையும், அவற்றையும் உனக்காகச் சொல்லுவேன். அவன் பெண் களைச் சேர்ந்து அநுபவிப்பதிலே மிகவும் வல்லமை யுடையவன் அம்மையே!*

**கண்ணிகள்**

**உன்னைப்போல் எனக்கவன் அறிமுகமோ - அம்மே**
**ஊரும் பேரும் சொல்லுவதுங் குறிமுகமோ?**
**பின்னையுந்தான் உனக்காகச் சொல்லுவேனம்மே - அவன்**
**பெண்சேர வல்லவன் காண் பெண்கட் கரசே!**

## 32. சினங்கொள்ளல்

*பெரிய காடடர்ந்த மலைநாட்டிலேயுள்ள குறத்தியே! கள்ளியே! மயில் போன்றவளே! உன்னுடைய மேனி வலிமையின் குறும்போ? வாய்மதமோ? அல்லது உனக்குத் தெரிந்த வித்தையின் செருக்கோ? என்முன், கொஞ்சமும் மதியாமல், என் காதலனைப் பெண்சேர வல்லவன் என்று தூற்றினாய்! கண் மயக்கால் என்னை மயக்கப் பார்க்காதே. உண்மையைச் சொல்லடி.*

**வண்மையோ வாய்மதமோ வித்தை மதமோ - என்முன்**
**மதியாமற் பெண்சேர வல்லவன் என்றாய்**
**கண்மயக்கால் மயக்காதே உண்மை சொல்லடி - பெருங்**
**கானமலைக் குறவஞ்சி கள்ளிமயிலி!**

## 33. குறத்தியின் பதில்

*பெண்களுக்கு அரசி போன்றவளே! 'பெண்' என்றால் 'திரி' என்றும் பொருள் உண்டு. ஒரு பெண்ணுடனே சேர என்றால் 'கூட' என்றும் சொல்லலாம். உறுதியாக வல்லவன் என்பதும், 'நாதன் என்பதும் ஒரே பொருள் தரும். அதனால், அவன் பெயரைத் திரிகூடநாதன் என்றும் சொல்லலாம் அம்மையே!*

**பெண்ணரசே பெண்ணென்றால் திரியுமொக்கும்- ஒரு**
**பெண்ணுடனே சேரவென்றாற் கூடவும் ஒக்கும்**
**திண்ணமாக வல்லவனும் நாதனுமொக்கும் பேரைத்**
**திரிகூட நாதனென்று செப்பலாம் அம்மே!**

## 34. கக்கத்தில் இடுக்குவாயோ?

*நின் உள்ளத்திலே இடம்பெற்ற மன்னவர் திரிகூட நாதர் என்று குறத்தி சொன்னவுடனே, மாணிக்க அணிகள் பூண்ட*

வசந்த வல்லியானவள், முகத்திலே நாணங் கொண்டு தலை கவிழ்ந்தாள். 'நன்னகரிலேயுள்ள ஈசர் உன்னை அணைவதற்கு விரைவிலேயே வரப் போகிறார். இந்த நாணத்தின் வயண மெல்லாம் நாளைக்கு நானும் காணத்தானே போகிறேன். ஒரு கைந்நொடி நேரத்திற்குள்ளாக உனக்குப் பொன்னிறமுடைய கொன்றைப்பூ மாலை உன் தோழியின் மூலம் வந்துவிடுவதைக் காண்பாயாக. இனி மேல், உன் வெட்கத்தை எல்லாம் கக்கத்தில் இடுக்கிக் கொள்வாயோ அம்மே?' இப்படிக் குறவஞ்சி கேலி பேசினாள். அதனைக் கேட்டதும் மனங் களிப்புற்ற வசந்தவல்லியானவள், தான் தேடி வைத்திருந்த ஆபரணங்கள் அனைத்தையும் அந்தக் குறவஞ்சிக்குப் பூட்டி, அவளை மகிழ்வுடன் அனுப்பி வைத்தாள்.

**கண்ணிகள்**

மன்னர்திரி கூடநாதர் என்னும் போதிலே - முகம்
மாணிக்க வசந்தவல்லி நாணிக் கவிழ்ந்தாள் 1
நன்னகரில் ஈசருன்னை மேவவருவார் - இந்த
நாணமெல்லாம் நாளைநானும் காணவே போறேன் 2
கைந்நொடியில் பொன்னிதழி மாலைவருங்காண் - இனிக்
கக்கத்தில் இடுக்குவாயோ வெட்கத்தை அம்மே 3
என்னுமொரு குறவஞ்சி தன்னை அழைத்தே - அவட்கு
ஈட்டுசரு வாபரணம் பூட்டினாளே. 4

இத்துடன், குறவஞ்சியிலே வசந்தவல்லிக்கு முதன்மை யான பகுதி முடிகிறது. இனிமேல் அந்தக் குறவஞ்சியையும் அவள் காதலனையும் முதன்மையாகக்கொண்டு நாடகம் மேலே தொடர்கிறது. அந்தப் பகுதிகள் மிகவும் சுவை யுடையன; இயற்கை உணர்வுகளை இனிதாக எடுத்து இயம்புவன.

★ ★ ★

# V. சிங்கனும் சிங்கியும்

## 1. சிங்கியைத் தேடி வருகிறான்

*கவிஞர்களின் பாமாலைகள் பலவற்றையும் பூண்டவரான திரிகூடத்து இறைவரின் அருளினைப்பெற்ற வசந்த வல்லியினது கூந்தலானது கொன்றைமலர் மாலையினை அணியப் பெற்றது. அதனால் களிப்புற்ற அவள் கொடுத்த பொன்மாலை மணிமாலை ஆகியவற்றை மிகவும் அழகுடன் அணிந்து கொண்டவளாக, வாய்ப் பேச்சிலே வல்லவளான குறவஞ்சியானவள் குற்றாலநகர்ப் பட்டணம் முழுவதிலுமே திரிந்து கொண்டிருந்தனள். அந்த நாள்களிலே அவள் பேரில் பெருங்கோபம் கொண்ட அவள் காதலனான சிங்கன் என்பவன், தன் அன்புக்கு உரியவளான அச் சிங்கியைத் தேடிக் கொண்டு, அவ்விடத்திற்கு வருகின்றான்.*

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

பாமாலைத் திரிகூடப் பரமரருள்
　　பெருவசந்தப் பாவை கூந்தல்
பூமாலை இதழிபெறப் பொன்மாலை
　　மணிமாலை பொலிவாய்ப் பூண்டு
நாமாலைக் குறவஞ்சி நன்னகர்ப்பட்
　　டணமுழுதும் நடக்கும் நாளில்
மாமாலைப் பூண்டசிங்கன் வங்கணச்சிங்
　　கியைத்தேடி வருகின்றானே.

*(பாமாலை - பாக்களாகிய மாலைகள். பரமன் - இறைவன். வசந்தப்பாவை - வசந்தவல்லி. பொன்மாலை - தங்கச்சங்கிலி. மணிமாலை - நவரத்தினமாலை. நாமாலை - வாய்ப் பேச்சாகிய மாலை. மாமாலை - பெரிய மோகத்தினை. சிங்கன் - குறவனின் பெயர். சிங்கி - குறத்தியின் பெயர்.)*

## 2. சிங்கனின் தோற்றம்

வக்காவினுடைய மணியினாற் கோக்கப் பெற்ற ஆரத்தை அணிந்துகொண்டு, கொக்கிறகுகளைத் தன் சிகையிலே சூடிக் கொண்டு, புலித்தோலாகிய கச்சையினை இடுப்பிலே அடுக்கடுக்காக வரிந்து கட்டிக்கொண்டு, தன்னைத் தொடர்ந்த புலியைக் கண்டதும் உறுக்கிப் பார்த்தே அதை ஓடச் செய்துவிட்டுத் தோளிலே அம்பறாத் தூணியைத் தொங்க விட்டுக் கொண்டவனாகக், கைக்கான ஆயுதங்கள் பல வற்றையும் எடுத்துக்கொண்டு, வளை தடியையும் எடுத்துக் கொண்டு, வலையையும் தோளிலே போட்டுக்கொண்டு, எட்டுத் திசைகளுக்கும் அடங்காத ஆற்றலுடைய குளுவனாகிய சிங்கன் என்பவன், குற்றாலத் திரிகூட மலையிலே வந்து கொண்டிருந்தான்.

**வக்காவின் மணிபூண்டு கொக்கிறகு**
**சிகைமுடித்து, வரித்தோற் கச்சைத்**
**தொக்காக வரிந்திறுக்கித் தொடர்புலியைக்**
**கண்டுறுக்கித் தூணிதூக்கிக்**
**கைக்கான ஆயுதங்கள் கொண்டுசில்லிக்**
**கோலெடுத்துக் கண்ணி சேர்த்துத்**
**திக்கடங்காக் குளுவசிங்கன் குற்றாலத்**
**திரிகூடச் சிங்கன் வந்தான்.**

*(வக்கா - கொக்கு வகைகளிலே பெரிதான ஒரு வகை. சிகை - தலைமுடி. வரித்தோல் - புலித்தோல். சில்லிக்கோல் - வளைதடி. மிருகங்களை இதனால் எறிந்து கொல்லுவர்; மீண்டும் எறிந்தவரிடம் அத்தடி திரும்பி வந்துவிடும்.)*

## 3. மலைக் குறவன்!

வக்காவின் மணியினைச் சூடியவனாக, பெரிய சாகசக் காரியான தன் சிங்கி மீண்டு வந்து கொண்டிருக்கும் வழியைத் தேடிக்கொண்டு, ஆற்றல் மிக்கவான புலிகரடி முதலியவையும் கிடுகிடுவென நடுங்குமாறு அவற்றை வெறித்து நோக்கிய வாறே, 'கக்கா' என்று ஓலமிடுகின்ற குருவி கொக்கு ஆகியவற்றைப் பிடிப்பதற்குப் பொருத்தமான கண்ணி

*யினையும் தன் கையிலே கொண்டவனாகத் துள்ளுநடை நடந்துகொண்டே, திரிகூடமலைக் குறவனான சிங்கன் வந்து தோன்றினான்.*

வக்காவின் மணிசூடி வகைக்காரி
சிங்கிவரும் வழியைத் தேடி
மிக்கான புலிகரடி கிடுகிடெனு
நடுநடுங்க வெறித்து நோக்கிக்
'கக்கா' என்றோலமிடும் குருவிகொக்குக்
கேற்றகண்ணி கையில் வாங்கித்
தொக்கான நடைநடந்து திரிகூட
மலைக்குறவன் தோன்றி னானே.

*(வெறித்து நோக்குதல் - உறுத்து நோக்குதல். கண்ணி - வலை. தொக்கான நடை - துள்ளுநடை; வேட்டையாடுதற்குப் பொருத்தமான நடையும் ஆம்.)*

## 4. திரிகூடச் சிங்கன்!

*கொக்கிறகைத் தன் சிகையிலே சூடிக் கொண்டு குருவி வேட்டைகளை ஆடிக்கொண்டு வக்காவின் மணியினைப் பூட்டிக் கொண்டு மடவார்களின் கண்களைப்போல விளங்கும் கூர்மையான ஈட்டியைக் கையிலே எடுத்துக் கொண்டு, அடுக்கடுக்காகக் கச்சையினை இறுக்கிக் கட்டிக் கொண்டு, துடிக்கிற தன் மீசையினை முறுக்கி விட்டுக் கொண்டு, எட்டுத் திக்குகளிலும் அடங்காத குளுவச் சிங்கனாகிய திரிகூடச் சிங்கன் வந்து கொண்டிருந்தான்.*

இராகம் - அடாணா தாளம் - சாப்பு

### கண்ணிகள்

கொக்கிறகு சூடிக் கொண்டு
குருவிவேட்டை ஆடிக்கொண்டு
வக்காமணி பூட்டிக் கொண்டு
மடவார்கண்போல் ஈட்டி கொண்டு
தொக்காக் கச்சை இறுக்கிக் கொண்டு
துள்ளுமீசை முறுக்கிக் கொண்டு

திக்கடங்காக் குளுவ சிங்கன்
திரிகூடச் சிங்கன் வந்தான்.

## 5. அவன் வலிமை!

*பறந்துவரும் வண்டுகளின் இசையொலியானது சிங்கத்தின் முழக்கத்தைப் போலக் கேட்டுக் கொண் டிருக்கும் திரிகூடத்து இறைவனுடைய நாட்டிலே ஒவ்வொரு வேளைதோறும் புகுந்து சிறந்த விளைவயல்களிலே கண்ணிகுத்திப் பறவை வேட்டைகளாடியும் நாய்போலத் தடம் பார்த்தும், பூனைபோலப் பதுங்கியிருந்தும், நரி போலப் பம்மிக் கொண்டிருந்தும்; பேய்போலப் பின் தொடர்ந்து அறைந்து கொன்றும் வேட்டையாடும் 'திரிகூடச் சிங்கன்' என்று சொல்லப்படுகின்ற குளுவன் நானே!*

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

ஆளிபோற் பாய்ந்தசுரும் பிசைகேட்கும்
திரிகூடத் தமலர்நாட்டில்
வேளைதொறும் புகுந்துதிரு விளையாட்டம்
கண்ணிகுத்தி வேட்டையாடி
ஞாளிபோல் சுவடெடுத்துப் பூனைபோல்
ஒளிபோட்டு நரிபோல் பம்மிக்
கூளிபோல் தொடர்ந்தடிக்கும் திரிகூடச்
சிங்கனெனும் குளுவன் நானே.

*(ஆளி - சிங்கம். சுரும்பு - வண்டு. அமலர் - இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கிய இறைவர். விளையாட்டம் - விளை நிலம். ஞாளி - நாய். ஒளிபோட்டு - ஒளிந்திருந்து. கூளி - பேய் வகையுள் ஒன்று.)*

## 6. சிங்கன் நானே!

*தேவர்களுக்கும் அறிவதற்கு அரியவர்; அயன் அரிஅரன் ஆகிய முத்தேவர்களினும் பெரியவர்; சித்திர சபையிலே வீற்றிருப்பவர்; அவருடைய சித்திராநதி சூழ்ந்திருக்கும் கோவிலினிடத்திலும், காடுகளிலும், சோலைகளிலும் கணக்கிலடங்காக் குருவிகளைப் பிடிக்கும் குளுவன் என்று சொல்லப்படுபவனும் நானேதான்.*

அடியவர்கள் ஆர்வங்கொள்ளுகின்ற 'சிவயநம' என்னும் பஞ்சாட்சர மந்திரத்திற்கு உரியவர் திருக்குற்றால நாதர். அவருடைய அருளைத் தருகின்ற திருநீற்றினை அணியாதவர்களுடைய கைகளின் நரம்பை வெட்டி எடுத்துக் கின்னரம் என்னும் யாழிலே நரம்பாகத் தொடுத்துக் கொண்டு அந்தப் பாதகர்களின் தோலினால் பலவகைத் தவில்களைச் செய்து, அவற்றை அடித்துக் கொண்டே, பறவைகளைப் பிடிக்கின்ற குறவன் என்று சொல்லப்படுகிறவனும் நானேதான்!

தம் சடையினிலே இளம்பிறையினை உடையவர்: குறும்பலாவினடியிலே கோவில் கொண்டிருப்பவர்; அவருடைய பெருமையினை உள்ளத்திலே கொண்டு அவரை வணங்காத பேர்களினுடைய குடுமியினைப் பிடித்து, அதன் பாலுள்ள பல மயிர்களையும் நறுக்கிப் போட்டுச் சில வலைக்கண்ணிகளாக அவற்றை முறுக்கிப், பறவைகள் பிடிக்கின்றவன் என்று கூறப்படும் குளுவனும் நானேதான்!

ஒரு காதணி சங்கத்தாலமைந்தது; மற்றொரு காதணி தங்கத்தாலாகியது; இப்படி அணிந்திருக்கும் விநோதமான இயல்பினையுடையவர் நம் திரிகூடநாதர். அவருடைய திருநாமங்களைப் போற்றித் துதித்துத் திருநீறு சாத்தும் வழக்கமுடைய திரிகூடன் என்னும் நாமத்தையுடைய சிங்கனும் நானேதான்!

**இராகம் - தன்யாசி** **தாளம் - ஆதி**

**கண்ணிகள்**

**தேவருக்கு அரியார் மூவரிற் பெரியார்**
**சித்திர சபையார் சித்திரா நதிசூழ்**
**கோவிலிற் புறவில் காவினில் அடங்காக்**
**குருவிகள் படுக்கும் குளுவனும் நானே! 1**

**காதலஞ் செழுத்தார் போதநீ றணியார்**
**கைந்நரம் பெடுத்துக் கின்னரம் தொடுத்தப்**
**பாதகர் தோலால் பலதவில்அடித்துப்**
**பறவைகள் படுக்கும் குறவனும் நானே! 2**

தலைதனில் பிறையார் பலவினில் உறைவார்
தகையினை வணங்கார் சிகைதனைப் பிடித்தே
பலமயிர் நறுக்கிச் சிலகண்ணி முறுக்கிப்
பறவைகள் படுக்கும் குளுவனும் நானே! 3

ஒருகுழை சங்கம் ஒருகுழை தங்கம்
உரியவி நோதர் திரிகூட நாதர்
திருநாமம் போற்றித் திருநீறு சாத்தும்
திரிகூட நாமச் சிங்கனும் நானே. 4

*(புறவு-காடு. படுக்கும் - அகப்படுத்தும்; பிடிக்கும். தவில் - முழவு வகை. கின்னரம் - யாழ்வகை. சிகை - குடுமி. 'ஒரு குழை சங்கம் ஒரு குழை தங்கம் உரிய விநோதர்" அர்த்தநாரீசுரராகிய சிவ பெருமான். விநோதர் - வியப்பான அமைதியினை உடையவர்.)*

## 7. நூவன் வந்தான்!

தாருகாவனத்து முனிவர்கள் ஏவிவிட்ட புலியினைக் கொன்றும், அத்துடன் தக்கன் யாகத்திலே வந்த சந்திரனை வலியழித்தும், அம் முனிவர்கள் ஏவிய போர்க்குணம் மிகுந்த மதயானையையுங் கொல்லும் ஆற்றல் மிகுந்தவர் திரிகூடநாதர். அவருடைய திரிகூட மலைச்சாரலிலே மதங் கொண்ட புலபோல வந்துகொண்டிருந்த சிங்கனுக்கு முன்பாக, வஞ்சப் பேச்சும் கதையும் பேசிக் கொண்டே தன் கையிலே ஈட்டியினைத் தாங்கிக் கொண்டு எலிகளைத் துரத்திக் கொண்டிருக்கும் வீரனாகிய 'ஈப்புலி' என்ற கேலிப் பெயரினையுடைய நூவன் என்பவனும் வந்து கொண்டிருந்தான்.

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

புலியொடு புலியைத் தாக்கிப்
போர்மத யானை சாய்க்கும்
வலியவர் திரிகூடத்தில்
மதப்புலிச் சிங்கன் முன்னே

**கலிகளும் கதையும் பேசிக்**
**கையிலே ஈட்டி வாங்கி**
**எலிகளைத் துரத்தும் வீரன்**
**ஈப்புலி நூவன் வந்தான்.**

*(அம்புலி, புலி என்று குறைந்து வந்தது. ஈப்புலி - நூவனின் கோமாளித்தனத்தைக் குறிக்கும் கேலிப்பட்டம். புலிகளைத் தாக்கும் வலியவர் நாட்டிலே எலிகளைத் துரத்தும் நூவன் என்று சொல்லும் நகைச்சுவை காண்க.)*

ஊர்க்குருவியைப் பிடிக்கின்ற மெல்லிய நெருக்கமான கண்ணியைக் கையிலே வைத்துக் கொண்டு, தன் மனத்திலே உள்ளானையும், வலியானையும் பிடிக்க வேண்டுமென்று எண்ணிக் கொண்டு அதற்குரிய வழிவகைகள் பலவற்றையும் பற்றித் தன்னுடன் வருபவர்களிடம் பேசிக்கொண்டு, பறவைகளைப் பிடிக்கும் தன்மையுடையவனான நூவனும் வந்து கொண்டிருந்தான்.

கரிக்குருவியைப் பிடிப்பதற்குரிய கண்ணியையும் எடுத்துக் கொண்டு கானாங்கோழிகளைப் பிடிப்பதற்கு உரிய பொறியையும் எடுத்துக் கொண்டு, மூங்கில் வில்லினையுடைய குளுவர்களிலே கவண்டன், மல்லன் என்பவர்களைப் போலத் தன்னை எண்ணிக் கொண்டு, விளங்குகின்ற நூவன் என்பவனும் வந்து கொண்டிருந்தான்.

'ஏகனையும் நாகனையும் கூவி அழைத்துக் கொண்டு, எலியனையும் புலியனையும் அதைச் செய் இதைச் செய்' என்று ஏவிக் கொண்டு தன் தோழனான சிங்கனுடன் உறவாடிக் கொண்டு அழகுள்ள அந்த நூவனும் வந்தான்.

கொட்டகைக்கு நட்டிருக்கும் தூண்களைப் போன்று அவனுடைய கால்கள் தோன்றவும், ஒட்டகத்தைப் போல அவனுடலின் மேற்பாகம் தோன்றவும், கட்டமைந்த உடலினனான திரிகூடன் என்னும் சிங்கனுக்கு முன்பாகக் கள்ளைக் குடித்து ஈக்கள் மொய்த்துக் கொண்டிருக்கும் வாயினையுடைய நூவனும் வந்து சேர்ந்தான்!

இராகம் - அடாணா தாளம் - சாப்பு

**கண்ணிகள்**

ஊர்க் குருவிக்குக் கண்ணியும் கொண்டு
உள்ளானும் வலியானும் எண்ணிக் கொண்டு
மார்க்கமெல் லாம்பல பண்ணிக் கொண்டு
கோட்கார நூவனும் வந்தானே. 1

கரிக்குருவிக்குக் கண்ணியும் கொண்டு
கானாங் கோழிக்குப் பொறியும் கொண்டு
வரிச்சிலைக் குளுவரிற் கவண்டன் மல்லன்
வாய்ப்பான நூவனும் வந்தானே. 2

ஏகனை நாகனைக் கூவிக் கொண்டு
எலியனைப் புலியனை ஏவிக்கொண்டு
வாகான சிங்கனை மேவிக் கொண்டு
வங்கார நூவனும் வந்தானே. 3

கொட்டகைத் தூண்போற் காலி லங்க
ஒட்டகம் போலே மேலி லங்கக்
கட்டான திரிகூடச் சிங்கன் முன்னே
மட்டிவாய் நூவனும் வந்தானே. 4

*(ஊர்க்குருவி - ஒருவகைக் குருவி. உள்ளான் - வலியான் - பறவையினங்களுள் சில. கோட்காரன் - தந்திரக்காரன். கானாங்கோழி - கானங்கோழி. வாகு - வலிமை.)*

## 8. பட்சி பார்த்தல்

*திரிபுரங்களாகிய மூவகையான கோட்டைகளும் அழிந்து போகும்படியாகத் தம் சிரிப்பினாலேயே வீர விளையாடலைச் செய்த ஆற்றலை உடையவர் திருக்குற்றாலர். அவருடைய அழகிய விளை நிலங்களினூடே, பாவனையாக, நூவன் பறவைகளைப் போல அவ்வவற்றின் குரலெடுத்துக் கூவினான். அப்போது, சிங்கன் அவ்விடத்திலேயே இருந்த ஒரு மரத்தின் மேலே ஏறி நின்று, அக்குரல்களைக் கேட்டு வந்து கொண்டிருக்கும் பறவை இனங்களை எல்லாம் பார்க்கலானான்.*

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

மூவகை மதிலும் சாய மூரலால் வீரம் செய்த
சேவகர் திருக்குற்றாலர் திருவிளைய ாட்டம் தன்னிற்
பாவகம் ஆக நூவன் பறவைபோற் பறவை கூவ
மாவின்மே லேறிச் சிங்கன் வரும்பட்சி பார்க்கின்றானே.

*(மூவகை மதில்கள் - பொன், வெள்ளி, இரும்பினால் அமைந்த திரிபுரக் கோட்டைகள். மூரல் - சிரிப்பு. பாவகம் ஆக - அவ்வவற்றின் பாவனையாக. மா - மாமரம்).*

## 9. பறவைகளின் வரவு

*பறவைகள் வருகின்றன அப்பனே! பறவைகள் வருகின்றன அப்பனே! பறவைகள் வருகின்றன அப்பனே! திரிகூட நாதரின் வாட்டமில்லாத பண்ணைகள், பாட்டப் பற்றுகள் எல்லாம் குருவிகளும் நாரைகளும் அன்னங்களும் தாராக்களும் கூழைக் கடாக்களும் செங்கால் நாரைகளும் வந்து கொண்டிருக்கின்றன அப்பனே!*

*தம் திருச்சடையின் மீது புனற் கன்னியாகிய கங்கையை வைத்திருக்கும் திரிகூடநாதர் முன் காலத்திலே மலை மகளாகிய பார்வதியைத் திருமணஞ் செய்து கொண்ட காலத்திலே இமவானாகிய மன்னன் ஒருவன் அவருக்கு வேண்டிய வரிசைகளை எல்லாம் செய்தான். கங்கையை ஏற்றபோது யாரும் அப்படி வரிசை இடவில்லை. அதனால் அவளுக்கு நானே வரிசை செய்வேன் என்று அவளுடைய அன்னையான அன்புமிகுந்த ஆகாய கங்கையானவள் பள்ளியை நோக்கிப் புறப்பட்டு வருவது போன்ற அழகுடன் பொன்னிறமான வானத்தின் எம்மருங்கும் தம்முடைய நிறமாகவே தோன்றும்படி செய்து கொண்டு உலகத்தை வட்டமிட்டவாறே பறவையினங்கள் வந்து கொண் டிருக்கின்றன அப்பனே!*

*காடைகள் வருகின்றன; கம்புள்கள் வருகின்றன; காக்கைகள் வருகின்றன; கொண்டைக் குலாத்திகள் வருகின்றன: மாடப்புறாக்களும் மயில்களும் வருகின்றன: மற்றொரு சாரியாகக் கொக்குக் கூட்டங்கள் எல்லாம்,*

மதுரையைத் தம் கைவசமாக்கிக்கொண்டு சைவத்தை அப்புறப்படுத்திய சமணர்களின் கூட்டத்தை நீண்ட கழுமரங்களிலே, ஏற்றுவதற்காக, ஆற்றிலே ஏட்டினை இட்டு அதனை எதிரேறிப் போகச் செய்த சம்பந்தமூர்த்திக்கு அந்நாளிலே முத்துப்பந்தல் வந்தாற்போல வந்து கொண்டிருக்கின்றன அப்பனே!

வெள்ளைப் புறாக்களும், சகோரப் பட்சிகளும், ஆந்தைகளும், மீன்கொத்திப் பறவைகளும், மரங்கொத்திப் பறவைகளும், கிளிகளும், பஞ்சவர்ணக் கிளிகளின் கூட்டமும், மயில்களும், நாகணவாய்ப் புட்களும், உள்ளானும், சிட்டும், வலியானும், அன்றிலும் ஆகியவை எல்லாம் தம்முள் ஆரவாரத்துடன் கூடிப் பல்வேறு பேதங்களாகத் துள்ளியோடுகின்ற சூலமும் கபாலமும் ஏந்தியவரான திரிகூடநாதரின் மனைவியாரான பிராட்டியார் அணிந்து கொண்டிருக்கும் வண்ணப் பட்டாடை போல, அணி யணியாக வந்து கொண்டிருக்கின்றன அப்பனே!

**இராகம் - கல்யாணி** **தாளம் - ஆதி**

**பல்லவி**

வருகினும் ஐயே! பறவைகள் வருகினும் ஐயே!
வருகினும் ஐயே! திரிகூட நாயகர்

**அனுபல்லவி**

வாட்டமில்லாப் பண்ணைப் பாட்டப் புறவெல்லாம்
குருகும் நாரையும் அன்னமுந் தாராவும்
கூழைக் கடாக்களும் செங்கால் நாரையும் (வரு)

**சரணங்கள்**

சென்னியி லேபுனற் கன்னியை வைத்த
திரிகூட நாதர்கிரிமாது வேட்கையில்
மன்னன் ஒருவன் வரிசையிட்டான் கங்கை
மங்கைக்கு நானே வரிசைசெய் வேன்என
அன்னை தயவுடை ஆகாச கங்கை
அடுக்களை காணப் புறப்படு நேர்த்திபோல்

பொன்னிற வானெங்கும் தந்நிற மாகப்
புரித்து புவனம் திரிந்து குருகினம் (வரு)
காடை வருகுது கம்புள் வருகுது
காக்கை வருகுது கொண்டைக் குலாத்தியும்
மாடப் புறாவும் மயிலும் வருகுது
மற்றொரு சாரியாய்க் கொக்குத் திரளெல்லாம்
கூடலை உள்ளாக்கிச் சைவம் புறம்பாக்கிக்
கூடும் சமணரை நீடும் கழுவேற்ற
ஏடேதிர் ஏற்றிய சம்பந்த மூர்த்திக்கன்று
இட்டதிருமுத்தின் பந்தல்வந் தாற்போல (வரு)
வெள்ளைப் புறாவும் சகோரமும் ஆந்தையும்
மீன்கொத்திப் புள்ளும் மரங்கொத்திப் பட்சியும்
கிள்ளையும் பஞ்சவர் ணக்கிளிக் கூட்டமும்
கேகயப் பட்சியும் நாகண வாய்ச்சியும்
உள்ளானும் சிட்டும் வலியானும் அன்றிலும்
ஓலஞ்செய் தேகூடி நாலஞ்சு பேதமாய்த்
துள்ளாடுஞ் சூல கபாலர் பிராட்டியார்
தொட்டாடும் ஐவணப் பட்டாடை போலவே. (வரு)

*(பண்ணை - தோட்டங்கள். பாட்டப்புறங்கள் - வாரத்துக்கு விட்டுள்ள விளைநிலப் பகுதிகள். கூழைக் கடாக்கள் - பெரிய உருவுடைய கொக்கின்வகை. கிரிமாது - மலைமகள். வரிசை - சீதனவரிசை. அடுக்களை - உணவு சமைக்கும் அறை. புவனம் - உலகம். கம்புள் - கம்பங்கோழி, சகோரம் - சகோரப்பட்சி. கேகயப்பட்சி - மயில். நாலஞ்சுபேதம் - பலபேதம்; நவபேதமும் ஆம். துள்ளாடும் - துள்ளித் திருநடனம் இயற்றும். ஐவணப் பட்டாடை - பஞ்ச வண்ணப் பட்டாடை.)*

## 10. சாயுது ஐயே!

*ஈராயிரங் கரங்களையுடையவனான் பானுகம்பன் என்பவன் ஏந்திய சங்குகளும் நான்மறைகளும் சிறப்புடனே இசைமுழங்கிக் கொண்டிருக்கத் திருநடனம் செய்பவரான திருக்குற்றாலநாதரின் மலைச்சாரலிலே ஓராயிரம் திருமுகங்கொண்டு பாய்ந்து ஓடிச் சிறப்புப்பெற்ற கங்கா*

*நதியினைப் போலப் பார்க்கின்ற பலப்பல திசைகளெங்கும் பறவைகள் நிரைநிரையாக வந்து இறங்குகின்றன அப்பனே!*

**கொச்சகக் கலிப்பா**

**ஈரா யிரங்கரத்தான் ஏற் றசங்கும் நான்மறையும்**
**சீராய் இரங்கநடம் செய்தவர்க்குற் றாலவெற்பில்**
**ஓராயிர முகமாய் ஓங்கியகங் காந்திபோல்**
**பாரார் பலமுகமும் பட்சிநிரை சாயுதையே.**

*(சீராய் இரங்க - சிறப்புடன் ஒலிமுழுங்க. பாரார் பல முகமும் - பார்க்க நேரும் பற்பல திசைகளிலும்.)*

*பறவைகள் சாய்ந்து கொண்டிருக்கின்றன. அப்பனே! பறவைகள் சாய்ந்து கொண்டிருக்கின்றன! சந்தனச் சோலைக்கும் செண்பகச் சோலைக்கும், கோவில் கொண்டிக்கும் குழல்வாய் மொழியம்மையின் பேரிக்கு மாகக் குற்றால நாதரின் சிற்றாற்று வெள்ளத்தைப் போலப் பறவைகள் சாய்ந்து கொண்டிருக்கின்றன அப்பனே!*

*மேகங்கள் வந்து படியும் செங்குளம், மேலப்பாட்டப் பற்று காடுவெட்டிப்பற்று, நெடிய சுண்டைப்பற்று, சிறப்புப் பொருந்திய பேட்டைக் குளத்துக்கு உரிமையுடைய காங்கேயன் ஸ்ரீகிருஷ்ணன் என்பவனுக்குரிய மேட்டப் பற்று, முனிக்குருக்கள் பற்று, ஏரிவாய்ப் பற்று, சீவலப் பேரிப் பற்று, வடகால்பற்று, இராசகுலராமன் பற்று, கண்டு கொண்டான்பற்று, மேலைமாரிப்பற்று, கீழைமாரிப்பற்று, சன்னநேரிப்பற்று, சாத்தனேரிப்பற்று ஆகிய பலவகை வயற்புறங்களிலும் சுற்றிவிட்டுப் பறவைகள் வந்து சாய்கின்றன அப்பனே!*

*பாரைக்குளம், தென்குளம், மேல்குளம், பாண்டியன் குளம் சாட்டப் பெருங்குளம், செங்குறிஞ்சிக்குளம், ஊருணிப்பற்று, திருப்பணி நீளம், உயர்ந்த புளியங்குளம், துவரைக்குளம், மாரனேரிக் குளம், மத்தளம்பாறைக் குளம், வழிமறித்தான் பாறைக்குளம், ஆலடிப் பற்று, தலையிலே ஆத்திமாலையினை யணிந்த குற்றால நாதரின் தோட்ட*

மாகிய ஒடியசெய், அபிஷேகப்பேரி, கணக்கன்பற்று ஆகிய பலவற்றிலும் சுற்றிப் பறவைகள் பலவும் வந்து இறங்குகின்றனவே.

ஐயரான குற்றாலத்து நம்பியாரின் திருத்து, அதற்கு அப்பாலே விளங்கும் தாதன் குற்றாலப் பேரிச் செய், அழகிய புலியூர், இலஞ்சி, மேலகரம், செங்கோட்டை, சீவலநல்லூர், சிற்றம்பலம், தூயகுன்றக்குடி, வாழ வல்லான்குடி, சுரண்டையூர் முதலாக உட்கிடை என்னும் பகுதியையும் சுற்றியவாறு, கொய்யப்பட்டுத் தொடுத்த மலர்மாலையினை அணிந்த இலஞ்சிக் குமரப்பெருமான் திருவிளையாடல் செய்யும் விளைநிலப் பகுதிகளினும் பறவைகள் வந்து இறங்குகின்றனவே, ஐயனே!

**இராகம் - கல்யாணி** **தாளம் - ஆதி**

**பல்லவி**

**சாயினும் ஐயே! பறவைகள் சாயினும் ஐயே!**

**அனுபல்லவி**

**சாயினும் ஐயே! பாயும் பறவைகள்**
**சந்தனக் காட்டிற்கும் செண்பகக் காவுக்கும்**
**கோயிற் குழல்வாய் மொழிமங்கைப் பேரிக்கும்**
**குற்றால நாயகர் சிற்றாற்று வெள்ளம்போலச்(சாயினும்)**

**சரணங்கள்**

**காராரும் செங்குளம் மேலப்பாட் டப்பற்று**
**காடுவெட்டிப்பற்று நீடுசுண் டைப்பற்று**
**சீராரும் பேட்டைக் குளமுடைக் காங்கேயன்**
**ஸ்ரீகிருஷ்ணன் பேரி முனிக்குரு கன்பேரி**
**ஏரிவாய் சீவலப் பேரி வடமால்**
**இராசகுல ராமன்கண்டுகொண் டான்மேலை**
**மாரிப்பற்றும்கீழை மாரிப்பற்றும்சன்ன**
**நேரிப்பற்றும்சாத்த னேரிப்பற்றும் சுற்றிச் (சாயினும்)**
**பாரைக் குளந்தெற்கு மேல்வழு திக்குளம்**
**பாட்டப் பெருங்குளம் செங்குறிஞ்சிக் குளம்**

ஊருணிப் பற்றும் திருப்பணி நீளம்
உயர்ந்த புளியங் குளத்து வரைக்குளம்
மாரனே ரிக்குளம் மத்தளம் பாறை
வழிமறித் தான்குளம் ஆலடிப் பற்றும்
ஆரணி குற்றாலர் தோட்ட நெடுஞ்செய்
அபிடேகப் பேரிக் கணக்கன் பற்றிலும் (சாயினும்)
ஐயர்குற் றாலத்து நம்பியார் திருத்து
அப்பா லொருதாதன் குற்றாலப் பேரிச்
செய்யம் புலியூர் இலஞ்சிமே லகரம்
செங்கோட்டை சீவல்நல்லூர் சிற்றம்பலம்
துய்ய குன்றக்குடி வாழவல் லான்குடி
சுரண்டை யூர்முதல் உக்கிடை சுற்றியே
கொய்யு மலர்த்தார் இலஞ்சிக் குமார
குருவிளையாடும் திருவிளையாட்டத்தில். (சாயினும்)

*(திருத்து, பற்று, பேரி, விளையாட்டம் முதலியன வெல்லாம் விளைநிலப் பகுதிகளைக் குறிக்கும்.)*

## 11. சிங்கியின் அழகு

*கொட்டுகள் முழங்க அழகுடன் திருநடனம் செய்கின்ற பெருமான் குற்றாலநாதர். அவருடைய திரிகூடமலைச் சாரலிலே, நீட்சியும் ஆழகும் பெற்று விளங்கும் வாள் போன்ற விழிகளும், நெற்றியின்மேல் விளங்கும் அழகான கஸ்தூரிப் பொட்டும், காதழகும், பொன்னணிகளும் உடையவளாக, என்னைவிட்டுப் பிரிந்து சென்ற என் சிங்கியான கட்டழகியினுடைய அழனை எண்ணினால், அது என் கண்ணளவுக்கும் கொள்ளாத பேரழகாயிற்றே!*

**கொச்சகக்கலிப்பா**

கொட்டழகு கூத்துடையார் குற்றால நாதர்வெற்பில்
நெட்டழகு வாள்விழியும் நெற்றியின்மேல் கத்தூரிப்
பொட்டழகும் காதழகும் பொன்னழகும் ஆய்நடந்த
கட்டழகி தன்னழகென் கண்ணளவு கொள்ளாதே.

*(பொன் - அழகு - திருமகளின் அழகுமாம்.)*

## 12. பறவைகள் மேய்தலைச் சொல்லுதல்

*பறவைகள் மேய்கின்றன ஐயே! பறவைகள் மேய்கின்றன ஐயே! திருக்குற்றாலநாதரின் பரந்த குலசேகரப் பேரிக் குளமும், ஆயிரப்பேரிக் குளமும், தென்காசிக் குளமும் எல்லாம் சுற்றிச் சுற்றி, அயிரையும், தேளியும், ஆரால் மீனும் கொத்திப் கொத்திப் பறவைகள் மேய்கின்றன ஐயே!*

*திருக்குற்றாலநாதரின் ஆலயத்தைச் சூழவும் திருமதில் மற்றும் திருப்பணிகளையும் கட்டி முடித்தவன்; அன்ன சத்திரம் கட்டியவன்; அஃதல்லாமல் தென்காசிப்பாலமும் கட்டியவன்; கோவிற் படித்தரங்களை அமைத்து அவற்றைச் சேமித்து வைப்பதற்கான சேரையும் கட்டியவன்; பக்த ஜனங்கள் அனைவரையும் காப்பதற்கென்றே கொடிகட்டித், திருமாலும் பிரமனும் போற்றிய குற்றாலநாதருக்கு வழி வழியாகத் தானும் தன் குடும்பமும் தொண்டு செய்திடக் கச்சைகட்டிக் கொண்டவளாகிய உத்தமன்; கிளுவை நகரிலேயிருந்து மக்களைப் பரிபாலித்து வருகின்ற சின்ன ணஞ்சாத்தேவன் என்னும் கோமான். அவன் சிறு காலமாகிய தினம் ஆறுவேளைப் பூசைக்காக விட்டிருக்கின்ற திருத்துப் புறங்களிலெல்லாம் பறவைகள் வந்திறங்கி மேற்கின்றனவே, ஐயனே!*

*அந்தச் சின்னணஞ்சாத் தேவனுடைய படைத்தலைவனாக விளங்கியவன் வயித்தியப்பன் என்பவன். அவன் பெற்ற சைவக் கொழுந்தும் தர்மத்துக்கு ஓர் ஆலயமும் போன்றவன்;சேனைச் சவரிப் பெருமாள் பிள்ளையின் பின்னாக வந்து பிறந்தவன்; மகனாகிய மருதூர் வயித்தியப்பனுடன் பெருமையுடையவனாகிய குற்றால நாதனையும் பெற்றெடுத்தவன்; வள்ளல் எனப் பலரும் போற்றும் பிச்சைப்பிள்ளை என்பவன். அவனுடைய வயல்களிலெல்லாம், கானக்குளத்துக்கு உள்வாயிலே இருக்கும் கீழைப் புதுக்குளம் கற்பூரக்காற் பற்று, தட்டான்குளச்சுற்று என்னுமிடங்களிலெல்லாம், பறவைகள் வந்து இறங்கி மேய்கின்றனவே, ஐயனே!*

இராகம் - கல்யாணி தாளம் - ஆதி

**பல்லவி**

மேயினும் ஐயே! பறவைகள் மேயினும் ஐயே!

**அனுபல்லவி**

மேயினும் ஐயே! குற்றால நாதர் வியன்குல சேகரப்
பட்டிக் குளங்களும்
ஆயிரப் பேரியும் தென்காசி யும் சுற்றி அயிரையும்
தேளியும் ஆராலும் கொத்தியே (மே)

**சரணங்கள்**

ஆலயம் சூழத் திருப்பணியுங்கட்டி
அன்னசத்ரங் கட்டி அப்பாலும் தென்காசிப்
பாலமும் கட்டிப் படித்தரஞ் சோ்கட்டிப்
பத்த சனங்களைக் காக்கத் துசங்கட்டி
மாலயன் போற்றிய குற்றால நாதர்
வழித் தொண்டு செய்திடக் கச்சை கட்டிக்கொண்ட
சீலன் கிளுவையிற் சின்னணஞ் சேந்த்ரன்
சிறுகால சந்தித் திருத்துப் புறவெல்லாம் (மே)

தானைத் தலைவன் வயித்தியப் பன்பெற்ற
சைவக் கொழுந்து தருமத்துக் காலயம்
சேனைச் சவரிப் பெருமாள் சகோதரன்
செல்வன் மருதூர் வயித்தி யப்பனுடன்
மானவன் குற்றால நாதனைப் பெற்றவன்
வள்ளலெனும்பிச்சைப் பிள்ளை திருத்தெல்லாம்
கானக் குளத்துள் வாய்க் கீழைப் புதுக்குளம்
கற்பூரக் காற்பற்றும் தட்டான் குளச்சுற்றும் (மே)

*கிளுவை மன்னனாகவிருந்த சின்னணஞ் சேந்தரனுடைய வடகரை நாட்டுக்கு மந்திரியாகவும், செந்நெல் மலிந்த மருதூர் நகருக்கே ஒரு நாயகமாகவும், தென்காசி என்னும் ஊருக்கே ஒரு தாயகம் போலவும், தன்னை மென்மேலும் உயர்த்துகின்ற ஸ்தானிகனாகவும் விளங்கி, நன்னகராகிய குற்றால நகரின் மீது அந்தாதி சொன்னவனும்*

*பகைவரும் பணிந்து போற்றுபவனுமாகிய பிச்சைப் பிள்ளையின் வயல்களிலெல்லாம் பறவைகள் வந்திறங்கி மேய்கின்றனவே. (3)*

*நல்ல நகரங்களையும் ஊர்களையும் உண்டாக்கியும் சாலை அமைத்தும், மடங் கட்டியும், சோமாஸ்கந்தர் கோவிற் கொலு மண்டபத்தைக் கட்டியும் மிக்க பரமானந்தமாக விளங்கும் தென்னை மரத் தோப்புகளை உண்டாக்கியும், தெப்பக்குளம் கட்டியும், தேர்மண்டபம் கட்டியும், அனைவரும் புகழும் திரிகூடத்து அம்பலமான சித்திர சபையைக் கட்டியும், பசுத்தொழுக்கள் அமைத்தும், மற்றும் வேண்டும் நல்ல திருப்பணிகளெல்லாம் கட்டியும் அந்த நாளிலே தர்மக்களஞ்சியம் கட்டும் அனந்த பத்மநாபன் என்பவன் விட்ட கட்டளைப் பற்றுகளிலெல்லாம் பறவைகள் வந்து இறங்கி மேய்கின்றனவே. (4)*

**மன்னன் கிளுவையிற் சின்னணஞ் சேந்த்ரன்**
**வடகரை வீட்டுக்கு மந்திரி யாகவும்**
**செந்நெல் மருதூர்க்கு நாயக மாகவும்**
**தென்காசி ஊருக்குத் தாயக மாகவும்**
**தன்னை வளர்க்கின்ற குற்றால நாதர்**
**தலத்தை வளர்க்கின்ற தானிக னாகவும்**
**நன்னகர்க் குற்றாலத் தந்தாதி சொன்னவன்**
**நள்ளார்தொழும்பிச்சைப் பிள்ளை திருத்தெல்லாம்(மே)**
**நன்னகர் ஊர்கட்டிச் சாலை மடங்கட்டி**
**நாயகர் கோவிற் கொலுமண்ட பங்கட்டித்**
**தென்ன மரம்பர மானந்தத் தோப்பிட்டுத்**
**தெப்பக் குளங்கட்டித் தேர்மண்ட பங்கட்டிப்**
**பன்னுந் திரிகூடத் தம்பலங் கட்டிப்**
**பசுப்பிரை கோடி திருப்பணி யுங்கட்டி**
**அந்நாளில் தர்மக் களஞ்சியம் கட்டும்**
**அனந்த பத்மநாபன் கட்டளைப் பற்றெல்லாம் (மே)**

*தன் தந்தையான பிச்சைப் பிள்ளையவர்கள் முன்னே கட்டிய அம்பலத்துக்கும், தருமத்துக்கும் நிலைக்கண்ணாடி*

*போலவே விளங்கியவன் மன்னன் வயித்தியநாதன். எம் தந்தையாராகிய குற்றாலநாதர் கோவிலின் வாசலிலே பிள்ளையார் செய்வித்தவன் அவன். இரண்டு குறிஞ்சிப் படித்துறைகளையும் கட்டுவித்தவன். பூமாலைகள் அணிந்த தோள்களையுடைய இராக்கதப் பெருமாள் பிள்ளை குற்றாலநாத பிள்ளை ஆகியவர்களுக்கு மூத்த சகோதரன் அவன். எவராலும் வணக்கம் செலுத்தும் தகுதியுடைய சங்கு முத்துப்பிள்ளையின் மைத்துனன். அவனுடைய வயல்களில் எல்லாம் பறவைகள் வந்து மேய்கின்றனவே ஐயனே!*

*யாவர் மேலும் வருகின்ற துன்பத்தையும் போக்கு பவன்; அடங்காதவர்களுடைய குறும்புகளை எல்லாம் அடக்கி மக்களைக் காப்பவன்; தென்காசி ஊரிலே உயர்ந்த மனுநீதியினை நிலைநிறுத்தியவன்; தன்னை அடியவனாக உடையவரான குற்றாலநாதருக்குப் பூசை நைவேத்தியங் களும், தேர்மேல் திருநாளும், தெப்பத் திருநாளும், சித்திர மண்டபம், சத்திரம், சாலைகளும் மற்றும் பலவும் உலகத்திலே வளம்பெற அமைத்த அனந்த பத்மநாபனின் குமாரனான வயித்திய நாதனின் வயல்களில் எல்லாம் பறவைகள் வந்து மேய்கின்றனவே, ஐயனே!*

**தந்தைமுன் கட்டின அம்பலத் துக்கும்**
**தருமத் துக்கும்நிலைக் கண்ணாடி போலவே**
**எந்தையார் வாசலிற் பிள்ளையார் செய்வித்து**
**இரண்டு குறிஞ்சிப் படித்துறை யுஞ்செய்த**
**கொந்தார் புயத்தான் இராக்கதப் பெருமாள்**
**குற்றால நாதன்முன் உற்ற சகோதரன்**
**வந்தனை சேர்சங்கு முத்துதன் மைத்துனன்**
**மன்னன்வயித்திய நாதன்திருத் தெல்லாம் (மே)**

**ஆர்மேல் வருகின்ற துன்பமும் நீக்கி**
**அடங்கார் குறும்பும் அடக்கியே தென்காசி**
**ஊர்மேல் உயர்ந்த மனுநீதி நாட்டி**
**உடையவர் குற்றாலர் பூசைநை வேத்தியம்**

**தேர்மேல் திருநாளும் தெப்பத் திருநாளும்**
**சித்திர மண்டபம் சத்திரம் சாலையும்**
**பார்மேல் வளஞ்செய் அனந்த பத்மநாபன்**
**பாலன்வயித்திய நாதன் திருத்தெல்லாம் (மே)**

*ஆறை அழகப்ப முதலியார் என்னும் பூபாலனின் கட்டளைகள், சிவநேசனாகிய திருமலைக் கொழுந்துப் பிள்ளையின் கட்டளைகள், நாறும் பூநாதன், குற்றால நாதன், சங்குப் பிள்ளை முதலியோரின் கட்டளைகள், நம்முடைய பகைவர்களுக்கு எல்லாம் சிங்கம் போன்றவனாகிய நரபாலனின் கட்டளைகள், ஆற்றல் மிகுந்த பால்வண்ணச் சங்கு என்பவனின் கட்டளைகள், மிக்க சிறப்புடைய ஓமலூர்க் கிருஷ்ணன் என்னும் வியாபாரியின் கட்டளைகள், பெருமையுடைய பண்பை நகரினனான சங்குமுத்துவினுடைய கட்டளைகள் ஆகிய நிலங்களில் எல்லாம் பறவைகள் வந்திறங்கி மேய்கின்றனவே.*

*ஸ்தானிகள் சர்க்கரைப் பண்டாரம் என்று சொல்லப் படும் இறைவனுக்குத் தணியாத அன்புடன் பணிவிடைகள் செய்து மேன்மை பெறுஞ் சுந்தரத் தோழனின் கட்டளை; சிறப்புமிக்க கருவைப்பதி ராமநாயகன், உலகமெல்லாம் புகழும் தாகந்தீர்த்தான், நல்லூரிலேயுள்ள சங்கரமூர்த்திப் பிள்ளை ஆகியவரின் கட்டளைகள்; அடியவரான சடைத் தம்பிரான் பிச்சை எடுத்து வாங்கிவிட்ட கட்டளைகள்; அப்பால், மலைநாட்டார் விட்ட கட்டளைகள் ஆகிய நிலங்களிலெல்லாம் பறவைகள் இறங்கி மேய்கின்றனவே.*

**ஆறை அழகப்ப பூபாலன் கட்டளை**
**அன்பன் திருமலைக் கொழுந்துதன் கட்டளை**
**நாறும்பூக் குற்றாலச் சங்குதன் கட்டளை**
**நங்களொல் லாரரி நரபாலன் கட்டளை**
**வீறுசேர் பால்வண்ணச் சங்குதன் கட்டளை**
**மிக்கான ஓமலூர்க் கிருஷ்ணன் வணிகேசன்**
**பேறுடைப் பம்பை வருசங்கு முத்துதன்**
**பேரான கட்டளைச் சீரான பற்றெல்லாம் (மே)**

தானிகன் சர்க்கரைப் பண்டாரம் என்னும்
தணியாத காதற் பணிவிடை செய்கின்ற
மேன்மை பெருஞ்சுந் தரத்தோழன் கட்டளை
மிக்க கருவைப் பதிராம நாயகன்
நானில மும்புகழ் தாகந்தீர்த் தானுடன்
நல்லூர் வருசங் கரமூர்த்தி கட்டளை
ஆன சடைத்தம்பி ரான்பிச்சைக் கட்டளை
அப்பால் மலைநாட்டார் கட்டளைப் பற்றெல்லாம். (மே)

## 13. சிங்கியை நினைந்தான்!

*கண்டக சேதனன் என்பவன் ஒரு செட்டி. அவனுடைய வேண்டுதலுக்காக இரக்கங் கொண்டு அவனுடைய துயரத்தைத் தீர்த்தருளியவர் குற்றாலநாதர். அவருடைய மலைச்சாரலிலே, நெத்திச் சுட்டிக்கு ஒத்த அழகுடன் விளங்கும் நெற்றியினையுடைய அழகியாள் என் சிங்கி. அவளுடைய கொங்கைகளின் மேல் முட்டிக் கிடந்து கொஞ்சி, முத்தங்களிட்டுச் சேர்ந்து, நன்றாகக் கட்டிக் கிடப்பதற்கு, அவளுடைய பிரியா முலைக்கச்சாக நான் கிடக்கப் பெற்றேனில்லையே!*

### கொச்சகக் கலிப்பா

**செட்டிக் கிரங்கிவினை தீர்த்தவர்குற் றாலர்வெற்பிற்
சுட்டிக் கிணங்குநுதற் சுந்தரியாள் கொங்கையின்மேல்
முட்டிக் கிடந்து கொஞ்சி முத்தாடிக் கூடிநன்றாய்க்
கட்டிக் கிடக்க முலைக் கச்சாய்க் கிடந்திலனே.**

## 14. கண்ணி கொண்டு வா!

*அடே குளுவா! கண்ணியை இங்கே எடுத்துக் கொண்டு வாடா! கண்ணியை எடுத்துக்கொண்டு வாடா! நம் தலைவராகிய குற்றாலநாதரின் கார்மேகங்கள் நிறைந்துள்ள திரிகூடமலைச் சாரலிலே, நாம் பண்ணிய புண்ணியங் களுக்கான பலன் எல்லாம் ஒருமிக்க வந்து வாய்த்தன போலே, பறவைகள் எல்லாம் பரவி இரைகளை மேய்ந்து கொண்டிருக்*

*கின்றன. இவற்றைப் பிடிக்கக் கண்ணியை எடுத்துக் கொண்டு வாடா.*

*பெருமையுடையவர்கள் பலரும் குழுமியிருக்கின்ற மதுரையிலே, பாண்டிய மன்னனானவன் தன்னுடைய மந்திரியாரின் கையிலே முன்னதாகப் பணத்தையெல்லாம் கொடுத்துத் தான் ஆசைப்பட்டுக் கைக்கொண்ட கொக்குகள் அவனுக்குத் தக்கவில்லை. அவற்றை நரி கொண்டு போய்விட்டது. கானவர்களின் வேடத்தை இழிவானது என்று எண்ணி விடாதே. முன்னாளிலே கருமுகில் வண்ணனாகிய திருமாலும் காக்கையைக் கைப்பற்றினான். முன்னாளிலே சூட்டிக் கொண்ட கொக்கின் இறகுகள் இன்னும் விடைமேல் இருப்பவரின் சடைமேல் இருப்பதையும் அறிவாய். அதனால்! அவற்றைப் பிடிக்கக் கண்ணியை எடுத்துக் கொண்டு வாடா!*

**இராகம் - கல்யாணி) (தாளம் - சாப்பு**

**பல்லவி**

**கண்ணிகொண்டு வாடா - குளுவா**
**கண்ணி கொண்டு வாடா!**

**அனுபல்லவி**

**கண்ணி கொண்டு வாடா பண்ணவர் குற்றாலர்**
**காரர்திரிகூடச் சாரலி லேவந்து**
**பண்ணிய புண்ணியம் எய்தினாற் போலப்**
**பறவைக ளெல்லாம் பரந்தேறி மேயுது (கண்ணி)**

**சரணங்கள்**

**மானவர்சூழும் மதுரையிற் பாண்டியன்**
**மந்திரியார் கையில் முந்திப் பணம்போட்டுத்**
**தானாசைப் பட்டுமுன் கொண்ட கொக்கெல்லாம்**
**தரிகொண்டு தில்லை நரிகொண்டு போச்சுது**
**கானவர் வேடத்தை ஈனமென் றெண்ணாதே**
**காக்கை படுத்தான் கருமுகில் வண்ணனும்**
**மேனாட் படுத்திட்ட கொக்கிற கின்னும்**
**விடைமேல் இருப்பார்சடைமேல் இருக்குது (கண்ணி)**

*(மானவர் - பெருமையுள்ளவர். கொக்கெல்லாம் தரிகொண்டு தில்லை நரிகொண்டு போச்சுது - குதிரைகள் எல்லாம் தங்கியிருக்கவில்லை; நரி உருவங்கொண்டு ஓடிப் போய்விட்டன எனப் பொருள் கொள்ளலாம். அல்லது அவன் வாங்கிய கொக்குகள் அவனுக்குத் தரிகொள்ளவில்லை; அவற்றை நரிகள் திருடிக் கொண்டு போய்விட்டன என்றும் சொல்லலாம். இரு பொருள் நயம் அறிக. காக்கை படுத்தல் - காவல் தொழில் பூணல்; அல்லது காகாசுரனின் கண்களைப் பறித்தல்.)*

முற்காலத்திலே பிடித்த பெரிய பெருச்சாளியை மூத்த நயினாரான பிள்ளையார்ப் பெருமான் மிகத் தந்திரமாகக் கொண்டு போய்விட்டார். அவருக்குப் பின்னாக வந்தவரான அவர் தம்பியாரோ ஆடும் இயல்புடைய மயிலையும் தம்முடைய பிள்ளைக் குறும்பினாலே பிடித்துக்கொண்டு போய் விட்டார். சொல்லுதற்கும் அருமையுயைட அன்னப் பறவையினை நன்னகரீசரான குற்றாலநாதரானவர் தமக்கு உண்கலம் தந்திட்ட பார்ப்பானாகிய பிரமனுக்குத் தந்து விட்டார். அழகான செம்பருந்தைக் கள்வனாகிய திருமால் கொண்டு போய்விட்டான். அதனால் நாம் வேட்டை யாடுவதும் தவறல்ல. வக்காவும் நாரையும், கொக்கும் பிடிப்பதற்கு நீ கண்ணியை எடுத்துக் கொண்டு ஓடிவாடா குளுவா!

வடிவழகிலே அனைவரையும் மிஞ்சும் இலஞ்சி நகரத்துக் குறத்தியை மணந்து கொண்ட செவ்வேளாகிய குறவன் முதன்முதல் வேட்டைக்குப் போனான். அந்த நாளிலே ஆறு நாள்களுக்குப் பின்னர்தான் அவனுக்கு ஒரு கொக்கு அகப்பட்டது. அகப்பட்ட அந்தக் கொக்கை அவித்து ஒரு சட்டியிலே குழம்பாக வைத்தான். அதனை வேதப் பிராமணர்கள் எல்லோரும் உண்டனர். சைவர்கள் எல்லோரும் உண்டனர். தவப்பேறு உடையவர்களான முனிவர்களும் அதனை ஏற்றுக் கொண்டார்கள். அதனால் வேட்டையாடுவதற்கு எவ்வித மறு பேச்சும் பேசாமல் கொக்குகளைப் பிடிப்பதற்குக் கண்ணியை எடுத்துக் கொண்டு வாடா குளுவா!

முன்னாட் படுத்த பழம்பெருச் சாளியை
மூத்த நயினார் மொடுவாய்க் கொடுபோனார்
பின்னான தம்பியார் ஆடும் மயிலையும்
பிள்ளைக் குறும்பாற் பிடித்துக்கொண் டேகினார்
பன்னரும் அன்னத்தை நன்னகர் ஈசர்
பரிகலம் ஈந்திடும் பார்ப்பானுக் கீந்தனர்
வன்னப் பருந்தொரு கள்வன் கொடுபோனான்
வக்காவும் நாரையும் கொக்கும் படுக்கவே (கண்ணி)

மீறும் இலஞ்சிக் குறத்தியைக் கொண்டசெவ்
வேட்குற வன்முதல் வேட்டைக்குப் போனநாள்
ஆறுநாட் கூடி ஒருகொக்குப் பட்டது
அகப்பட்ட கொக்கை அவித்தொரு சட்டியில்
சாறாக வைத்தபின் வேதப் பிராமணர்
தாமுங் கொண் டார்சைவர் தாமுங் கொண்டார்தவப்
பேறா முனிவரும் ஏற்றுக்கொண் டார்இதைப்
பிக்குச் சொல்லாமலே கொக்குப் படுக்கவே (கண்ணி)

*(இரண்டாவது பாடலுள் வருவன வெல்லாம் கடவுளர் தமக்கு வாகனமாகக்கொண்ட பறவைகளையும், பெருச்சாளி யையும் பற்றியவை. அவைபற்றிய விவரங்களைப் புராணங்கள் கூறும். அடுத்து முருகன் சூரனாகிய மாமரத்தைத் தான் படையெடுத்துச் சென்ற ஆறாவது நாளிலே வென்றான். அது 'சட்டித் திருநாள்' எனப்படும். சாறு - திருவிழா. அதனை அனைவரும் கொண்டாடுவர். இதனை நயம்பட உரைத்தனர்.)*

## 15. பூனைபோல வந்தான்

*தாருகா வனத்து முனிவர்கள் தம்மீது ஏவிட்ட யானையைத் தாம் குத்திச் சாய்த்த ஆற்றல் உடையவர் திருக்குற்றால நாதர். அவருடைய பண்ணைகளில் எல்லாம் உள்ள இறால்மீன்களைக் கொத்திக் கொண்டு அவற்றை விழுங்க முடியாமல் முக்கிக்கொண்டும் விக்கிக் கொண்டும் இருக்கின்றன கொக்குகள். அவற்றைப் பிடிப்பதற்குரிய வேடர் கூட்டத்திற்குத் தலைமை பெற்ற வாள் வீச்சிலே வல்லவனாகிய சிங்கனிடத்திற்குக் கண்ணியை எடுத்துக்*

கொண்டு பூனையைக் குத்திப் பிடிப்பதிலே வல்லவனான நூவன் பெரிய வெருகுப் பூனையைப் போலே மெல்ல மெல்லப் பதுங்கிப் பதுங்கி வந்து கொண்டிருந்தான்.

**கொச்சகக் கலிப்பா**

**ஆனைகுத்திச் சாய்த்ததிற லாளர்திருக் குற்றாலர்**
**கூனிகொத்தி முக்கிவிக்கிக் கொக்கிருக்கும் பண்ணை எல்லாம்**
**சேனைபெற்ற வாட்காரச் சிங்கனுக்குக் கண்ணிகொண்டு**
**பூனைகுத்தி நூவன்முழுப் பூனைபோல் வந்தானே.**

*(கூனி - இறால் மீன். சேனை பெறுதல் - தலைமை பெறுதல், முழுப்பூனை - பெரிய காட்டுப்பூனை; வெருகுப் பூனை.)*

## 16. கண்ணிகுத்தும் வகை

*அடே குளுவா! கலப்பாக இருக்கும் கண்ணிகளை நெருக்கிக் கீழே குத்தி வைத்தோமானால் காக்கைகளும் கூட அகப்பட்டுக் கொள்ளும். மேல் நோக்கியிருக்கும் கண்ணி களைக் கவிழ்த்துத் தரையிலே குத்தினோமானால் வக்காவும் அதிலே அகப்பட்டுக் கொள்ளும். உலைந்து போயிருக்கும் கண்ணியை - இருக்கிக் குத்தினோமானால் உள்ளானும் சிக்கிக்கொள்ளும். குலைந்த கண்ணியை முதலிலே திருத்திக்கொண்டு இக் குற்றாலமலைமேல் குத்தடா குளுவா!*

**இராகம் - காம்போதி** **தாளம் -சாப்பு**

**கண்ணிகள்**

**கலந்த கண்ணியை நெருக்கிக் குத்தினால்**
**காக்கையும்ப டுமே - குளுவா**
**காக்கையும் படுமே** 1

**மலர்ந்த கண்ணியைக் கவிழ்த்துக் குத்தினால்**
**வக்காவும் படுமே - குளுவா**
**வக்காவும் படுமே** 2

**உலைந்த கண்ணியை இறுக்கிக் குத்தினால்**
**உள்ளானும் படுமே - குளுவா**
**உள்ளானும் படுமே.** 3

குலைந்த கண்ணியைத் திருத்திக் குத்தடா
குற்றால மலைமேல் - குளுவா
குற்றால மலைமேல். 4

*(கண்ணி குத்துதல் - கண்ணியை வசமாகப் பூமியிலே பதித்து வைத்தல். அதற்குப் பல முளைகளை அடித்து வைப்பது வழக்கம்.)*

## 17. சிங்கியை நினைத்தல்

*தேன் சொரிந்து கொண்டிருக்கும் கொன்றைப் பூவாலான அழகிய தாரினை அணிந்த தலைவரான திரிகூடநாதருக்கு உரிமையுடைய மலைச் சாரலிலே இளம் பிறையைப் போன்ற ஒளி உடைய நெற்றியை உடைய வளான என் சிங்கியானவள் என்னுடன் பேசாத ஆற்றாமை யானது அடங்குமாறு, துள்ளி, அவள் மடிமேலே ஏறியிருந்து அவள் தோளின்மேல் ஏறி, அவள் பேசும் கிளி மொழியைக் கேட்டு இன்புறுவதற்கு நானும் ஒரு கிளியாகவாவது ஆயினேன் இல்லையே? என்ன செய்வேன்!*

**கொச்சகக் கலிப்பா**

**கள்ளுலவு கொன்றையந்தார்க் கர்த்தர்திரி கூடவெற்பிற்**
**பிள்ளைமதி வாள்நுதலாள் பேசாத வீறடங்கத்**
**துள்ளிமடி மேலிருந்து தோளின்மேல் ஏறியவள்**
**கிள்ளைமொழி கேட்கவொரு கிள்ளையா னேனிலையே.**

*(பிள்ளைமதி - மூன்றாம் பிறை. வீறு - ஆற்றாமை. கிள்ளைமொழி - குதலைச் சொற்கள்.)*

## 18. உரத்துப் பேசாதிரு!

*உரத்துப் பேசாதே, ஐயே! கொஞ்சம் பொறு. உரத்துப் பேசாதே அப்பனே! நம்முடைய இறைவர் குற்றாலநாதர். அவருடைய அருள் பெற்ற வயல்களிலே வீழும் பறவை களைப் பிடிக்கையிலே புதிதாக வந்து வாய்த்த உன்னுடைய சத்தத்தைக் கேட்டதனால் அல்லவோ கண்ணிக்கருகே வந்த குருவிகள் எல்லாம் கலைந்து ஓடிப்போகின்றன. அதனால் சத்தம் போடாதே, ஐயனே!*

*இதற்கு முன்வரை ஏறிவராத அளவுக்கு மீன்களும் ஏறி வந்து கொண்டிருக்கின்றன. எல்லாத் திசைகளிலும் உள்ள பறவைகளும் அவற்றை உண்ண ஓடிவருகின்றன. நூறாறு கண்ணிகளைப் பெற்ற பேறாகக் கருதிக் குத்திக்கொண்டு நூவனும் நானும் காத்திருந்தோம். உனக்கு இனிப் பயன் படும்படியான சூளை மருந்தாகிலும், பிறரைப் பேசா மலிருக்கச் செய்யும் வாடைப் பொடியாகிலும், கிடைக்கும் பறவைகளிலே பாதிப் பங்காகிலும், ஒரு கொக்காகிலும், நரிக்கொம்பாகிலும் தருகின்றேன். வம்புகள் பேசிக்கொண்டு இங்கே சத்தம் போடாதே அப்பனே!*

**இராகம் - கல்யாணி** **தாளம் - ஆதி**

**பல்லவி**

கெம்பாறடையே பொறு பொறு
கெம்பா றடையே!

**அனுபல்லவி**

கெம்பாறடையே! நம்பர் குற்றாலர்
கிருபைப் புறவில் பறவை படுக்கையில்
வம்பாக வந்தவன் சத்தத்தைக் கேட்டல்லோ
வந்த குருவி கலைந்தோடிப் போகுது (கெம்)

**சரணங்கள்**

ஏறாத மீன்களும் ஏறி வருகுது
எத்திசைப்பட்ட குருகும் வருகுது
நூறாறு கண்ணியைப் பேறாகக் குத்தியே
நூவனும் நானும் இருந்தோம் உனக்கினிப்
பேறான சூளை மருந்தா கிலும்பிறர்
பேசாமல் வாடைப் பொடியா கிலும்அரைக்
கூறா கிலும்ஒரு கொக்கா கிலும்நரிக்
கொம்பா கிலுந்தாரேன் வம்புகள் பேசியே (கெம்)

*(வம்பாக வந்த - புதிதாக வந்த என்றுமாம். நூறாறு கண்ணி - பல கண்ணிகள். சூளை மருந்து - வேசையரை வசியப்படுத்தும் வசிய மருந்து. வாடைப்பொடி - மயக்கும் மணப்பொடி.)*

*கூந்தலுக்கு மண எண்ணெய்களைப் பூசி நல்ல உடைகளை உடுத்துக்கொண்டு கைகளிலே வளையல்கள் இட்டு, நெற்றியிலே பொட்டிட்டு கண்ணுக்கு மையிட்டு மேனியிலே பொன் அணிகள் பலவும் பூட்டிக்கொண்டு பூவும் அணிந்து ஆடவர்களை மயக்கிக் காசு பறிக்கின்ற வேசையர்களின் அலங்காரமாகிய கண்ணிக்குள்ளே சிக்கிக் கொள்ளும் காமுர்களைப் போலவும் ஆசாரங் கெட்ட துலுக்கன் ஒருவனின் குதிரையானது போன போது அடியொட்டுப் பாறையிலே பட்ட அதன் குளம்புகள் அப்படியே ஒட்டிக் கொண்டதைப் போலவும் எல்லாத் தேசங்களிலும் உள்ள கொக்குகள் எல்லாம் நம் கண்ணிக்குள்ளே வந்து வந்து சிக்கிக்கொண்டதைப் பார்! நமக்கு இன்று கறிகள் நிறைய வாய்க்கிறதையும் பார். அதனால் இனிச் சத்தம் போடாதே அப்பனே!*

*ஆலாவும் கொக்கும் கண்ணிக்கு அருகாமையிலே வருகுது. ஆசாரக் கள்ளர்களைப் போல நாரையானது கபடமாகத் திரிந்து கொண்டிருக்கிறது. வேல்போன்ற கண்களையுடைய வேசையர்களின் மேற்கொண்ட ஆசையினால் கீழும் மேலுமாகத் திரிந்து கொண்டிருக்கும் வேடிக்கையான மனிதர்களைப் போல உன் கால்களால் சுற்றித் திரிந்து திரிந்து எம் கண்ணிக்கு உள்ளாக வரும் பறவைகளைக் கலைந்து போகச் செய்யாதே. பாலும் நெய்யும் ஆறு போல் ஓடிக்கொண்டிருக்கும் பாற்பாயாசத்திலே பல்லை உடைப்பதற்கு ஒரு சிறு கல் வந்து அகப்பட்டாற் போலப் பேசுகின்றாய். இனிச் சத்தம் போடாதே அப்பனே!*

**பூசிஉடுத்து முடித்து வளையிட்டுப்**
**பொட்டிட்டு மையிட்டுப் பொன்னிட்டுப் பூவிட்டுக்**
**காசு பறித்திடும் வேசையர் ஆசாரக்**
**கண்ணிக்குள் ளேபடும் காமுகர் போலவும்**
**ஆசார ஈனத் துலுக்கன் குதிரை**
**அடியொட்டுப் பாறை அடியொட்டி னாற்போலும்**
**தேசத்துக் கொக்கெல்லாம் கண்ணிக்குள் ளேவந்து**
**சிக்குது பார்கறி தக்குது பார்இனி (கெம்)**

ஆலாவும் கொக்கும் அருகே வருகுது
ஆசாரக் கள்ளர்போல் நாரை திரியுது
வேலான கண்ணியர் ஆசையி னாற்கீழும்
மேலுந் திரிந்திடும் வேடிக்கைக் காரர்போல்
காலால் திரிந்து திரிந்து திரிந்தெங்கள்
கண்ணிக்குள் ளாகும் பறவையைப் போகட்டுப்
பாலாறு நெய்யாறு பாய்கின்ற ஓட்டத்திற்
பல்லாடிக் கச்சிறு கல்லகப் பட்டாற்போல் (கெம்)

(ஒரு துலுக்கன் குதிரைமீது வந்து அதன் குளம்புகள் பாறையிலே ஒட்டிக்கொண்டதையும், அதனால் அந்தப் பாறையே அடியோட்டுப் பாறை என வழங்கும் எனவும் கூறுவர். போகட்டு - போகவிட்டு.)

## 19. நூவனை ஏவினான்

எம் குற்றாலநாதரின் தேவியாகிய குழல்வாய்மொழிப் பெண் அம்மைக்குரிய நாச்சியார்கால், செண்பகக்கால், அழகான மதிசூடினார்கால், காவிவயல் வெண்ணமடை, தட்டான் பற்று, கள்ளி குளம், அழகர் பள்ளம், கூத்தன் மூலை ஆகிய நீர்நிலைகள் தோறும் நின்று சிங்கன், பறவை வேட்டையாடினான். அதன்பின் வடவருவி ஆற்றுக்கால், வடகால், தென்கால், கோவில் விளையாட்டம் ஆகிய இடங்களிலும் கண்ணி குத்திவிட்டு நூவனைக் கூவினான். அவற்றுள் அகப்பட்டிருக்கும் பறவைகளைப் பிடித்து வருமாறு அவனை ஏவினான்.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

தேவிகுழல் வாய்மொழிப் பெண்நாச்சி யார்கால்
செண்பகக்கால் திருந்தமதிசூடி னார்கால்
காவிவயல் வெண்ணமடை தட்டான் பற்றுக்
கள்ளிகுளம் அழகர்பள்ளம் கூத்தன்மூலை
வாவிதொறும் நின்றுசிங்கன் வேட்டை யாடி
வடவருவி ஆற்றுக்கால் வடகால் தென்கால்

**கோவில்விளை யாட்டமெங்கும் கண்ணி குத்திக்**
**கூவினான் நூவனைவிட் டேவி னானே.**

## 20. பறவைகள் மேய்தல்

*கல்விச் செழுமையிலே விளங்கும் தமிழுக்கு உரிமை யுடையவராக விளங்கும் திரிகூட நாதரின், அழகிய திருவடிகளைப் போற்றுபவன் செல்வப் பெருக்கிலே கடலை ஒப்பவன்; குற்றாலத்துச் சிவராமன் என்னும் பெயருடைய நம்பி; எம் கோமானாகிய அவன் இறைவழிபாட்டிலே வல்லமையுடையவனான மணியப் பட்டன்; நாளும் பெருமை வளர்ந்து கொண்டிருக்கும் முத்து நம்பி; பகைவரை வெல்லும் குற்றால நம்பி ஆகிய இவர்கள் வயல்களிலெல்லாம் மீன்கொத்திப் பறவைகளின் கூட்டம்; அப்பனே!*

*சீர்மையாளனாகிய பிச்சைப் பிள்ளை கோவில் திருப்பணிக்காக விட்ட வளமையுடைய புதுக்குளம், கொடையாளனாகிய சங்கு முத்து என்பவன் திருமாலைக் காக விட்ட காங்கேயன் கட்டளை, மகாராசனாகிய தென்குடிசை வயித்தியநாதன் விட்ட புதுக்குளம் ஆகிய வற்றுள் எல்லாம் ஏராளமான பறவைகளும், வெண்மை யான அன்னங்களும் தாராவும் வந்து மேய்கின்றன; அப்பனே!*

*தானக் கணக்குடன், சீபண்டாரம். தன் பக்தர் கணக்கும், மேலானவராகிய குற்றால நாதரின் திருவாசல் மாடத்து நல்ல பத்தியமும், நானிலஞ் சூழும் குடிசை வைத்தியநாதன் என்னும் மக்களைக் காப்பவன் மிகவும் அபிமானம் வைத்த சிவராமனுக்காக விட்ட சம்பிரதிக் கணக்கும்,. ஆகிய வற்றுக்காக இட்ட நிலங்களிலும்,*

*வேத நாராயண வேள் என்பானின் குமாரன்; வெற்றி யுள்ள தொண்டை நாட்டை ஆள்பவன்; சீதரன் முத்து மன்னனுக்குரிய "விசாரணைக்குட் சேர்ந்ததான வயல்களி லெல்லாம் ஆசையுடன் கண்ணிவைத்துப் பறவைகளைப் பிடிப்பதற்குக் கங்கணம் கட்டி நின்றேன். ஏதோ ஒரு பறவை என்னைத் தொடர்ந்து வந்து கடிக்குதே அப்பனே!*

இராகம் - தர்பார் தாளம் -சாப்பு

**கண்ணிகள்**

கல்வித் தமிழ்க்குரியார் திரிகூடக்
கர்த்தர்பொற் றாள்பரவும்
செல்வக் கடலனையான் குற்றாலச்
சிவராம நம்பி எங்கோன்
வல்ல மணியபட்டன் பெருமை
வளர்சங்கு முத்து நம்பி
வெல்லுங்குற் றாலநம்பி புறவெல்லாம்
மீன்கொத்திக் கூட்டமையே. 1

சீராளன் பிச்சைப்பிள்ளை திருப்பணிச்
செல்வப் புதுக்குளமும்
காராளன் சங்குமுத்து திருத்தொடைக்
காங்கேயன் கட்டளையும்
மாராசன் தென்குடிசை வயித்திய
நாதன் புதுக்குளமும்
தாராள மானபுள்ளும் வெள்ளன்னமும்
தாராவும் மேயுதையே. 2

தானக் கணக்குடனே ஸ்ரீபண்டாரம்
தன்மபத் தர்கணக்கும்
வானவர் குற்றாலர் திருவாசல்
மாடநற் பத்தியமும்
நானிலஞ் சூழ்குடிசை வைத்திய
நாத நரபாலன்
தானபி மானம்வைத்த சிவராமன்
சம்பிர திக்கணக்கும் 3

வேதநா ராயணவேள் குமாரன்
விசைத்தொண்டை நாடாளன்
சீதரன் முத்துமன்னன் விசாரிப்புச்
சேர்ந்த புறவினெல்லாம்

காதலாய்க் கண்ணிவைத்துப் பறவைக்குக்
கங்கணங் கட்டி நின்றேன்
ஏதோ ஒரு பறவை தொடர்ந்துவந்
தென்னைக் கடிக்குதையோ! 4

*(ஏதோ ஒரு பறவை தொடர்ந்து வந்து கடிக்குது என்றது, அவன் சிங்கியைக் காணாது படும் காமவேதனையை மறை முகமாகக் கூறியது.)*

## 21. பிரேமை கொண்டான்

*உயிரினம் அனைத்துக்கும் காவலராக விளங்கும் குற்றால நாதரின் திரிகூட மலைச்சாரலிலே, சிங்கன் காமத்தால் மிகவும் கலங்கிவிட்டான். தன் அருகே வந்த நூவனைப் பழித்துப் பேசினான். அதன்பின் வேட்டைக் காட்டை ஒருமுறை நோக்கினான். அங்கே, ஆசை மிகுந்த காமவேட்டை ஆடுகின்ற ஆசையினாலே அன்னப் பேட்டினை ஓர் அன்னச் சேவலானது போய்ப் புணர்வதைக் கண்டான். கண்டதும் தன் சிங்கியின் மேல் மிகவும் பிரேமை கொண்டான்.*

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

காவலர்திரிகூடத்தில்
காமத்தால் கலங்கி வந்த
நூவனைப் பழித்துச் சிங்கன்
நோக்கிய வேட்டைக் காட்டில்
ஆவல்சேர் காம வேட்டை
ஆசையால் அன்னப் பேட்டைச்
சேவல்போய்ப் புணரக் கண்டான்
சிங்கிமேற் பிரமை கொண்டான்.

## 22. சிங்கன் புலம்புதல்

*கலவிக் காலத்தே எழுகின்ற எட்டு வகையான புட் குரல்களுள் ஒரு குரலைப் போலக் கூவுகின்ற புறாவே! எனது ஏகாந்தத்திற்கு உரியவளான சிங்கியை நோக்கிக் கூவாதது தான் என்ன கூவுதலோ? மணம் பொருந்திய கூந்தலுடை யாளின் சாயலைக் காட்டுகின்ற மயிலே! அவளுடைய சிறந்த*

*தாமரைமலர் போன்ற பாதங்களின் நடையழகை நீ காட்டாதது என்ன? அதனால் நீ காட்டுவதும் விகாரமே. வாயகன்ற குடத்தைப் போல் விளங்கும் பரந்த கொங்கைகளின் தோற்றத்தைக் காட்டும் சகோரமே! ¯ற்றுக் குளிர்ச்சியையும் வெம்மையையும் காட்டி விட்டால் எனக்கு உபகாரமாகுமே! என் கட்டித் திரவியமான சிங்கியின் கண்களைப் போலவே தோன்றும் செங்கழு நீர் மலர்களே! என் கண்ணிற் கண்ட. இடம் எல்லாம் அவளாகத் தோன்றுதே! நான் ஒரு பாவியேதான், என் செய்வேன்?*

**இராகம் - ஆகிரி** **தாளம் - சாப்பு**

**கண்ணிகள்**

**எட்டுக் குரலில் ஒருகுரல் கூவும்புறாவே! எனது**
**ஏகாந்தச் சிங்கியைக் குவாத தென்னகு லாவே?**
**மாட்டார் குழலிதன் சாயலைக் காட்டும யூரமே! அவள்**
**மாமலர்த் தாள்நடை காட்டாத தென்னவி காரமே**
**தட்டொத்த கும்பத் தடமுலை காட்டுஞ்ச கோரமே! சற்றுத்**
**தண்ணென்றும் வெச்சென்றும் காட்டிவிட் டாலுப காரமே!**
**கட்டித் திரவியம் கண்போலும் நன்னகர்க் காவியே கண்ணிற்**
**கண்டிடம் எல்லாம் அவளாகத் தோணுதே பாவியே.**

*(மயூரம் - மயில். மட்டு - மணம். சகோரம் - சகோரப்புள். அதன் கொண்டை முலைக்கு உவமானம். வெச்சென்று - வெம்மையாக. திரவியம் - செல்வம். காவி - செங்கழுநீர்.)*

## 23. பறவைகள் தப்பிப்போயின!

*செட்டிப்பற்றிலே கண்ணி வைத்தேன். என் சிங்கியின் நடையைப் போல நடந்து வந்த சாயலினால், பெட்டைக் குளத்திலே வந்து படிந்த அன்னப் பேட்டையே பார்த்துக் கொண்டிருந்தேன். கட்டப் பெற்றிருந்த என் கண்ணிகளை யெல்லாம் கொத்தி வெற்றிமுரசம் கொட்டிக்கொண்டு குருவிகள் எல்லாம் குற்றால நன்னகரை நோக்கிப் பறந்து போகின்றனவே! அப்பனே!*

**கொச்சகக் கலிப்பா**

செட்டிபற்றிற் கண்ணிவைத்துச் சிங்கிநடைச் சாயலினாற்
பெட்டை குளத்தில் அன்னப் பேடைநடை பார்த்திருந்தேன்
கட்டுற்ற நன்னகர்க்கென கண்ணியெலாம் கொத்தி வெற்றி
கொட்டிக் கொண்டையே குருவியெலாம் போயினுமே.

*(சிங்கன் இவ்வாறு சிங்கியின்மீது கொண்ட மோக வெறி மயங்கி நின்றுவிடப் பறவைகள் பலவும் கண்ணிகளைப் பிடுங்கிக் கொண்டு பறந்துபோய் விட்டன. அவை அப்படிப் போகக் கண்ட சிங்கன் இவ்வாறு புலம்புகின்றான்.)*

## 24. சிங்கன் சொல்லுதல்

*போகின்றன அப்பனே! பறவைகள் போகின்றன அப்பனே! உலகத்துக்கெல்லாம் ஒரே தலைவராகிய குற்றால நாதர், பொல்லாதவனான தக்கனின் யாகத்தை அழித்த அந்த நாளிலே, வாயிலே அடிபட்டும், உடலிலே இடிபட்டும், கால் உதை பட்டும் தேவர்களும் அரசர்களும் ஒருமித்து ஓடிப்போனதைப் போலப் பறவைகள் எல்லாம் தப்பிப் போகின்றன அப்பனே!*

*மேடையிலேயிருந்து ஒரு பஞ்சவர்ணக் கிளியானது, அதனை வைத்திருந்த பெண்ணின் கையினின்றும் தப்பி என் முன்பாகப் பறந்து வந்தது. அதனைத் தன் பேடை என்றே தவறாக நினைத்த ஆண்கிளி ஒன்றும் அதனைத் தொடர்ந்து வந்தது. அந்தச் சேவலுக்குப் பின் மற்றொரு சேவலும் அந்தப் பெண்கிளியைக் கூட விரும்பி வந்தது. கருதிவந்த இன்பம் இரண்டுக்கும் கிட்டாமல், அவை சுந்தோப சுந்தர்களைப் போலச் சண்டையிட்டன. அந்தச் சமயம் என்னிடத்திலே ஏற்பட்ட குழப்பத்திலே காடெல்லாம் பட்சிகளாகக் கூடிக் காட்டின் வளத்தைப் பாடுவனபோல இரைச்சலிட்டு, என் கண்ணியையும் தட்டிக்கொண்டு, என் கண்ணிலும் குட்டிவிட்டுப் போய்விட்டனவே அப்பனே!*

*ஆயிரங் கொக்குகளையாவது இன்றைக்குப் பிடிக்க வேண்டுமென்று நான் கண்ணியை வைத்தேன். அதன்பின்,*

*சற்று அப்பாலே போய், நான் ஒருமிப்பாக இருக்கையிலே, ஆயிரம் காகங்கள் ஆயிரம் கண்ணிக்குள்ளாகவும் வந்து சிக்கின. அவை தம் திட்டத்தை மறைத்துக்கொண்டு, செத்துக் கிடப்பன போலவே உடலை ஒடுக்கிக்கொண்டும் கிந்தன. அவை சிக்கியதைக் கண்ட நான் கண்ணிகளைக் கழற்றித் தரையிலே வைத்தேன். அதன்பின், மங்கையர்க் கரசியின் பொருட்டாகக் கூன்பாண்டியன் பஞ்சாட்சர மந்திரத்தை ஓதியதும், அவனுடைய பாவங்கள் எல்லாம் ஒருமிக்கப் பறந்து போனாற்போல, அகப்பட்ட அத்துணைப் பறவைகளும் கண்ணியுடன் பறந்துபோய் விட்டனவே அப்பனே! பறந்து போய் விட்டனவே!*

*தமக்கு ஆதரவான தூண்போன்றவர் என நம்பிவந்த அடைக்கலமாயிருந்தவர்களைச் சதிபண்ணித் தாம் வாழப்பார்க்கும் வஞ்சகரின் செல்வங்கள் அவர்களை விட்டு நீக்கிப் போவதைப் போலவும், நிறைந்த நீர்ப் பெருக்கினை யுடைய வடவருவியிலே நீராடியவரின் பாவங்கள் எல்லாம் கழுவப்படும் நீரிலே அழுக்குகள் கரைந்து போவது போல நீங்கிப் போவதைப் போவும், கும்பமுனியாகிய அகத்தி யருக்காகக் குற்றாலத்து மூர்த்தியானவர் சிவலிங்க ரூபமான காலத்திலே, இவ்வூரை விட்டே குதித்து ஓடிப்போன வைஷ்ணவர்களைப் போலவும், அம்பிகையைத் தம் ஒரு பாகத்தே உடையவரான திரிகூட நாதரின் அடியவர்கள் மேல்வந்த துன்பங்கள் விரைந்து நீங்கிப் போவது போலவும், பறவைகள் எல்லாம் பறந்து போய்விட்டனவே அப்பனே! பறந்துபோய் விட்டனவே!*

**இராகம் - முகாரி** **தாளம் - சாப்பு**

**பல்லவி**

**போயினும் ஐயே! பறவைகள்**
**போயினும் ஐயே!**

**அனுபல்லவி**

**போயினும் ஐயே! நாயகர் குற்றாலர்**
**பொல்லாத தக்கன் மகத்தை அழித்தநாள்**

வாயில் அடிபட்டு இடிபட்டு உதைபட்டு
வானவர் தானவர் போனது போலவே (போ)

**சரணங்கள்**

மேடையில் நின்றொரு பஞ்சவர் ணக்கிளி
மின்னார்கை தப்பிஎன் முன்னாக வந்தது
பேடைஎன் றேஅதைச் சேவல் தொடர்ந்தது
பின்னொரு சேவலும்கூடத் தொடர்ந்தது
சூடிய இன்பம் இரண்டுக்கும் எட்டாமல்
சுந்தோப சுந்தர்போல் வந்த கலகத்தில்
காடெல்லாம் பட்சியாகக் கூடி வளம்பாடிக்
கண்ணியும் தட்டியென் கண்ணிலும் குட்டியே (போ)

ஆயிரம் கொக்குக்குக் கண்ணியை வைத்துநான்
அப்பாலே போயொரு மிப்பாயிருக்கையில்
மாயிரும் காகங்கள் ஆயிரம் பட்டு
மறைத்து விறைத்துக் கிடப்பது போலவே
காயம் ஒடுங்கிக் கிடந்தது கண்டுநான்
கண்ணி கழற்றி நிலத்திலே வைத்தபின்
சேயிழை தன்பொருட் டாலேபஞ் சாக்கரம்
செபித்த மன்னவன் பாவம்போ னாற்போலப் (போ)

தம்பமென் றேநம்பி னோரைச் சதிபண்ணித்
தாம்வாழப் பார்ப்பவர் செல்வங்கள் போலவும்
பம்பும் வடபால் அருவியில் தோய்ந்தவர்
பாவம் கழுநீராய்ப் போவது போலவும்
கும்ப முனிக்குச் சிவமான காலம்
குதித்தோடிப் போன வயிணவர் போலவும்
அம்பிகை பாகர்திரிகூட நாதர்
அடியவர் மேல்வந்த துன்பங்கள் போலவும் (போ)

*(சுந்தோப சுந்தர்கள் - உடன்பிறந்தவர் தேவமங்கையான திலோத்தமையின் அழகிலே மோகமுற்று வெறிகொண்டு இருவரும் தம்முள் சண்டையிட்டு, அவளை அடையாமலேயே மாய்ந்தனர் என்று புராணம் கூறும். அதுபோலச் சேவல்கள்*

*இரண்டும் சண்டையிட்டனவாம். ஒருமிப்பாய் - ஒரே நினைவாய். தம்பம் - பற்றுக்கோடு; ஸ்தம்பம் என்ற வட சொல்லின் திரிபு. பம்பும் - நெருங்கும்.)*

## 25. நூவன் பழித்தல்

*(சிங்கன் அப்படி வேட்டையைக் கோட்டைவிட்டதைக் கண்ட நூவனுக்கு ஆத்திரம் வருகிறது. அவன் சிங்கனை இகழ்ந்து பேசுகின்றான்.)*

வருக்கைப் பலாவினடியிலே வீற்றிருப்பவரான குற்றாலநாதரின் திரிகூடச்சாரலிலே, தன் மாமியார் மகள் மேல் ஒரு கண்ணும், பருத்தியின்மேல் ஒரு கண்ணுமாகப் பருத்தி எடுப்பவனுடைய தன்மையைப் போல், நீயும் வேட்டையிலே கருத்தில்லாமல் அதனை இழந்து போனாய். நின் எண்ணமும் வேறாகிவிட்டாய். தாய்க்கு அறிவு கற்பித்த மகளைப்போல என்னை வேறு சிரித்து இகழ்ந்தாய். ஆனால் உன்னைக் கண்டு பலரும் சிரிக்கும்படி காமப்பேய் செய்து விட்டதடா, சிங்கா! செய்துவிட்டது!

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

**வருக்கையார் திரிகூடத்தில்**
**'மாமியார் மகள்மேற் கண்ணும்**
**பருத்திமேற் கையும், ஆன**
**பான்மைபோல் வேட்டை போனாய்**
**கருத்துவே றானாய் 'தாயைக்**
**கற்பித்த மகள்போல், என்னைச்**
**சிரித்தனை சிங்கா உன்னைச்**
**சிரித்தது காமப் பேயே.**

## 26. தேடுவாயே!

*கொன்றை மாலையணிந்தவரின் திரிகூடத்திலே காம மிகுதியினால் கெடுதல் தருகின்ற கள்ளைக் குடித்தவரைப் போலே அறிவு மயங்கி வீழ்ந்துவிட்டாய். நீ கொக்குப் பிடித்து வாழ்ந்தாய்! அடிக்கொரு நினைவு எதற்காகச் சிங்கா? ஆசைப்பேய் உன்னை எளிதிலே விடாது. செடிக்கு ஒரு*

*சுற்றாகச் சுற்றிச் சுற்றி வந்து உன்னுடைய சிங்கியை முதலிலே தேடுவாயாக அப்பனே!*

**கடுக்கையார் திரிகூ டத்திற்**
**காமத்தால் வாமக் கள்ளைக்**
**குடித்தவர் போலே வீழ்ந்தாய்**
**கொக்குநீ பிடித்து வாழ்ந்தாய்**
**அடிக்கொரு நினைவேன் சிங்கா**
**ஆசைப்பேய் உனைவி டாது**
**செடிக்கொரு வளையம் போட்டுச்**
**சிங்கியைத் தேடு வாயே.**

*(வாமக்கள் - புளித்த பழைய கள். கடுக்கை - கொன்றை மாலை. வாழ்ந்தாய் - அது உன்னால் இயலாது என்பது குறிப்பு.)*

## 27. நூவனைத் தேடச் சொல்லுதல்

*வேடுவிச்சியாகிய கள்ளியான அவள், 'ஒருநாள் கூடியிருக்கும் காலத்திலே, என்னை 'மெய்யில்லாதவன்' என்று பிணக்கத்தினால் சொன்னாள். அந்தப் பேச்சால் நானும் பிணங்கினேன். அதனால், உருவிலியாகிய மன்மதனும் என் மேல் பகை கொண்டான். என் மேல் மலரம்புகளைப் போடுவானானான். அதனால், நான் புறப்பட்டுத் தேடவும் சக்தியற்றவனானேன். நூவா! இத் திரிகூட மலை நாட்டிலே எங்கும் தேடி என் சிங்கியைக் கொண்டுவந்து எனக்குக் காட்டுவாயாக. அப்போதுதான் நான் பிழைப்பேன்.*

**வேடுவக் கள்ளி யோர்நாள்**
**மெய்யிலா தவனென் றென்னை**
**ஊடலில் சொன்ன பேச்சால்**
**உருவிலி பகைத்தான் என்மேல்**
**போடுவான் புஷ்ப பாணம்**
**புறப்பட மாட்டேன்நூவா**
**தேடிநீ திரிகூ டத்தில்**
**சிங்கியைக் காட்டு வாயே.**

*(என்னை மெய்யில்லாதவன் என்றாள். அதனால் உருவிலியாகிய காமன் என்னைப் பகைத்தான்! என்று சொல்லும் நயம் காண்க. மெய்யிலாதவன் - காமவேள்.)*

## 28. நூவன் மறுத்தல்

*அழகிய நெற்றிக் கண்ணினை உடையவரின் திரிகூடத் திலே அவளைப் போய் நீ அணைந்தால்தான் என்ன? நீங்கள் பிரிந்திருந்தால்தான் என்ன? நூவனுக்கு அதனால் ஏதாவது நட்டம் உண்டோ? எனக்கு ஏதற்கடா இந்தக் கங்காணம்? சிங்கா! உனக்கு அக்கறை உண்டானால் கொங்கணச் சிங்கியான உன் காதலியை என் முன்னாலே கூட்டிக் கொண்டுவா: அப்புறம் நான் அவளை உனக்குக் காட்டுகின்றேன்.*

**அங்கணர் திரிகூ டத்தில்**
**அவளைநீ அணைந்தால் என்ன**
**நுங்களில் பிரிந்தால் என்ன**
**நூவனுக் குண்டோநட்டம்**
**கங்கணம் எனக்கேன் சிங்கா**
**காசலை உனக்குண் டானால்**
**கொங்கணச் சிங்கி தன்னைக்**
**கூட்டிவா காட்டு வேனே.**

*(நட்டம் - நஷ்டம். கங்கணம் - கங்காணம்; மேல் விசாரிப்பு. காசலை - அக்கறை.)*

## 29. சிங்கன் தேடித் திரிதல்

*திருவண்ணாமலை, காஞ்சிபுரம், திருக்காளத்தி, சீகாழி, சிதம்பரம், திருவாரூர், காசி, குருநாடு, கேதாரம், கோல் கொண்டா, கோகரணம், செகநாதம், கும்பகோணம், அரியலூர், சீரங்கம், திருவானைக்கா ஆகிய இடங்களில் எல்லாம் போய்ச் சிங்கியை அலைந்து தேடினான் சிங்கன். பின் திருச்சிராப்பள்ளியையும் பார்த்துவிட்டு மதுரையிலும் தேடிவிட்டுச் சந்திர சூடரின் திரிகூடமலைக்கு வந்து சேர்ந்தான்.*

*அதன்பின், வில்லிப்புத்தூர், கருவை நல்லூர், புன்னைக் காவு, முருகனின் திருச்செந்தூர், குருகூர், சீவைகுந்தம், நெல்வேலி, சிங்கிகுளம், தேவநல்லூர், நிலைதருஞ்சிற்றூர், கன்னிவாழ் குமரி, திருவாங்கோடு, சொல்லுதற்கும் அரிய குறுங்கை, களக்காடு ஆகிய இடங்களில் எல்லாம் தேடிவிட்டுப் பழைமையான மருதூர், அத்தாள நல்லூர். செல்வர் இருக்கும் சிவசயிலம், பாபவிநாசம் ஆகிய இடங்களிலும் சென்று சிங்கியைத் தேடுவானானான்.*

**எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

**திருவண்ணா மலைகாஞ்சி திருக்காளத்தி**
**சீகாழி சிதம்பரம்தென் னாரூர் காசி**
**குருநாடு கேதாரம் கோலக் கொண்டை**
**கோகரணம் செகநாதம் கும்ப கோணம்**
**அரியலூர் சீரங்கம் திருவா னைக்கா**
**அடங்கலும்போய்ச் சிங்கிதனைத் தேடிச் சிங்கன்**
**வருசிராப் பள்டளிவிட்டு மதுரை தேடி**
**மதிகொண்டான் திரிகூடம் எதிர்கண் டானே.** 1

**வில்லிப்புத்தூர் கருவைநல்லூர் புன்னைக்காவு**
**வேள்திருச்செந் தூர்குருகூர் சீவை குந்தம்**
**நெய்வேலி சிங்கிகுளம் தேவ நல்லூர்**
**நிலைதருஞ்சிற் றூர்குமரி திருவாங் கோடு**
**சொல்லரிய குறுங்கைகளாக் காடு தேடித்**
**தொன்மருதூர் அத்தாள நல்லூர் தேடிச்**
**செல்வர்உறை சிவசயிலம் பாவ நாசம்**
**திரிகூடச் சிங்கிதனைத் தேடு வானே.** 2

*(தென்னாரூர் - திருவாரூர். கோலக் கொண்டை - கோல் கொண்டா. கருவை நல்லூர் - கரிவலம் வந்த நல்லூர். புன்னைக் காவு - சங்கர நயினார் கோவில். குருகூர் - ஆழ்வார் திருநகரி. திருவாங்கோடு - திருவிதாங்கோடு; திருவாங்கூர் நாடு. குறுங்கை - திருக்குறுங்குடி. களாக்காடு - களக்காடு. இவை எல்லாம் தேடியதாகப் புலவர் சொல்வது சிங்கனின் காமவாதை*

*மிகுதியைப் புலப்படுத்துவதற்காகும். திரிகூடத்திலே வேட்டையாடிய சிங்கன் அங்கே தேடிப் பார்க்காமல் பிறவிடங்களிலே எல்லாம் தேடிவிட்டுக் கடைசியிலேதான் திரிகூடத்திலே தேட வருகின்றான்.)*

## 30. காணாமல் வருந்துதல்!

மேடையாகிய குயிலுக்குக் கண்ணியை வைத்துவிட்டு நான் மாடப் புறாவுக்காகப் போனேன். மாடப் புறாவையும் குயிலையும் பிடித்துவிட்டேன், ஆனால், என் வேடிக்கைக் காரியான சிங்கியைத்தான் காண முடியாமல் தவிக்கிறேன்.

அழகிய மயிலுக்குக் கண்ணியை வைத்துவிட்டு ஆலாவைப் பிடிப்பதற்கு நான் சென்றேன். ஆலாவையும் அழகிய மயிலையும் பிடித்துவிட்டேன். ஆனால் நான் மோகங்கொண்ட சிங்கியைத்தான் காணாமல் தவிக்கிறேன்.

எனக்கு விருப்பமுள்ள பறவை வேட்டைக்குப் போய்க் காம வேட்டையான என் சிங்கியைத் தப்பிப் போகும்படி விட்டு விட்டேன். வவ்வாலைப் பிடிக்கப்போக அங்கே மரநாய் அகப்பட்ட கதையாக என் செயலும் ஆகிவிட்டதே!

இவ்வாறாகப் பெருகி வருகிற என் உள்ளத்தின் விரகதாபத்தை எப்படி நான் தீர்த்துக் கொள்வேன்? சிவந்த வாயிதழ்களையுடைய என் கரும்பை, என் ஆசைக் கொடியை என் சிங்கியைக் காண முடியவில்லையே!

**இராகம் - நீலாம்பரி** **தாளம் - ஆதி**

**கண்ணிகள்**

**பேடைக் குயிலுக்குக் கண்ணியை வைத்துநான்**
**மாடப்புறாவுக்குப் போனேன்**
**மாடப் புறாவும் குயிலும் படுத்தேன்**
**வேடிக்கைச் சிங்கியைக் காணேன். 1**

**கோல மயிலுக்குக் கண்ணியை வைத்துநான்**
**ஆலாப் படுக்கவே போனேன்**
**ஆலாவும் கோல மயிலும் படுத்தேன்**
**மாலான சிங்கியைக் காணேன். 2**

வெவ்வாப் பறவையின் வேட்டைக்குப் போய்க்காம
வேட்டையைத் தப்பிவிட்டேனே
'வவ்வால் பறக்க மரநாய் அகப்பட்ட'
வைபவம் ஆச்சுது தானே. 3

இவ்வாறு வந்தவென் நெஞ்சின் விரகத்தை
எவ்வாறு தீர்த்துக்கொள் வேனே
செவ்வாய்க் கரும்பை அநுராக வஞ்சியைச்
சிங்கியைக் காணுகி லேனே. 4

*(ஆலா-பறவை வகைகளுள் ஒன்று. வெவ்வா - விருப்பமுடன். வைபவம் - கதை நிகழ்ச்சி, ஆசைப் பெருக்கம்.)*

## 31. குற்றாலத்தில் வருதல்

*நல்ல இந்த உலகத்திலே உள்ளவர்கள் யாவரேனும் அவர்கள் இந்த நன்மைதரும் நகரமான குற்றால நகரத்திற்கு வந்தால் சிவப்பேறான பெறுவதற்கரிய பெரும் பேற்றினைப் பெற்றவர்கள் ஆவார்கள். இந்த நல்ல நகரத்தை விட்டால் பிரமலோகம் வரைக்குஞ் சென்றாலும் அவர்களுக்குப் பயன் உண்டாகுமோ? வற்றாத வட வருவியினையுடைய மலைச்சாரலைவிட்டு நீங்கிச் சென்று வடகாசி முதல் தென்குமரி வரையும் தேடியலைந்த சிங்கனும், தான் முன் செய்த தவத்தின் பயனால், குற்றால நகரத்திலே வந்து சேர்ந்தான்; சிங்கியைத் தேடலுமானான்.*

நற்றாலம் தன்னிலுள்ளோர்யாவ ரேனும்
நன்னகரத் தலத்தில்வந்து பெறுவார்பேறு
பெற்றார்தாம் நன்னகரத் தலத்தை விட்டால்
பிரமலோ கம்வரைக்கும் பேறுண் டாமோ
வற்றாத வடவருவிச் சாரல் நீங்கி
வடகாசி குமரிமட்டும் அலைந்த சிங்கன்
குற்றாலத் தலத்தின்முன்னே தவத்தால் வந்து
கூடினான் சிங்கிதனைத் தேடி னானே.

*(இது கவிக்கூற்று. நல்ல தாலம் - நல்ல உலகம். முன்னே தவம் - முற்பிறவிகளிலே செய்த தவம். கூடினான் - சேர்ந்தான்.)*

## 32. மீண்டும் புலம்புதல்

*(ஊடலால் பிரிந்த காலத்திலே, காதலர்கள் தாம் கூடியிருந்த காலத்து நிகழ்ந்த இன்ப சுகங்களையெல்லாம் எண்ணி எண்ணிப் பொருமுவது இயல்பு. அந்த நிலையிலே, தான் சிங்கியொடு கூடியிருந்தபோது நடந்த சம்பவங்களை எல்லாம் நினைத்து நினைத்துப் புலம்புகின்றான் சிங்கன்.)*

சிங்கியைக் காணேனே! என் ஆசைக்கு உரிய என் சிங்கியைக் காணேனே! என் சிங்கியைப் பசிய கிளிப் பேட்டினைப் போன்றவளை, சீர்மை பெருகிய குற்றால நாதரின் திருநாம வளத்தைப் பாடிய சங்கீதக் கடலை, இங்கிதம் அறிந்த பெண்மணியைச் சல்லாபத்துக்கு உகந்தவளை, உல்லாச மோகனச் சிங்கியைக் காணேனே!

முத்தாரந் தவழுகின்ற தன் தனங்களை மேற்சீலையினால் மூடி அசைத்துக் கொண்டே ஒரு சமயம் நின்றாள். அதை யானைக் கொம்புகள் என்று எண்ணி என்மேல் கோபத்தை வைத்திருந்த அவளுடைய கண்முன்னே சென்றேன். அந்தச் சுகக்காரி என்னுடைய கொஞ்சத்தனத்தை அறிந்து, தன் பருத்த கொங்கைகளை மூடியிருந்த துணியைத் திறந்துவிட்டாள். அதனைக் கண்ட இந்த பாவியேன் ஆவியையே அந்த நொடியில் மறந்து விட்டேன்!' என் ஆசை தீருமாறு, என் உள்ளம் கனிய என்னை மயக்கித் தழுவியணைத்துத் தன் சிருங்கார மோகனவலையிலே என்னை அவள் சிக்க வைத்துக் கொண்டாள். அந்தச் சிங்கியை இப்போது காணேனே!

பூவென்றிருக்கும் அவள் பாதங்களை வருடி வருடியும், புளகித்திருந்த அவள் கொங்கைகளை நெருடி நெருடியும், அம்புகளையொத்த அவள் கண்களுக்கு ஒப்பற்ற அஞ்சனமை யினைத் தீட்டியும் விட்டேன். என் வாயிலே எடுத்த வெற்றிலைச் சுருளைத் தன் வாயிதழ்களால் இறுக்கிப் பறித்தாள். 'வா' என்று சொல்லிக் கையிலிருந்த சுருளைக் கொடுத்தால், 'தா' என்று சொல்லி வாங்கமாட்டாள். அவள் மனக்குறிப்பினைப் பார்த்து நான் அவள் மேனியிலே நகக் குறிகள் பலவும் வைப்பேன். அதன்பின், 'ஆ' என்று ஒருமுறை தன் கால்களால் என்னை எட்டி உதைத்துத் தள்ளுவாள். அந்த

*உதையைப் பெறுவதற்கு என் பேய்மனம் இப்போதெல்லாம் கிடந்து கொதியாய்க் கொதிக்கிறதே!*

*மாலைகள் ஆடிக்கொண்டிருக்கும் குன்றிமணி மாலையினை ஒதுக்கி அவளுடைய பரந்த மார்பினை இறுக்கித் தழுவுவதற்கு நான் வந்தால், அவள் கச்சுப் பொருந்திய தன் கொங்கைகளுக்குச் சந்தனமும் பூசமாட்டாள். அதனை மறுத்து, நான் பூசினாலும் பூசக்கூடாது என்பாள். இவ்வாறு சீராகக் கூடி விளையாடி இப்படி எனக்குத் தீராத மையலைத் தந்த அந்தக் கொடுமைக்காரியைக் கருமேகங்கள் போல விளங்கும் கறையினையுடைய கழுத்தினரான குற்றாலநாதரின் மேலான நாட்டிலே இருக்கின்ற காரியக்காரியை ஆரியப் பாவை போன்றவளை என் சிங்கியைக் காணவில்லையே!*

**இராகம் - தோடி** **தாளம் - ஆதி**

### பல்லவி

**சிங்கியைக் காணேனே! என் வங்கணச்**
**சிங்கியைக் காணேனே!**

### அனுபல்லவி

**சிங்கியைக் காமப் பசுங்கிளிப் பேடையைச்**
**சீர்வளர் குற்றாலர் பேர்வளம் பாடிய**
**சங்கீத வாரியை இங்கித நாரியைச்**
**சல்லாபக் காரியை உல்லாச மோகனச் (சிங்கி)**

### சரணங்கள்

**ஆரத் தனத்தைப் படங்கொண்டு மூடி**
**அசைத்துநின் றாளதை யானைக்கொம் பென்றுநான்**
**கோரத்தை வைத்த விழிக்கெதிர் சென்றே னென்**
**கொஞ்சத் தனத்தை அறிந்து சுகக்காரி**
**பாரத் தனத்தைத் திறந்துவிட் டாள்கண்டு**
**பாவியேன் ஆவி மறந்துவிட் டேனுடன்**
**தீரக் கனிய மயக்கி முயக்கியே**
**சிங்கார மோகனம் சிங்கி கொண்டாளந்தச் (சிங்கி)**

பூவென்ற பாதம் வருடி வருடிப்
புளக முலையை நெருடி நெருடி
ஏவென்ற கண்ணிக்கோர் அஞ்சனம் தீட்டி
எடுத்த சுருளும் இதழால் இடுக்குவாள்
வாவென்று கைச்சுருள் தாவென்று வாங்காள்
மனக்குறி கண்டு நகக்குறி வைத்தபின்
ஆவென் றொருக்கால் இருக்கால் உதைப்பள்
அதுக்குக் கிடந்து கொதிக்குதென் பேய்மனம் (சிங்கி)
தாராடும் குன்றி வடத்தை ஒதுக்கித்
தடமார் பிறுகத் தழுவவந் தாலவள்
வாராடும் கொங்கைக்குச் சந்தனம் பூசாள்
மறுத்துநான் பூசினும் பூசலா காதென்பாள்
சீராடிக் கூடி விளையாடி இப்படித்
தீரா மயல்தந்த தீராமைக் காரியைக்
காராடும் கண்டர்தென் ஆரிய நாட்டுறை
காரியப் பூவையை ஆரியப் பாவையைச் (சிங்கி)

*(ஆரம் - முத்தாரம். படம் - மேற்சீலை. கோரம் - கோபத்தால் ஏற்பட்ட தன்மை. சுகக்காரி - இன்பந் தருபவள். பாரத்தனம் - பருத்த தனங்கள். கனிய - கனிவு எய்தும் படியாக. பூ வென்ற - பூவையும் தன் மென்மையினாலே வெற்றி கொண்ட. புளகம் - பூரிப்பு. சுருள் - தாம்பூலச் சுருள். தார் - மாலை. தடம் - அகன்ற.)*

## 33. அடையாளம் வினவுதல்

*சிங்கங்களை எல்லாம் ஒத்ததாயிருக்கின்ற ஆற்றலினை உடைய சிங்கனே! சங்கமெல்லாம் முத்துகளை ஈனுகின்ற வளத்தினையுடைய சங்கரராகிய திரிகூடநாதரின் மலைச்சாரலிலே, இன்பங்கள் எல்லாம் யாரடா அறிவார்கள்? உன் சிங்கிக்குரிய அங்க அடையாளங்கள் எவை என்று சொல்வாயாக. (நானும் தேடி வருகிறேன் என்பது குறிப்பு.)*

### கொச்சகக் கலிப்பா

சங்கமெலாம் முத்தீனும் சங்கர்திரி கூடவெற்பில்
பொங்கமெலாம் செய்யுமுங்கள் போகமெல்லாம் ஆரறிவார்

**சிங்கமெலாம் ஒத்ததுடிச் சிங்காஉன் சிங்கிதனக்**
**கங்கமெலாம் சொல்லி அடையாளம் சொல்வாயே.**

*(சங்கர் - அடியார் கூட்டத்தினை உடையவர். பொங்கம் - பொங்கி வரும் இன்பம். துடி - ஆற்றல்; துடிதுடிப்பு.)*

## 34. சிங்கியின் அங்க அடையாளம்

*கறுப்பு நிறத்திலே ஓர் அழகியடா, அப்பனே! என் சிங்கி. கறுப்பு நிறமானாலும் அவள் ஒப்பற்ற அழகியடா! ஆனால், காமத்தை எழுப்பித் தன்பால் ஆடவரை வசப்படுத்துவதிலே மிகுதியான ஆற்றலுடையவள். அவளை அடைந்தால் மிகுந்த இன்பம் தந்து மகிழ்விப்பவள்.*

*அவளுடைய கண்கள் இரண்டும் அம்புக்கணை களைப் போல நீண்டிருக்கும். ஒரு கையத்தனை அகலமாகத் தோன்றுமடா! பெண்களையும் மயக்குவது அவளுடைய விரகப்பார்வை. என் சிங்கி பிடித்தால் மன்மதன் என்ற பயலும் தாங்குவானோ? அவனும் அவளுக்கு அடிமையாகி விடுவானே!*

*அவளுடைய புன் சிரிப்பும், முக லாவண்யமும், அவள் கைவீசிச் செல்லும் அந்த அழகும், காமப் பகைவர்களான முனிவர்களும் திரும்பித் திரும்பிப் பார்ப்பார்களேயடா! மொத்தமாகத் தொகுத்துச் சொன்னேன். இனிச் சொல்லக் கூடாத வகையிலே ஒரு வகையாய் வருகுதே! என்னை அப்படியே மயக்குதே அப்பனே!*

*ஆனேற்றி லேறிவரும் திருவுலாவினை உடையவரான திருக்குற்றால நாதரின் சடையிலே விளங்கும் இளம் பிறையினைப் போலே விளங்கும் ஒப்பற்ற நெற்றியினை உடையவள். அவளுடைய நடையின் அழகும், துடைகளின் அழகும், அவள் உடுத்தும் உடையின் அழகும், ஐயோ! என் கண்முன் தோன்றித் தோன்றி என்னை உருக்குதே அப்பனே!*

**இராகம் - பியாகடை** **தாளம் - மிசுரம்**

**பல்லவி**

**கறுப்பில் அழகியடா! என் சிங்கி**
**கறுப்பில் அழகியடா**

**அனுபல்லவி**

கறுப்பி லழகி காமச் சுறுக்கில்
மிகுந்த சிங்கி - சுகக்காரி (கறுப்)

**சரணங்கள்**

கண்க ளிரண்டும் அம்புக் கணைபோல் நீண்டிருக்கும்
கையத் தனையகலம் காணுமடா
பெண்கள் மயக்குமவள் விரகப்பார்வை சிங்கி
பிடித்தால் மதப்பயலும் பெலப்பானோ (கறுப்)
நகையும் முகமும் அவள் நாணயக் கைவீச்சும்
பகைவருந் திரும்பிப் பார்ப்பாரடா
தொகையாய்ச் சொன்னேனினிச் சொல்லக்கூடாதொரு
வகையாய் வருகுதென்னை மயக்குதையே (கறுப்)
விடையில் வரும்பவனி உடையார் திருக்குற்றாலர்
சடையில் இளம்பிறைபோல் தனிநுதலாள்
நடையில் அழகும்இரு துடையில் அழகும்அவள்
உடையில் அழகுமென்னை உருக்குதையோ (கறுப்)
*(அம்புக்கணை - அம்புகள்)*

## 35. என்னடா கூலி?

*ஒன்றோடொன்று தொடர்புடையனவாக அந்தரத்திலே நிற்கின்ற அண்டங்களையெல்லாம் சாட்டையில்லாத பம்பரத்தைப் போல ஆட்டுவிக்கும் இறையவர், குற்றால நாதராகிய தண்ணளியை உடைய பெருமானார். அவருடைய நன்னாடான இத் திரிகூட நாட்டிலே எல்லோருக்கும் காட்டிக்கொண்டிருக்கும் உன்னுடைய மோகமாகிய துன்பம் தீரும்படியாக, உன் சிங்கியைத் தேடி உன்னுடன் சேர்த்துவைக்கும் பேர்களுக்கு என்னடா கூலி தருவாய்? அதைச் சொல்வாயடா.*

**கொச்சகக் கலிப்பா**

சாட்டிநிற்கும் அண்டமெலாம் சாட்டையிலாப் பம்பரம்போல்
ஆட்டுவிக்கும் குற்றாலத் தண்ணலார் நன்னாட்டிற்

காட்டுவிக்கும் உன்மோகக் கண்மாயச் சிங்கிதனைக்
கூட்டுவிக்கும் பேர்களுக்குக் கூலியென்ன சொல்வாயே.

*(தண்ணலார் - தண்ணளியினையுடையவர். கண் - துன்பம். மோகக் கண் மாயச் சிங்கி - மோகத்தை விளைத்த கண்களையுடைய மாயத்தையுடைய சிங்கியும் ஆம்.)*

## 36. எல்லாம் தருவேனடா!

*வாடை மருந்துப் பொடியும், அம்மியிலேறி ஊர்ந்து வரும் மரப்பாவையுங்கூடப் பின்தொடர்ந்து வரச்செய்யும் மாயப் பொடியும், பிரிந்தவர் கூடியிருப்பதற்கான மருந்தும், இருபொழுதும் பிரியாமல் கூடியிருப்பவர்களைக் கலைப்பதற்கான மருந்தும், காடு கட்டும் வித்தையும், நெருப்பைக் கட்டும் வித்தையும், குறளிவித்தை, கண்கட்டு வித்தைகளும் எல்லாம் நினக்குக் காட்டித் தருவேன். விநோதமான காமனுக்குரிய ரதிதேவியைப் போலே இத் திரிகூடமலைச் சாரலிலே உள்ளவளான என் சிங்கியைக் காட்டுவாயாக, அப்பனே!*

*மலைகளையும் கரைந்து ஓடும்படியாகச் செய்வேன். குமரிப் பெண்களுக்கு முகிழ்த்து வராத முலைகளையும் முகிழ்த்து வருமாறு பண்ணுவேன். வந்திருக்கும் முலைகளை மறைந்து போகவும் செய்வேன். ஒளிந்துவிட்ட பேர்களுக்கு மோகினி மந்திரத்தைச் சொல்லி மீண்டும் வெளிப்படவும் செய்வேன். பொட்டிட்டு வசீகரம் செய்வேன். ஒருவருக்கும் தெரியாமல் போகவும் வரவும் கூடிய சித்துகளையெல்லாம் அறிவேன். கலகக்காரனாகிய மதனப் பயலை என்மேலே கண்காட்டிவிட்ட என் சிங்கியை மட்டும் எனக்குக் காட்டுவாயாக அப்பனே!*

இராகம் - தர்பார் தாளம் - ரூபகம்

**கண்ணிகள்**

வாடை மருந்துப் பொடியும் அம்மியூர்
மரப்பாவை பின்தொடர மாயப்பொடியும்
கூடியிருக்க மருந்தும் இருபொழுதும்
கூடியிருப் பார்களைக் கலைக்க மருந்தும்

காடுகட்டுக் கினிக்கட்டு குறளி வித்தை
கண்கட்டு வித்தைகளும் காட்டித் தருவேன்
வேடிக்கைக் காமரதிபோல் திரிகூட
வெற்பிலுறை சிங்கிதனைக் காட்டாய் ஐயே! 1
மலையைக் கரையப் பண்ணுவேன் குமரிகட்கு
வாராத முலைகளும் வரப்பண் ணுவேன்
முலையை ஒளிக்கப் பண்ணுவேன் ஒளித்தபோர்க்கு
மோகினி மந்திரஞ் சொல்லி வரப்பண்ணுவேன்
திலக வசீகரம் செய்வேன் ஒருவருக்கும்
தெரியாமற் போகவரச்சித்தும் அறிவேன்
கலகமத னப்பயலை என்மேற்கண்
காட்டிவிட்ட சிங்கிதனைக் காட்டாய் ஐயே! 2

*(அம்மியூர் மரப்பாவை பின்தொடர - அம்மிகள் ஊர்ந்து வரவும், மரப்பாவையானது பின் தொடர்ந்து வரவும். கினிக்கட்டு - நெருப்பைக் கட்டும் மந்திரம். திலக வசீகரம் - வசியப் பொட்டு இட்டுச் செய்யும் வசியங்கள்.)*

## 37. நூவன் பரிகசித்தல்

*திரிகூடமலையிலே வந்துள்ள சிங்கனே! நீ போகும் மார்க்கத்தை நான் கடத்தி விட்டுவிட்டேனானால், ஆகாச மார்க்கமாகத் தப்பியோடுவதற்கு நீ தெளிவான வித்தைகளை அறிவாயோடா? நீ சொன்ன உன் மருந்துகளைப் போலவே சகலருக்கும் குறிகள் சொல்லிக் கொண்டும், நீ போற்றும் உன்னுடைய சிங்கியானவள் போன புதுத் தெரு இதுதான், பார்த்துக் கொள்வாயாக.*

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

ஆற்றைநான் கடத்தி விட்டால்
ஆகாச மார்க்கம் ஓடத்
தேற்றநீ அறிவாய் கொல்லோ
திரிகூட மலையிற் சிங்கா!
சாற்றுமுன் மருந்து போலச்
சகலர்க்கும் குறிகள் சொல்லிப்

போற்றுமுன் சிங்கி போன
புதுத்தெரு இதுகண் டாயே.

*(ஆறு - செல்லும் வழி. கடத்தி விடுதல் - வழி கடத்தல். தேற்ற - தெளிவாக.)*

## 38. எங்கே போனாளோ?

*எங்கேதான் போனாளோ அப்பனே! என் சிங்கி! இப்போது எங்கேதான் போனாளோ அப்பனே! எலும்பாபரணம் அணிந்தவர் திரிகூடத்து இறைவன்; அவருடைய நாட்டிலே அவள் எங்கேதான் போனாளோ அப்பனே!*

*அவன் மதனவேளேயானாலும் அவனையும் மயக்கங்கொள்ளச் செய்பவள். எவனையும் வலியத் தட்டி அழைத்து அவனைக் கேளாமலேயே அவனைத் தழுவுபவள். ஆளாய், அழகனுமாய் எவனை எங்கே கண்டாளோ? ஆண்களுடைய தோளுக்கு ஆசைப்பட்ட சிங்கி கண்டால் சும்மா கிடக்க மாட்டாளே? ஐயோ! அவள் இப்போது எங்கேதான் போனாளோ? உண்மையாகப் பலிக்கும் குறிகளைச் சொல்லி எவ்விடத்திலும் வெற்றிக்கொடி நாட்டுவாளே! மனத்திலே நினைத்த குறிப்புகளையும் கண்டு சொல்லுவாளே! அவள் குறியின் சிறப்போ ஒரு திசைக்குள் அடங்காது. அவளுடைய பேச்சின் இனிமையோ கருப்பஞ் சாற்றிலும் அடங்காது. அவள் விழிப் பார்வையோ இட்ட மைக்குள்ளும் அடங்காதது. என் கைக்குள் அடங்காத அந்தக் கள்ளி இப்போது எங்கே தான் போனாளோ?*

*சித்திர சபையிலே நடனமிடும் ஈசரின் மேலேயும், சிவ சமயத்தினிடத்தேயும் பக்தியில்லாமல் திரிகின்ற பேயர்களைப் போலே, புட்டியிலே அடைத்து வைத்திருக்கும் சாராயத்தையும், பனங்கள்ளையும், குடுவையிலே வைத்துள்ள தென்னங்கள்ளையும் அவ்வளவையும் குடித்துப் போட்டு, அந்த வெறியிலே யார் பின்னாலே அவள் போனாளோ? என் சிங்கி இப்போது எங்கேதான் போனாளோ?*

இராகம் - முகாரி தாளம் - ஆதி

**பல்லவி**

எங்கேதான் போனாள் ஐயே! என்சிங்கி இப்போது
எங்கேதான் போனாள் ஐயே!

**அனுபல்லவி**

கங்காளர் திரிகூடக் கர்த்தர்திரு நாடுதன்னில் (எ)

**சரணங்கள்**

வேளா கிலுமயக்குவள் வலியத் தட்டிக்
கேளா மலுமு யக்குவள்
ஆளாய் அழகனுமாய் யாரையெங்கே கண்டாளோ
தோளாசைக் காரிசிங்கி சும்மா கிடக்கமாட்டாள் (எ)
மெய்க்குறியால் எங்கும் வெல்லுவள் மனக்குறியும்
கைக்குறியும் கண்டு சொல்லுவள்
திக்கிலடங் காதுகுறி இக்கிலடங் காதுமொழி
மைக்குளடங் காதுவிழி கைக்குளடங் காதகள்ளி (எ)
சித்திரச பேசர்மேலே சிவசமயப்
பத்தியில்லாப் பேயர் போலே
குத்தியில் அரக்கும்கள்ளும் குடுவையில் தென்னங்கள்ளும்
அத்தனையும் குடித்துப்போட் டார்பிறகே
தொடர்ந்தாளோ? (எ)

*(கங்காளர் - எலும்பு மாலையணிந்தவர். வேள் - மதனவேள். குத்தி - குப்பி. அரக்கு - சாராயம்.)*

## 39. சிங்கியைக் காணுதல்

*ஆண்மையினனாயிருந்தும் பெண்களைப்போலத் தன் விரக வேதனையினால் தளர்ந்துபோன சிங்கன், தாம் பூணும் அணியாகப் பாம்புகளை அணிபவரின், தேவலோகத்தைப் போன்றதான நல்ல குற்றாலநாதரின் பெருமைமிக்க பெருந் தெருவிலே அவளைக் கண்டான். 'தேடிய பொருளைக் காணாமற் போக்கடித்துவிட்டு, அதனால் வருந்தி வாடியவர் பின்னர், அதனைக் கண்டெடுத்தது போலப்' பெரிதும் மகிழ்ச்சி கொண்டான்.*

**கொச்சகக் கலிப்பா**

ஆணாகிப் பெண்விரகம் ஆற்றாமற் போனசிங்கன்
பூணாகப் பாம்பணிவார் பொன்னகர்சூழ் நன்னகரின்
சேணார் பெருந்தெருவிற் சிங்கியைமுன் தேடிவைத்துக்
காணாமற் போனபொருள் கண்டவர்போற் கண்டானே.

*(பொன்னகர் - தேவலோகம். சூழ்தல் - நினைத்தல். சேண் - நெடிய.)*

## 40. இருவரின் சந்திப்பு

*குளிர்ச்சி வாய்ந்த சந்திரனைச் சடையிலே சூடியவர் குற்றாலநாதர். அவருடைய திருநாட்டிலே சிங்கன் சிங்கி யாகிய இருவரும் தம்முள் கண்ட போது கடலானது பெருகிக் கட்டுக்கடங்காமற் போகும்போது, இடையிலே கரையானது நின்று தடுத்துக் காப்பதுபோல, அவர்களுடைய கட்டுக் கடங்காத காதலால் ஒன்று சேர விரையும் போது, தெருவின் நினைவு வந்து குறுக்கிட்டு, அவர்கள் ஆர்வத்தைத் தடுத்து நின்றது. அதனால் வெட்கங்கொண்டவளாகி நின்ற குறும்புப் பேச்சுக்காரியான சிங்கியைக் கண்ட சிங்கனும், தமயந்தி யிடத்திலே, தூது சென்ற நளனைப் போல மயங்கி நின்றான். சிங்கியும் கன்னி மாடத்திலே விளங்கிய தமயந்தியைப் போன்றவளாயினாள்.*

**எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

சீதமதி புனைந்தவர்குற் றாலநாதர்
    திருநாட்டில் இருவருந்தாங் கண்ட போது
காதலெனும் கடல்பெருகித் தரிகொள் ளாமற்
    கைகலக்கும் போதுகரை குறுக்கிட் டாற்போல்
வீதிவந்து குறுக்கிடவே நாணம் பூண்ட
    விண்ணாணச் சிங்கிதனைக் கண்டு சிங்கன்
தூதுவந்த நளனானான் கன்னி மாடந்
    துலங்குதம யந்தியவ ளாயி னாளே.

*(சீதம் - குளிர்ச்சி. கைகலக்கும்போது - ஒன்று சேரும் போது.)*

## 41. சிங்கன் அழைத்தல்

இங்கே வருவாயடி. என் கண்ணே! இங்கே வருவாயடி. இங்கே வந்து, மலர்போன்ற நின் சிவந்த கையினைத் தருவாயாக. என்னுடைய மோகவாதையினைத் தொட்டுக் காண்பாயாக. என் காமச் சிங்கியே இங்கே வருவாயாடி!

நின் பாதம் நோகுமே. நொந்தால் என் மனம் வருந்துமே. இனியும் நின் பாதம் நோக்குமாறு நிற்பது எதனாலோ? இனியும் பொறுத்திருப்பது பாவம். என் குளிரோ கொடியது. ஆனால் என் காதலோ உறுதியானது, அதனால் இங்கே வருவாயடீ!

பாவியான மதனனும் கணைகளை ஏவினான். சோலையிலே மாமரத்துக் குயில்கள் கூவக் கூவ, உன்னைத் தழுவித் தழுவி அணைத்துக் கொள்ள வேண்டுமென்று என் ஆவியும் சேர்கின்றது. அதனால், இங்கே வருவாயாக!

குறும்பலாவினடியிலே வீற்றிருப்பவரும், வடஅருவி யினை உடைய திருக்குற்றால நகரிலே எழுந்தருளியிருப்ப வருமான திருக் குற்றாலநாதரின் பெருமைகளைப் பாடிக் கொள்ளலாம். மணமலர்களைச் சூடிக் கொள்ளலாம். ஒரு சமயம் ஊடிக் கொள்ளலாம். அதற்கு ஈடாக இரண்டு பங்கு கூடியும் கொள்ளலாம். என் கண்ணே! இங்கே வருவாயடீ!

**இராகம் - எதுகுலகாம்போதி** **தாளம் - சாப்பு**

**பல்லவி**

**இங்கே வாராய்! என் கண்ணே!**
**இங்கே வாராய்**

**அனுபல்லவி**

**இங்கே வாராய் மலர்ச் சங்கை தாராய் மோகச்**
**சங்கை பாராய் காமச் சிங்கியாரே. (இங்)**

**சரணங்கள்**

**பாதம் நோமே நொந்தால் மனம் பேதமாமே**
**பாதநோக நிற்ப தேது பாவமினிக்**

கூதலோ கொடிது காதலோ கடினம் (இங்)
பாவிதானே மதன்கணை ஏவினானே
காவில் மாங்குயில்கள் கூவிக்கூவியென
தாவி சோருதுனை ஆவி ஆவிக் கட்ட (இங்)
வருக்கை மூலர்வட அருவித் திருக்குற்றாலர்
பெருக்கம் பாடிக்கொள்ள மருக்கள் சூடிக்கொள்ள
ஒருக்கால் ஊடிக்கொள்ள இருக்கால் கூடிக்கொள்ள (இங்)

*(கூதல் - வாடை. கா-சோலை. பெருக்கம் - பெருமைகள்.)*

## 42. சிங்கன் கூத்தாடினான்

*தமக்குத் திருத்தொண்டு புரிந்தவரான சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் தோழரானவர் சிவபெருமான். அவருடைய திரிகூட மலைச்சாரலிலே தன் சிங்கியைக் காணாது திண்டாடி நின்ற சிங்கன், தன்னுடன் காதல் கனியப் பேசுகின்ற தன் சிங்கியைக் கண்டதும் ஆடினான். துள்ளிக்குதித்தான். மலரிலே தேன் உறிஞ்சுகின்ற வண்டினைப் போல, அவளை மீண்டும் மீண்டும் கொண்டாடிக் கொண்டாடிக் கூத்தாடிக் கொண்டிருப்பானுமாயினான்.*

### கொச்சகக் கலிப்பா

தொண்டாடும் சுந்தரர்க்குத் தோழர்திரி கூடவெற்பில்
திண்டாடி நின்றசிங்கன் சீராடும் சிங்கிதனைக்
கண்டாடித் துள்ளாடிக் கள்ளாடும் தும்பியைப்போல்
கொண்டாடிக் கொண்டாடிக் கூத்தாடிக் கொண்டானே.

## 43. சிங்கன் சிங்கி உரையாடல்

*இத்தனை நாளாக என்னுடன் சொல்லாமல் எங்கேடீ நடந்து விட்டாய் சிங்கி? பூங்கொத்துகள் அணிந்துள்ள கூந்தலினையுடைய பெண்களுக்கு விஸ்தாரமாகக் குறி சொல்லப் போனேனடா சிங்கா!*

*உன்னைப் பார்க்கும்போது ஒரே அதிசயமாகத் தோன்றுகிறது. ஆனால் சொல்லவும் பயமாக இருக்குதடி சிங்கி! யாருக்கும் பயமில்லை! தோணின் காரியத்தைப் பயப்படாமல் சொல்லடா சிங்கா!*

உன் காலுக்கு மேலாகப் பெரிய விரியன் பாம்பு சுடித்துக் கொண்டு கிடப்பதேனடீ சிங்கி? சேலத்து நாட்டிலே குறிசொல்லிப் பெற்ற சிலம்பு கிடக்குதடா சிங்கா!

சேலத்தார் இட்ட அந்தச் சிலம்புக்கு மேலாக, என்னவோ திருகலும் முறுகலுமா யிருக்கிறதே அது என்னடி சிங்கி! அது கலிங்க நாடார் எனக்கு வரிசையாகக் கொடுத்த முறுக்கிட்ட தண்டையடா சிங்கா!

நீண்டும் குறுகியும் நாங்கூழ்ப் புழுவைப் போல நெளிந்த நெளிவு என்னடி சிங்கி? அது பாண்டியனார் மகள் விரும்பிக் கேட்ட குறிகளுக்காக இட்ட பாடகமடா சிங்கா!

செத்த தவளையை உன் காலிலே கட்டியிருக்கிறாயே அதற்குக் காரணம் ஏது பெண்ணே சிங்கி? ஆண்டவர் குற்றாலருடைய சந்நிதிப் பெண்கள் எனக்கு அணிவித்த மணிக்கெச்சமடா சிங்கா!

உன் சுண்டு விரலிலே குண்டலப் பூச்சி சுருண்டு கிடப்பானேன் சிங்கி? கண்டிய நாட்டிலே முன்பு நான் குறி சொல்லிப் பெற்ற காலாழியும் பீலியும் அவையடா சிங்கா!

மென்மையான அழகிய நின் துடைகளின்மேல் வாழைக் குருத்தை இப்படி விரித்து மடித்து வைத்தது யார் சிங்கி? திருநெல்வேலி யார் தந்த கல்லாச் சேலை அது. அதனை நான் நெறிபிடித்து உடுத்திருக்கிறேன் சிங்கா!

உன் துடைகளுக்கு மேற்புறத்திலே உயர்ந்த அரசிலையின் மேலே சாரைப் பாம்பு போலக் கிடப்பது ஏதடி பெண்ணே சிங்கி? சிறப்புமிக்க சோழ ராசனின் குமாரத்தியார் தந்த செம்பொன் அரைஞாணடா சிங்கா!

நின் மார்பிற்குப் புடைத்த சிலந்தி போன்ற நின் கொங் கைகளின் மேல் கொப்புளங்கள் காணப்படுவதேனடீ சிங்கி? உலகுக்குள்ளே சிறப்புடைய காயற்பட்டினத்தார் தந்த பெரிய முத்தாரமடா அது, சிங்கா!

எட்டுப் பறவைகள் குமுறுவது போன்ற குரல் ஒலிக்கும், கமுகுபோன்ற நின் கழுத்திலே பத்து எட்டுப் பாம்புகள்

*கிடக்கின்றனவே! அவை ஏதடி சிங்கி? குட்டத்து நாட்டாரும் காயங்குளத்தாரும் இட்ட சவடியடா அது, சிங்கா!*

இராகம் - தன்யாசி தாளம் - ஆதி

**கண்ணிகள்**

இத்தனை நாளாக என்னுடன் சொல்லாமல்
எங்கே நடந்தாய் நீ சிங்கி? (எங்கே நடந்தாய் நீ)
கொத்தார் குழலார்க்கு வித்தார மாகக்
குறிசொல்லப் போனனடா சிங்கா! (குறிசொல்லப்)
பார்க்கில் அதிசயந் தோணுது சொல்லப்
பயமா இருக்குதடி சிங்கி! (பயமா)
ஆர்க்கும் பயமில்லை தோணின காரியம்
அஞ்சாமற் சொல்லடா சிங்கா! (அஞ்சா)
காலுக்கு மேலே பெரிய விரியன்
கடித்துக் கிடப்பானேன் சிங்கி? (கடித்து)
சேலத்து நாட்டிற் குறிசொல்லிப் பெற்ற
சிலம்பு கிடக்குதடா சிங்கா! (சிலம்பு)
சேலத்தார் இட்ட சிலம்புக்கு மேலே
திருகு முறுகென்னடி சிங்கி! (திருகு)
கோலத்து நாட்டார் முறுக்கிட்ட தண்டை
கொடுத்த வரிசையடா சிங்கா! (கொடுத்த)
நீண்டு குறுகியும் நாங்கூழுப் போல
நெளிந்த நெளிவென்னடி சிங்கி? (நெளிந்த)
பாண்டிய னார்மகள் வேண்டும் குறிக்காகப்
பாடக மிட்டதடா சிங்கா! (பாடக)
மாண்ட தவளையுன் காலிலே கட்டிய
மார்க்கம தேதுபெண்ணே சிங்கி! (மார்க்க)
ஆண்டவர் குற்றாலர் சந்நிதிப் பெண்கள்
அணிமணிக் கெச்சமடா சிங்கா (அணிமணிக்)
சுண்டு விரலிலே குண்டலப் பூச்சி
சுருண்டு கிடப்பானேன் சிங்கி? (சுருண்டு)

கண்டிய தேசத்திற் பாண்டுநான் பெற்ற
காலாழி பீலியடா சிங்கா! (காலாழி)
மெல்லிய பூந்தொடை வாழைக் குருத்தை
விரித்து மடித்ததார் சிங்கி? (விரித்து)
நெல்வேலி யார்தந்த சல்லடைச் சேலை
நெறிபிடித் துடுத்தினேன் சிங்கா! (நெறிபிடித்)
ஊருக்கு மேற்கே உயர்ந்த அரசிலே
சாரைப்பாம் பேது பெண்ணே சிங்கி? (சாரைப்)
சீர்பெற்ற சோழன் குமாரத்தி யார்தந்த
செம்பொன் அரைஞாணடா சிங்கா! (செம்பொன்)
மார்பிற்கு மேலேபுடைத்த சிலந்தியில்
கொப்புளம் கொள்வானேன் சிங்கி? (கொப்பு)
பாருக்குள் ஏற்றமாம் காயலார் தந்த
பாரமுத் தாரமடா சிங்கா! (பார)
எட்டுப் பறவை குமுறும் கமுகிலே
பத்தெட்டுப் பாம்பேதடி சிங்கி! (பத்தெ)
குட்டத்து நாட்டாரும் காயங் குளத்தாரும்
இட்ட சவடியடா சிங்கா! (இட்ட)

*(இந்தப் பாட்டிலே வஞ்சியின் நகைகள் பலவற்றையும் குறவன் கண்டு அதிசயித்த வகையும், அதற்கு அவள் சொன்ன பதிலையும் காணலாம். இதே முறையில் அமைந்ததே அடுத்த பாட்டும்.)*

## 44. ஏனடீ சிங்கி?

*வள்ளிக் கொடியிலே துத்திப்பூப் பூப்பது ஏனடீ சிங்கி? காதிலே வங்காளத் தாரிட்ட சிங்காரமான கொப்பு என்னும் நகையடா அது சிங்கா. அதன்மேல் கள்ளிப்பூப் பூத்திருப்பது வியப்புக்கு உரியதல்லவோ சிங்கி? அது தெற்கு வள்ளியூரார் தந்த மாணிக்கத் தண்டொட்டியடா சிங்கா! வன்னக் குமிழ மலர் போன்ற உன் நாசியிலே புன்னை அரும்பு இருப்பதேது சிங்கி? அது நம் நாட்டின் முத்துச்சலாபத்திலே கிடைத்த முத்தினால் செய்த முத்து மூக்குத்தியடா சிங்கா. சொருகி*

முடித்த உன் கூந்தலிலே தூக்கணங்குருவிக் கூடுபோலத் தொங்குவது என்னடி சிங்கி? தென் குருகை யூரார் தந்த குப்பியும் தொங்கலுமடா அது சிங்கா! பொன்னை இட்டு வைத்தாற் போல விளங்கும் உன் மேனி எல்லாம் மின்னலைப் போல விட்டு விட்ட ஒளி வீசுகிறதே. அஃது என்னடி? இந்த அழகான நகைகளிலே பதிந்துள்ள மாணிக்கக் கற்களடா அவை.

இந்த நகைகள் எல்லாம் அணிந்தால் உன் உடல் தாங்குமோ சிங்கி? இந்த உலகத்திலே ஈசர்க்கும் மங்கையர் களுக்கும் எல்லாம் பொறுக்கக் கூடியதுதானடா சிங்கா! குன்றத்தைப் போன்ற நின் கொங்கைகளைப் பார்த்தால் உன் கொடி போன்ற இடை தாங்குமோடி சிங்கி? தன் கொடிக்குச் சுரைக்காய் கனத்துக் கிடக்குமோடா சிங்கா. இதற்கு முன் இல்லாத சுற்றெல்லாம் எங்கேடி நீ படித்தாய் சிங்கி? நாட்டிலுள்ள பெண்களைக் காண்பவர்களுக்கு இவை எல்லாம் எளிதிலே வந்துவிடுமடா சிங்கா. பெட்டகத்துப் பாம்புபோல விளங்கும் நின் கடிதடத்தைப் பற்றி ஆட்டி மகிழவேண்டாமோ சிங்கி? இந்த வெட்ட வெளியிலே பெட்டிப் பாம்பு. அதிலும் நல்ல சாதிப்பாம்பு ஆடுமோடா சிங்கா? உன்னை அப்படியே கட்டி அணைத்துக் கெண்டு முத்தங் கொடுக்கட்டுமோ சிங்கி? நடுப்பட்டப் பகலிலே நான் உன்னிடம் நெருங்கி வந்து முத்தங் கொடுப்பேனோடா சிங்கா!

என்னை மோதுவதற்கு அமைந்த நின் கொங்கை களாகிய யானைகளை மோதட்டுமோ சிங்கி? உன் காமவெறி தணியா விட்டால் மண்ணோடே கிடந்து முட்டடா சிங்கா. உன் சேலை உடையைச் சிறிதே நெகிழ்ந்து விடட்டுமா சிங்கி? சும்மா நாலுபேர் முன்னிலையிலே என்னை நாணங் குலையாதேடா சிங்கா. உன் பாதங்களை வருடி உன் துடையிலே தாடனங்கள் செய்ய வேண்டாமோ சிங்கி? உன் மன மயக்கத்தை வருடிக்கொண்டே போய்ப் பூனையைக் குத்திப் பிடியடா சிங்கா. உன்னுடைய நல்ல வாயிதழ்களைச் சுவைப்பதற்கு என் நாக்குத் துடிக்குதடி சிங்கி! உன் வாய்க்கு ருசியானது மயக்கந்தரும் கள் அல்லவோடா சிங்கா.

*நாம் இரண்டுபேரும் ஒன்றிப் படுத்துக்கிடப்பதற்கு ஒதுக்கான இடத்தைப் பார்க்கட்டுமோ சிங்கி! பெரிய கொக்குகளாகப் பிடிப்பதற்குத் தக்க இடத்தைப்போய்ப் பாரடா சிங்கா. விந்தைக்காரியான உன்னைப் பேச்சிலே வெல்ல முடியாதடி சிங்கி. அதில் சந்தேகமோ? உன் தலைப் பேனைக் கேளடா; அது சொல்லுமே சிங்கா. இந்தத் தென்னாடெல்லாம் உன்னைத் தேடித் தேடி அலைந்தேனே சிங்கி. அப்புறம் இந்த நாட்டில் வந்து என்னை எப்படிக் கண்டுபிடித்தாய் சிங்கா? நன்னகருக்கு இறைவரான குற்றாலநாதரை வேண்டிக்கொண்டேன் சிங்கி. மணிகளையுடைய பாம்புகளை ஆபரணமாகப் பூண்ட அவரைப் பாடிக் கொள்வோமடா சிங்கா. பாடிக் கொள்வது எவர்? ஆடிக்கொள்வது எவரடி சிங்கி? நீ பாடிக்கொண்டால் போதும்! நான் ஆடிக்கொள்வேனடா சிங்கா. அதனைப் பார்க்க இந்தப் பாவியேனுடைய ஆவி பொறுக்குமோடி சிங்கி! முன்னே ஆக்கப் பொறுத்துக் கொண்டிருந்தவர்கள் ஆறும்வரையும் பொறுத்திருக்க மாட்டார்களோ சிங்கா!*

**இராகம் - புன்னாகவராளி** **தாளம் - ஆதி**

**கண்ணிகள்**

வள்ளிக் கொடியிலே துத்திப்பூப்
　　பூப்பானேன் சிங்கி! காதில்
வங்காளத் தாரிட்ட சிங்காரக்
　　கொப்படா சிங்கா!

கள்ளிப்பூப் பூத்தது அதிசயம்
　　அல்லவோ சிங்கி! தெற்கு
வள்ளியூ ரார்தந்த மாணிக்கத்
　　தண்டொட்டி சிங்கா! 2

வன்னக் குமிழிலே புன்னை
　　அரும்பேது சிங்கி! மண்ணில்
முந்நீர்ச் சலாபத்து முத்துமூக்
　　குத்திகாண் சிங்கா! 3

சொருகி முடித்ததில் தூக்கணம்
ஏதடி சிங்கி! தென்
குருகையூ ரார்தந்த குப்பியும்
தொங்கலும் சிங்கா! 4

பொன்னிட்ட மேலெல்லாம் மின்வெட்டிப்
பார்ப்பானேன் சிங்கி! இந்த
வன்னப் பணிகளின் மாணிக்கக்
கல்லடா சிங்கா! 5

இந்தப் பணியைநீ பூணப்
பொறுக்குமோ சிங்கி! பூவில்
ஈசர்க்கும் நல்லார்க்கும் எல்லாம்
பொறுக் குங்காண் சிங்கா! 6

குன்றத்தைப் பார்த்தால் கொடியிடை
தாங்குமோ சிங்கி! தன்
கொடிக்குச் சுரைக்காய் கனத்துக்
கிடக்குமோ சிங்கா! 7

இல்லாத சுற்றெல்லாம் எங்கே
படித்தாய் நீ சிங்கி! நாட்டில்
நல்லாரைக்காண்பவர்க் கெல்லாம்
வருமடா சிங்கா! 8

பெட்டகப் பாம்பைப் பிடித்தாட்ட
வேண்டாமோ சிங்கி? இந்த
வெட்டவெளியிலே கோடிப்பாம்
பாடுமோ சிங்கா! 9

கட்டிக்கொண் டேசற்றே முத்தம்
கொடுக்கவா சிங்கி! நடுப்
பட்டப் பகலில் நான் எட்டிக்
கொடுப் பேனோசிங்கா! 10

முட்டப்படாமுலை யானையை
முட்டவோ சிங்கி! காமம்

மட்டுப்படாவிடில் மண்ணோடே
முட்டடா சிங்கா! 11
சேலை உடைதனைச் சற்றே
நெகிழ்க்கவோ சிங்கி! சும்மா
நாலுபேர் முன்எனை நாணம்
குலையாதே சிங்கா! 12
பாதம் வருடித் துடைகுத்த
வேண்டாமோ சிங்கி? மனப்
போதம் வருடிப்போய்ப் பூனையைக்
குத்தடா சிங்கா! 13
நாக்குத் துடிக்குதுன் நல்வாய்
இதழுக்குச் சிங்கி! உன்றன்
வாய்க்கு ருசிப்பது மாலைக்கள்
அல்லவோ சிங்கா! 14
ஒக்கப் படுக்க ஒதுக்கிடம்
பார்க்கவோ சிங்கி! பருங்
கொடுக்குப் படுக்கக் குறியிடம்
பாரடா சிங்கா! 15
விந்தைக் காரியுன்னை வெல்லக்கூ
டாதடி சிங்கி! அது
சந்தேக மோவுன் தலைப்பேனைக்
கேளடா சிங்கா! 16
தென்னாடெல் லாமுன்னைத் தேடித்
திரிந்தேனே சிங்கி! அப்பால்
இந்நாட்டில் வந்தென்னை எப்படி
நீகண்டாய் சிங்கா? 17
நன்னகர்க் குற்றால நாதரை
வேண்டினேன் சிங்கி! மணிப்
பன்னகம் பூண்டாரைப் பாடிக்கொள்
வோமடா சிங்கா! 18

பாடிக்கொள் வாரெவர் ஆடிக்கொள்
வாரெவர் சிங்கி! நீதான்
பாடிக்கொண் டாற்போதும் ஆடிக்கொள்
வேணடா சிங்கா! 19

பார்க்கப் பொறுக்குமோ பாவியேன்
ஆவிதான் சிங்கி! முன்னே
ஆக்கப் பொறுத்தவர் ஆறப்
பொறார்களோ சிங்கா! 20

## 45. வாழ்த்து

*புலவர்களே! சுற்றாத ஊர்கள்தோறும் போய் வீணாகச் சுற்றிக்கொண்டே இருக்கவேண்டாம். 'குற்றாலம்' என்று ஒருமுறை நீங்கள் மன ஒருமையுடன் சொல்வீர்களே யானால், வற்றாத வட வருவியினை உடைய அவனே, மறுபிறவியாகிய சேற்றிலே கிடந்து துயரங்கொள்ள நம்மை மீண்டும் பிறக்குமாறு செய்ய மாட்டான்.*

### நேரிசை வெண்பா

சுற்றாத ஊர்தோறும் சுற்றவேண் டாம்புலவீர்
குற்றாலம் என்றொருகாற் கூறினால் - வற்றா
வடவருவி யானே மறுபிறவிச் சேற்றில்
நடவருவி யானே நமை.

## 46. வாழ்த்துகின்றேன்!

*வெற்றி பொருந்திய மதியணியும் சடையினை உடைய வனை, குறும்பலா மரத்தின் அடியிலே கோவில்கொண்டு எழுந்தருளி இருக்கும் இறையவனை, வெற்றிச் சிறப்புடைய மழுப்படையினை ஏந்தியிருப்பவனை, ஆனேற்றிலே ஊர்ந்து வருபவனை வாழ்த்துகின்றேன்!*

*தனக்கொரு தந்தையில்லாத திருமகனைப் பெரிய மலையரசாகிய இமவானுக்கு மருமகனை, வேதங்கள் முழங்குகின்ற சங்கவீதியினை உடையவனை, வேதியனாகிய சிவபெருமானை வாழ்த்துகின்றேன்!*

யானை முகத்தினையுடைய ஒப்பற்ற கோமானையும், இனிமை செறிந்த இலஞ்சியிலே கோவில்கொண்டிருக்கும் முருகப் பெருமானையும் மைந்தர்கள் என்று பெற்றுள்ள இறையவனை, மறையவனை வாழ்த்துகின்றேன்!

வேள்வித் தீயினிடத்திலே பறிகொடுத்த அழகிய தலைக்கு ஈடாகத், தன் மாமனாகிய தக்கனுக்கு ஆட்டுத் தலையை ஒட்ட வைத்துச் சிறப்புச்செய்த நிலைபெற்ற பெரியோனாகிய இறைவனை வாழ்த்துகின்றேன்!

காமதேவனுக்கும், தாமரை வாசனாகிய பிரம தேவனுக்கும், தேவகன்னியாகிய தெய்வயானைக்கும் மாமன் என்று சொல்லப்படும் அருளாளனாகிய பெருமானை வாழ்த்துகின்றேன்!

நெடிய உலகம் அனைத்தையும் அளந்தவனாகிய நெடியவனாகிய திருமாலும், பிரமனும் தேடுவதற்கு அரியவனாகிய அந்தத் திரிகூடப் பெருமானை யான் வாழ்த்துகின்றேன்!

சித்திரா நதியினது கரையிலே கோவில் கொண் டிருப்பவனை, தேனருவி விழுகின்ற பெருக்கத்தினை யுடையவனை, சித்திர சபையிலே நடனம் இடுகின்றவனை, நிலைபெற்ற குற்றால நாதனை, நான் வாழ்த்துகின்றேன்!

பாம்பணிகளைப் பூண்டவனைப் பக்தர்களை ஆட் கொண்டருளியவனை, என்றும் தாண்டவமாடிக் கொண் டிருப்பவனை, அனைவருக்கும் ஆண்டவனாகிய பெருமானை வாழ்த்துகின்றேன்.

அரி, அயன், அரன் ஆகிய மூன்று கடவுளர்களும் தானேயாகி என்றும் நீங்காது வீற்றிருக்கும் திரிகூட நாதனாகிய மேன்மையாளனைத், திகம்பரனை வாழ்த்து கின்றேன். திகம்பரன் - நிர்வாண நிலையிலேயிருப்பவன்.

சிற்றாற்றங் கரையிலே கோவில் கொண்டிருப்பவனை, திரிகூட மலைக்கு உரிமையுடையவனைக், குற்றால நகரிடத்திலே வீற்றிருப்பவனைத், தட்சிணாமூர்த்தியாக விளங்கிய குருமூர்த்தியை வாழ்த்துகின்றேன்.

*மதயானையின் தோலை உரித்தவனை, மூன்றாம் பிறையினைச் சடையிலே தரித்தவனை, வடவருவித் துறையினை உடைய குற்றாலத்திலே கோவில் கொண்டிருப்பவனை, வேதங்களின் உட்பொருளாகிய இறையவனை வாழ்த்துகின்றேன்.*

*மறைகளை ஆதியிலே அருளிச்செய்த முதல்வனை, அனைத்து உயிர்களுக்கும் முற்பட்டவனை, குழல்வாய் மொழி அம்மையாருடன் சேர்ந்திருக்கும் மன்னவனை வாழ்த்துகின்றேன்.*

**கண்ணிகள்**

கொற்றமதிச் சடையானைக்
குறும்பலா உடையானை
வெற்றி மழுப் படையானை
விடையானை வாழ்த்துகிறேன் 1

தாதையிலாத் திருமகனைத்
தடமலைக்கு மருமகனை
வேதசங்க வீதியனை
வேதியனை வாழ்த்துகிறேன். 2

தந்திமுகத் தொருகோனைத்
தமிழிலஞ்சி முருகோனை
மைந்தரெனும் இறையோனை
மறையோனை வாழ்த்துகிறேன் 3

தீமுகத்திற் பறிகொடுத்த
திருமுடிக்கா ஒருமுடியை
மாமனுக்கு வரிசையிட்ட
மாமனை நான் வாழ்த்துகிறேன். 4

காமனுக்கும் பூமனுக்கும்
கன்னி தெய்வ யானைக்கும்
மாமனென வேபகரும்
வள்ளல்தனை வாழ்த்துகிறேன். 5

நீடுலகெ லாமளந்த
நெடியமாலும் அயனும்
தேடரிய திரிகூடச்
செல்வனையான் வாழ்த்துகிறேன். 6

சித்ரநதி இடத்தானைத்
தேனருவித் தடத்தானைச்
சித்ரசபை நடத்தானைத்
திடத்தானை வாழ்த்துகிறேன். 7

பனகவணி பூண்டவனைப்
பத்தர்களை ஆண்டவனை
அனவரத தாண்டவனை
ஆண்டவனை வாழ்த்துகிறேன். 8

அரிகூட அயனாகி
அரனாகி அகலாத
திரிகூடப் பரம்பரனைத்
திகம்பரனை வாழ்த்துகிறேன். 9

சிற்றாற்றங் கரையானைத்
திரிகூட வரையானைக்
குற்றாலத் துறைவானைக்
குருபரனை வாழ்த்துகிறேன். 10

கடகரியை உரித்தவனைக்
கலைமதியம் தரித்தவனை
வடவருவித் துறையவனை
மறையவனை வாழ்த்துகிறேன். 11

ஆதிமறை சொன்னவனை
அனைத்துயிர்க்கும் முன்னவனை
மாதுகுழல வாய்மொழிசேர்
மன்னவனை வாழ்த்துகிறேன். 12

*(தந்தி - தந்தங்களையுடையது; களிறு. தீமுகம் - யாகத் தீயின் முன்பாக. திகம்பரன் - திக்குகளையே ஆடையாக*

*உடையவன்; நிர்வாணன். ஆதி மறை - ஆதிவேதம். முன்னவன் - முற்பட்ட முதல்வன்.)*

## 47. வாழி நீடூழி!

*'கச்சு' என்றும் பொருந்தியிருக்கின்ற தனபாரங்களை உடையவள் குழல்வாய்மொழி அம்பிகை; அவள் வாழ்க! அவளை மணக்க இறைவன் சூட்டிய மலர்மாலை வாழ்க! திரிகூடத்து மக்கள் அனைவரும் வாழ்க! குறுமுனியாகிய அகத்தியன் முன்னாளிலே சொன்ன பேராகிய குற்றால நாதர் என்னும் திருநாமம் வாழ்க! அரசர்களின் முறை தவறாத செங்கோலாட்சி வாழ்க! நல்ல நகரம் என்ற பெயருடன் சிறப்புற்று விளங்கும் குற்றாலமாகிய ஊரும் வாழ்க! குற்றாலத்தின்பால் அன்புடைய அடியவர்கள் அனைவருமே நீடூழி வாழ்க! வாழ்க!*

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

**வார்வாழும் தனத்திகுழல் வாய்மொழியாம்**
**பிகைவாழி! வதுவை சூட்டும்**
**தார்வாழி! திரிகூடத் தார்வாழி!**
**குறுமுனிவன் தலைநாட் சொன்ன**
**பேர்வாழி! அரசர்கள்செங் கோல்வாழி!**
**நன்னகரப் பேரால் ஓங்கும்**
**ஊர்வாழி! குற்றாலத் தலத்தடியார்**
**வாழிநீ டூழி தானே!**

*(வார் - கச்சு. தனத்தி - தனங்களை உடையவள். வதுவை - மணம். தார் - மாலை. திரிகூடத்தார் - திரிகூடப் பதியினரான வடகரை அரசர்களும் ஆம். 'குறுமுனிவன் தலைநாட் சொன்ன பேர் குற்றவா!' என்பது.)*

**திருக்குற்றாலக் குறவஞ்சி நாடகமும்**
**புலியூர்க் கேசிகன் தெளிவுரையும்**

**முற்றுப்பெற்றன.**

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

— o o o —

# சாரதா பதிப்பகத்தின் இலக்கிய நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | சிலப்பதிகாரம் | 250.00 |
| 2. | மணிமேகலை | 250.00 |
| 3. | யசோதர காவியம் | 150.00 |
| 4. | இராவண காவியம் மூலமும் உரையும் | 300.00 |
| 5. | சூளாமணி | 40.00 |
| 6. | பதிற்றுப்பத்து | 250.00 |
| 7. | கலித்தொகை | 180.00 |
| 8. | பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் | 600.00 |
| 9. | புறநானூறு | 125.00 |
| 10. | குறுந்தொகை நறுமணம் | 150.00 |
| 11. | நீதிக்களஞ்சியம் | 225.00 |
| 12. | திருமந்திரம் உரையுடன் | 500.00 |
| 13. | பன்னிரு திருமுறை வரலாறு (I & II) | 700.00 |
| 14. | திருஅருட்பா (4நூல்கள்) | 1000.00 |
| 15. | திருவாசகம் | 100.00 |
| 16. | மனோன்மணீயம் | 70.00 |
| 17. | திருவருட்பயன் | 60.00 |
| 18. | தமிழ்க் காதல் | 100.00 |
| 19. | மகாபாரதம் | 150.00 |
| 20. | சிறுவர் இலக்கியம் (கா. அப்பாதுரை) | 575.00 |
| 21. | வளையாபதி, குண்டலகேசி | 50.00 |
| 22. | பத்துப்பாட்டு மூலமும் உரையும் | 200.00 |
| 23. | திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும் | 50.00 |
| 24. | கலிங்கத்துப் பரணி மூலமும் உரையும் | 70.00 |
| 25. | நற்றிணை மூலமும் உரையும் | அச்சில் |
| 26. | பரிபாடல் மூலமும் உரையும் | அச்சில் |

மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயர் பாடியருளிய

# திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும்



உரை :

புலியூர்க் கேசிகன்

GO 783




நூல் கிடைக்குமிடம் :



நூலங்காடி...
www.thebookstore.in
e-mail : gowra_09@yahoo.in

கௌரா ஏஜென்ஸீஸ்
10/14. தோப்பு வேங்கடாசலம் தெரு.
திருவல்லிக்கேணி. சென்னை - 5.

ரூ. 50